சிவமயம்.

# முகவுரை.

திருக்கைலாஸபரம்பரையில் ஸந்தாநாசாரிய வர்க்கத்துள் ஸ்ரீஉமாபதி சிவாசாரியஸ்வாமிகள் காருண்ய மேலீட்டினால் லோகோபகாரமாக ஆன்மாக்களது பக்குவபேதங்கட்கியையவருளிச் செய்தனவும் சைவஸித்தாந்த சாஸ்திரங்கள்பதினான்கனுள்வைத்தெண்ணிவருவனவுமாகிய எட்டனுண் முந்தியதாய் வேத சிவாகமாந்தங்களும் அவற்றின் வழியவுமாகிய ஞானநூல்களெல்லாவற்றினுடையவும் ஸித்தாந்த ரஸங்களைக் கற்பவர்க் கெளிதாகும் வண்ணந் திரட்டியருளியதாய் ஸங்கற்பநிராகரணத்துவாதிகளின்கருத்தறிந்துஅவருட் சிவாத்துவித சைவனை முன்னிலைப்படுத்தி "என்றனைவிறைவு மியாவையும் விளங்க வென்றிகொள் கருத்தின் விரும்பினையாயி னதிக் கனையானெனக் கொதித்த லமர்ந்து வெண்ணெயம்பதி திகழ் மெய் கண்டவனரு ளுண்ணிலை யுடையோ னொருவனுரைத்த சிவப்பிரகாசச் செழுந்தமிழுண்மையை யருளுட னாய்ந்துகொள்ளத் திருவருள்வினவ றிருந்திடு மன்றே" என வெடுத்துக்காட்டி யருளியதாய்த் திகழ்வது இச்சிவப்பிரகாச நூல்.

இந்நூலுக்கு முன்னோராற் செய்யப்பட்டவற்றுள் அச்சிற் பதிந்து வெளி வந்தனவும் வாராதனவுமாகிய பலவுரைகளைப் பார்வையிட்டதிலும் நூற்பொருள் இனிது விளங்கப் பெறாது மயங்கி நின்ற தமியேற்குத் திருவுருவமாமலைச்சாரலில்வாழும் ஓர் அடிகள் தமது கடப்பாடாக்கொண்டு தெருட்டியருளிய இவ்வுரை நடுவு நிலைமையை மேற்கொண்டு பயிலப் புகுவோராகிய நல்லறிவாளர்க்குக் கரதலாமலகம் போலுஞ் சிறப்புடைத்தாகலின் எவர்க்கும் உபகார மாக்குவலென வெழுந்த பேராசையே காரணமாகப் புண்ணியவான்களது பொருளுதவியால் மூலத்தோடு அச்சிற் பதிப்பிக்கலாயினேன்.

இவ்வண்ணம் தமியேனது ஆசைவழியே உபகரித்து நின்ற திருவருட்குக் கைம்மாறாக யாண்டும் அவ்வருளினடங்கி நிற்கும்படி அனுக்கிரஹித்தருள வேண்டுமெனச்சிவானுபூதிச் செல்வராகிய மஹான்களை அளவிறந்த வந்தனங்களோடு பிரார்த்திக்கின்றேன்.

இராமலிங்கம்.
திருநாவுக்கரசு ஸ்வாமிகள் மடாலயம்,
திருநெல்வேலி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



உமாபதி சிவமே யுமாபதி சிவமாய்த்
தமாதர வளிக்கத் தமாதர விலதே.

தவஞானத் தவர்பரவு மெய்கண்டார் சந்ததியாய்ச் சரண்பூண்டோரை
நவஞானத் தவரெனவெள் ளாதிரங்கி நாவலர்த்தே னமுதநல்கிப்
பவஞானத் தலைகடக்கப் பதிஞானப் புணையருளிப் பாதுகாக்குஞ்
சிவஞானத் திருமுனிவன் செங்கமலப் பொற்பாதஞ் சிரமேற் கொள்
[வாம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவப்பிரகாசம்.



## அவதாரிகை.

சிவானுபூதிச் செல்வராகிய ஸ்ரீ உமாபதிசிவாசாரியர் தாம்
பெற்றபேறு உலகம் எளிதிற் பெற்றுய்யவேண்டுமென்
னுங் காருண்ய மேலீட்டினால் இந்நூல் செய்
வான் புகுதுங்கால் அஃதினிது முடிதற்கி
டையூறு சிறிதும் அணுகாதென்பதை
யறிந்தவரே யாயினும் ஆன்றோ
ராசாரம் பாதுகாத்தும் மாணாக்
கர்க் கறிவுறுத்தற் பொருட்டும் முதற்
கட்கடவுளைவழிபடுவாராய் அக்கடவுளாற்
பெறப்படும் ஐவகையுபகாரங்களையும் உணர்த்
துவான்றொடங்கி அவற்றுள் வீட்டுநெறியிற்கூட்டுமுப
காரத்தை இச்செய்யுண்முகத்தான் அருளிச்செய்கின்றார்.

## கடவுள் வாழ்த்து.

ஒளியான திருமேனி யுமிழ்தான மிகமேவு
களியார வருமானை கழனாளு மறவாம
லளியாளு மலர்தூவு மடியார்க ளுளமான
வெளியாகும் வலிதாய வினைகூட நினையாவே.

(இதன்பொருள்) அருட்டிருமேனியிற்றேன்றிப் பெருகும் ஆனந்த மதத்தொடும் தியானிப்போரது உள்ளமகிழும்படி பிரஸன்னமாகின்ற யானையாகிய விநாயகப்பெருமானது திருவடியை இடையறாது தியானித்துத் தேன்றதும்பு நாண்மலரால் அர்ச்சித்துவழிபடும் அடியவரதுள்ளம் சிதாகாசமாகப் பொலிவெய்தும். அதனால் ஜீவதந்திர வலியைக் கடந்தெதிர்க்கும் பிராரப்த வினைப் பயனாகிய விஷய வின்பத் துன்பங்கள் தாக்கா தகலு மென்பதாம்.

ஈண்டு ஒளியென்றது, எத்திறத்த ஒளிகளையும் ஒளிர்வித்து நிற்பதாகிய திருவருண்மேற்று. உமிழ் வினையெச்சம். மிகமேவுதானமென மாறுக. திருமேனி அருளாகவே மதம் ஆனந்தமென்பதாயிற்று. கழல் ஆகுபெயர். அளியாரு மலரெனவே, அது தேன்றதும்பு நாண்மலரென்பதுதானே போதரும். தாய, தாவிய, கடந்த, என்பன ஒரு பொருட்கிளவி. வினைப்பயனாகிய விஷய வின்பத் துன்பங்களென விரித்துரைக்க. துன்பத்தையொப்ப விஷய வின்பமும் அகற்றற்பாலதாயது, வீட்டின்பத்தைநோக்க அறவுஞ் சிறிதாதலாலே யன்றித் தோன்றி நின்றழிவதும் அவ்வேதுக்களானே மிகவும் பெரியவாந்துன்பத்தை விளைப்பதும் ஆகலின். நினையாவென்றது தேற்றத்தின் கண்ணதாய் வந்த வுபசாரம்.

வினை வலிதாயதென்பது "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான்முந் துறும்." என்றருளியதனாற் காண்க.

ஞானசாரியராற் பெறப்படுவதாய் ஸாதகரைத் தன்னோடத்துவிதமாக் கொண்டு எதிரிடும் பாசகாரியங்களை நிராஹரித்துத்தன்னியல்பாகிய அருள்வடிவிற்றேன்றும்ஆனந்தப் பெருக்கினால் அவரதுள்ளங்களை மகிழ்வித்து நிற்பதாயுள்ள உபதேசப் பொருளென்பார் 'ஒளியான திருமேனியுமிழ்தான மிகமேவுகளியார வருமானை' எனவும், அப்பொருளானாய பாசவெற்றியை மறவாது கடைப் பிடித்தல்

பற்றி அன்பினால் வியாபிக்கப்பட்டுக் கனிந்தவிழ்ந்த அவ் வுள்ளமானவை வாலனைபற்றி ஒருகாற் புறஞ்செல்லினும் மீட்டுத்தொன்னிலையிற்செலுத்துவதாகிய மெய்த்தொண்டினாற் சிதாகாசமாகப் பொலிவெய்துவ வென்பார் 'கழலிணை மறவாம லளியாரு மலர்தூவு மடியார்க ளுளமான வெளியாகும்' எனவும், ஒளிமுன்னிருள் போலச் சிதாகாசத்தின் முன்னர்ச் சுட்டுணர்விற்கேதுவாகிய அறியாமையில்லாதாகலான் விஷய வின்பதுன்பங்கள் அணுகா வென்பார் 'வலிதாய வினைகூட நினையா' எனவும் அருளினார் என்பது அந்தரார்த்தம்.

வருதல்—ஞானாசாரியராற் பெறப்படுதல். வீரகண்டாமணியென்னும் பொருட்டாயகழல் பாசவலியை யழிக்கும் வெற்றிப் பாடுடைமையை யுணர்த்திற்று. அளியாலெனவிரித்துரைக்க. அளி—அன்பு. ஆருதல்—வியாபித்தல். மலர்தல்—அவிழ்தல். தூவுதல்—செலுத்துதல். ஈண்டுஅடியார்களென்றது லாதகர்கண் மேற்று.

எதிர்த்தவற்றை யழிக்குந்தோறும் அகங்காரமே மேற்கொள்ளும் ஆளி சிம்புட்களைப்போலாது எதிர்ப்படும் பாசவலியை யழிக்குந்தோறும் அகமகிழ்ச்சியே முனைத்துத் தோன்றும் சிறப்புடைமை பற்றி உபதேசப் பொருளை ஆளியாக உருவகஞ் செய்தார்.

இவ்வழிபாட்டாற் பிராரப்தமணுகாதாகவே ஆகாமியம் ஏறுதாகலானும், லஞ்சிதம் தீக்ஷாகாலத்திற்றானே கெட்டொழிந்தமையானும், தடையின்மையாற் பிறவிப் பெருங்கட லீந்தற்குப் பேருவகை யுண்டாகு மென்க.

இச்செய்யுள் பொருளியல்புரைக்கு முகத்தாற் பொதுவகையானும், 'ஒளியான திருமேனி யுமிழ்தான மிகமேவு களியார வருமானை' யெனவே வாழ்த்தலும், 'கழலிணை மறவாம லளியாரு மலர்தூவு மடியார்கள்' எனவே வணங்கலும், 'உளமான வெளியாகும் வலிதாயவினைகூட நினையா'

வெனவே பொருளியல்புரைத்தலும், ஆகிய சிறப்பு வகையானும், வழிபட்டதாயவா றறிக.

வருமென்றது முக்காலங்களையுந் தழுவிநின்று நித்தியத்துவத்தை யுணர்த்தினமையால் வாழ்த்தலாயிற்று. வருஞ் செய்யுட்களினும் இவ்வாறே உய்த்துணர்ந் துரைத்துக் கொள்க. (க)

ஓங்கொளியா யருண்ஞான மூர்த்தி யாகி
யுலகமெலா மளித்தருளு முமையம்மை காணத்
தேங்கமழு மலரிதழி திங்கள் கங்கை
திகழரவம் வளர்சடைமேற் சேர வைத்து
நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்க மன்று
ணின்றிமையோர் துதிசெய்ய நிருத்தஞ்செய்யும்
பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்
புந்தியினு முறவணங்கிப் போற்றல் செய்வாம்.

(இ—ள்.) ஆன்மாக்கடோறும் உயிர்க்குயிரா யொளித்திருந்து வினைப்பயன்களை யூட்டிப் பக்குவம் வந்துழி அவ்வாறு பக்குவப்படுத்திநின்ற அருளையே திருமேனியாக் கொண்டு ஞானாசாரியனாகி வெளிப்பட்டெழுந்தருளி வந்து தீக்ஷையாற் றனது விசுவாதிகநிலையை ஸ்வாநுபவமாகப் பெறுவித்து விசுவகாரண நிலையைக்காட்டிப் பிறவிப்பிணியொழியுமாறு விசுவாந்தரியாமியாயும் விசுவரூபியாகவு நிற்கு நிலைகளும் விளங்கப்பெற்று நித்தியானந்தராம்படி அவ்வான்மாக்களது இருதயாம்பரங்களைப் போலுங் கனகஸபைக் கண்ணே உலகமாதாவாகிய உமாதேவி காணத் தக்கதாகவும் சிவஞானிகளும் ஹரிப்பிரமேந்திராதி தேவர்களும் ஏனையோர்களும் துதிசெய்யவும் தேங்கமழு மலரிதழி முதலிய திருவடையாளங்களோடு நின்று ஆன்மாக்களை ஐந்தொழிற்படுத்தலை யறிவிப்பதாகிய ஆனந்த நிருத்தஞ் செய்தருளுகின்ற ஜகத்பிதாவாகிய சிவபெருமானது

அழகிய தாமரை மலர்போலுந் திருவடிகள் நாழும்யும் பொருட்டு நமது சிரத்தின் மேலும் உளத்தினுள்ளும் பொருந்திவாழும் வண்ணம் பணிதலும் பரவலுஞ்செய்வா மென்பதாம்.

ஞான மூர்த்தியாகி அருள் ஓங்கொளியாய் நீங்கலரும் பவத்தொடர்ச்சி நீங்கமன்றுள் உலகமெலா மளித்தருளு முமை யம்மை காண இமையோர் துதிசெய்யத் தேங்கமழு மலரிதழி திங்கள் கங்கை திகழரவம் வளர்சடைமேற் சேர வைத்துநின்று நிருத்தஞ்செய்யு மெனக்கொண்டு கூட்டுக ஆய் என்றது அருளென்றதனோடுஞ் சென்றியையும்.

நிருத்த தரிசனம் பெறுதோரைப் பிறவிப் பிணியானது விட்டொழியா தென்பார் 'நீங்கலரும் பவத் தொடர்ச்சி' எனவும், பெற்றோரை விட்டொழியுமென்பார் 'நீங்க' என வும் நிகழ்த்தினர்.

இமையோரென்றது பரமேபார்த்திருத்தலாற் சிவஞானி களும் பிறப்பி னியல்பான் ஹரிப்பிரமேந்திராதி தேவர் களுமே யன்றி ஆனந்த நிருத்த தரிசனத்தின் வியப்பால் ஏனையோர்களும் இமையா நாட்டத்தை யுடைய ராகலின் மூவகை யாரையுந் தழுவிற்று.

தேங்கமழு மலரிதழி முதலிய பொருட்கள் திருவடை யாளங்களானமை:—மலரிதழி யென்னும் வினைத்தொகை சிற்றரும்பு முதல் அலரீறாகவுடைய இதழித்துணரெனப் பொருடருமாகலான் அந்துணரினது நெடிய காம்பு—புவ னப் பொதுவிற்கும், அலர்கள்—புவன வாவிகளாகிய ஆன்மாக்களிற் பக்குவம் வந்தார்க்கும், சிற்றரும்பு முதலி யவை—பக்குவம் வரப்படுவோர்க்கும், அவற்றின் புறவிதழ்ப் பசிய நிறம்—ஆணவமலத்திற்கும், அதனோடு விரவிய மலி னப் பொன்னிறம்—அசுத்த மாயா மலத்திற்கும், முறுக் கவிழ்தல்—கன்ம மலத்திற்கும், முறுக்கவிழ்ந்த விதழ் படி யுங்கால் ஒளிரும் அகவிதழின் நின்மலினப் பொன்னிறம்-

சுத்த மாயாகாரியங்களைப் பெற்று விளங்குவதாகிய ஆன்ம பரிபாகத்திற்கும், ஆண்டுளதாகுந் தேன்—அத்தகைய பக்குவிகள துள்ளத்தே தோன்றிப் பெருகும் அன்பிற்கும், தேனின்கமழ்ச்சி—அவ்வன்பாலியற்றப்படும் திருத்தொண்டிற்கும், சீதகிரணமிர்தத்தைப் பொழியு மூன்றும் பிறையாகிய திங்கள்—அத்திருத்தொண் டுடையார்க்கு வரம்பிலின்பத்தைப் பயக்குந் திருவருட் பெருக்கிற்கும், தரணியெல்லாம் பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங் கேடாக்கற் கெழுந்த கங்கை—மலபரிபாகம் பெறாத ஆன்மாக்கண் மாட்டுப் பிறரைத் துன்புறுத்துவதா யெழும் அகங்காரத்திற்கும், பொன்போலிலங்கலைக் கண்டு இச்சித்தடுத்துழி தனது ஒலியைக் கேட்டும் அகலாரை மூர்ச்சிப்பிக்கத்தக்க விஷத்தை யுடைய அரவம்—அவ்வகங்காரத்தால் இன்ப வொதனமெனக் கருதி அடுத்துழி மயக்கியும் அகன்றொழியாது அநுபவிப்பேமென முயல்வாரை அறிவழித்துத் துன்புறுத்துவதாகிய விஷயத்திற்கும், வளர்சடை—பொற்குடத்திற்பொங்கி யெழுந்துநிறைந்து பற்பலமுகங்களாய்ப் பொழியும் அமிர்தத்தை யொப்பத் திருவுளத்திற் பொங்கி யெழுந்து திருமேனிமுழுதும் நிறைந்து பற்பலவகைகளாய் வெளிப்பட்டு விளங்கிப்பெருகுங் காருண்யத்திற்கும், அறிகுறிகளாகலின்.

"கங்கை யிரைப்ப வராவி ரைக்குங் கற்றைச் சடைமுடியான்" என்றருளிய வாற்றாற் கங்கை—அகங்காரத்திற்கும், அரவம்—அகங்காரந்தோன்றத்தோன்றும் விஷயத்திற்கும், "நானுமென் சிந்தையு நாயகனுக் கெவ்விடத்தோந் தானுந் தன்றையலுந் தாழ்சடையோ ணுண்டிலனேல்" என்றருளிய வாற்றான் வளர் சடை—பெருங் கருணைக்கும், "தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற், சாற்றியிடு மங்கியிலே சங்கார-மூற்றமா, யூன்று மலர்ப்பதத்திலுற்ற திரோதமுத்தி நான்ற மலர்ப்பதத்தே நாடு" என்றருளிய வாற்றான் ஆனந்தநிருத்தம்—ஆன்மாக்களை ஐந்தொழிற்படுத்தற்கும், அறிகுறியாதல் இனிது விளங்கும்.

"என்னை யேது மறிந்தில னெம்பிரான் றன்னை நானுமுன் னேது மறிந்திலே னென்னைத் தன்னடி யானென் றறிதலுந் தன்னை நானும் பிரானென் றறிந்தேனே" என்றருளிய வாறே பக்குவிகட்கேயன்றி அபக்குவிகட்கும் அவர்க்குப் பயனளிப்பனவாகிய ஸாதனங்கட்குந் தனது கருணைப் பெருக்கே ஆதாரமென்பதனையும் ஆதேயங்களிற் பற்றத் தக்கவை இவை விடத்தக்கவை இவை என்பதனையும் ஆன்மாக்கள் ஒரேகாலத்துணர்ந்து அனுஷ்டித்துய்யுமாறு அவற்றிற் கறிகுறிப் பொருட்களை ஒருங்கே சூடின னென்பார், வளர்சடைமேற் சேரவைத்தென்றார்.

இதனுள் 'ஞானமூர்த்தியாகி யருளாய்' எனவே சிவாகமங்களுட்சிறந்த ரௌரவாகமத்தெழுந்ததும் இந்நூலுக்கு முன்னூலுமாகிய சிவஞான போதத்துச் சிறப் பியல்பிற் சிவானுபவமாகிய விசுவாதிகப் பேற்றைக்கூறும் எட்டாஞ் சூத்திரப் பொருளும், 'ஓங்கொளியாய்' எனவே விசுவகாரணப் பேற்றைக்கூறும் ஒன்பதாஞ் சூத்திரப் பொருளும், 'மன்றுணின்று' எனவே விசுவாந்தரியாமியாகவும், 'நிருத்தஞ் செய்யும்' எனவே விசுவ ரூபியாகவும் நிற்கு நிலைகள் விளங்கும் பேற்றைக் கூறும் பத்தாஞ் சூத்திரப் பொருளும், 'பூங்கமல மலர்த்தாள்கள் சிரத்தின் மேலும்' எனவே உட்புறம்பென்னும் வேற்றுமையற விளங்கும் சிவானுபூதிப் பேற்றைக்கூறும் பதினொராஞ் சூத்திரப் பொருளும், 'புந்தியினு முறவணங்கிப் போற்றல் செய்வாம்' எனவே ஜீவன் முக்திநிலைக் கண்ணும் அவ்வனுபூதியிற்பிறழாப் பேற்றைக் கூறும் பன்னிரண்டாஞ் சூத்திரப் பொருளும் குறிப்பானுரைக் கிடந்தன.

விசுவாதிகப் பேற்றினின்றும் வெளிப்பட்டுழி வாஸ்து ரூபமாய்த் தோன்றிய விசுவம் ஒடுங்கி விசுவாந்தரியாமித்துவம் விசுவரூபித்துவம் ஆகிய இவைகள் விளங்கப் பெறுமாறு நீள வுதிக்குமிடமாகலின் நனவிற்சுழுத்தியாகிய அந்நிலையிற் றரிசிக்கும் பேறு விசுவகாரண மென்பதாயிற்று.

விசுவாந்தரியாமித்துவம் வியஷ்டியும் விசுவரூபித்துவம் ஸமஷ்டியுமாம்.

இப்பொருட்களுட் சிவஞான போதச் சூத்திரங்களிற் றொகையாய் நின்று விளங்காதவற்றை அதன்வழிநூற் சூத்திரங்களாற் காண்க.

பக்குவிகளது ஸ்வானுபவப் பொருளாகவும் அவ்வனுபவத்திற் கறிகுறிப் பொருளாகவும் விளங்கும் ஈரியல்புகளுந் தோன்றுமாறு 'ஞானமூர்த்தியாகி அருளாய் ஓங்கொளியாய்' என்றெடுத்து, 'மன்றுணின்று நிருத்தஞ் செய்யும்' எனமுடித் தருளினமையால் ஸ்வானுபவிகளது இருதயாம்பரங்களைப்போலும் கனகஸபைக் கண்ணே நின்று நிருத்தஞ் செய்யுமென வுரைக்கலாயிற்று.

இஃது சிந்தித்தலா னாகும்பயனைத் தெளிதற் பொருட்டு வேண்டப்படும் வழிபாட்டைச் செப்பு முகத்தாற் றிருவடி காட்டுமுபகாரத்தை யுணர்த்திற்று என்பது, 'உலகமெலா மளித்தருளு முமை யம்மை காண' வெனக்காணு முபகாரத்தை வேறுவைத்தோதினமையாற் றுனேபோதரும். (உ)

பரந்தபரா பரையாதி பரன திச்சை
பரஞானங் கிரியைபர போக ரூபந்
தருங்கருணை யுருவாகி விசுத்தா சுத்தத்
தனுகரண புவனபோ கங்க டாங்க
விரிந்தவுபா தானங்கண் மேவி யொன்றாய்
விமலமா யைந்தொழிற்கும் வித்தாய் ஞாலத்
தரந்தைகெட மணிமன்று ளாடல் காணு
மன்னையருட் பாதமலர் சென்னி வைப்பாம்.

(இ—ள்.) சிவபெருமானது லீலையாகிய சிருஷ்டி முதலிய பஞ்சகிருத்தியங்கட்கும் உற்பத்தி ஸ்தானமாய் அப்பஞ்ச கிருத்தியங்கள் உதிப்பதன்முன்னும் ஒடுங்கியதன்பின்னும் சேஷித்திருப்பவளாய்ச்சிவபெருமானது திருவுள்ளக்குறிப்

பின் வழியே ஐந்தொழிற்பொருட்டு விரிந்த பரை முதலிய பஞ்சசக்திகளாய் ஆன்மாக்கள் தனுகரண புவனபோகங்களைப் பெறும்படி முதற்காரணமாகிய மாயையைகளோடு வினைக்காரணமாகப் பொருந்தித் தனுகரணங்களைப் பெறுவித்த வழியும் அவ்வான்மாக்களோ டனன்னியமாகவே தோய்வற நின்று அத்தனுகரணங்களாற் புவன போகங்களைத் துய்ப்பித்துப் பரிபாகப்படுத்தி அனுக்கிரஹிக்கும் பொருட்டுச் சிவபெருமான் கொண்டருளுதற்குரிய ஆசாரிய ஸ்வரூபமுமாகிச் சிவரூப சிவதரிசனங்களைப் பெறுவித்து அப்பேறு பெற்றாரது இருதயாம்பரங்களைப்போலும் அழகிய கனகஸபைக் கண்ணே நின்று அவரது பிறப்பிறப்புக்களாகிய துன்பம் ஒழிதற்பொருட்டுச் சிவயோகசிவபோகங்களையும் பெறத்தக்கதாகச் சிவபெருமான் நிகழ்த்தியருளுகின்ற ஆனந்த நிருத்தத்தைப் பாலுண்குழவி பசுங்குடர் பொறாதெனத் நோயுண்மருந்து தாயுண்டாங்கு ஆன்மாக்களது சிற்றறிவி னமையாதெனக் கருதி அவர் தரிசிக்கும் வண்ணந் தரிசித்தருளுகின்ற சிற்சக்தியாகிய உமாதேவி யென்னும் உலகமாதாவினது காருண்யத்தான் யானெனதற வியாபித்தருளுகின்ற திருவடித் தாமரைக்கீழ் யாண்டும் வியாப்பியமாகும் வண்ணம் வணங்குவாமென்பதாம்.

ஐந்தொழிற்கும் வித்தாய் பராபரை பரந்த ஆதிபரன திச்சை பரஞானங்கிரியை விசுத்தாசுத்தத் தனுகரணபுவன போகங்கடாங்க விரிந்த வுபாதானங்கண் மேவி யொன்றாய் விமலமாய் பரபோகரூபந் தருங்கருணை யுருவாகி ஞாலத் தரந்தை கெட மணி மன்றா ளாடல்காணு மன்னையெனக் கொண்டு கூட்டுக.

பரை—முன்னை, அபரை—பின்னை, அவ்விரியல்பினையுமுடைமை தோன்றப் பராபரை யென்றார்; அது, வித்தே விருக்ஷமாகத் தோன்றி நின்றழிதல்போலாது பஞ்ச கிருத்தியங்களையு மீட்டுந் தன்மாட் டொடுக்கி நித்தியமாயிருப்பதோர் பொருளாகலின். பரந்தவென்றது, விரிந்தவென்

னும் பொருட்டாய்ப் பராசக்தியை யுணர்த்தும். ஏனைய நான்கு கிருத்தியங்களு நிகழ்தற் கேதுவாதலின் வைத்துத் திரோதான சக்திக்கு ஆதியெனப் பெயர்வந்தது. தன் பொருட்டாயும் நினைப்பு மறப்பு மாகவும் வினைவழியே குறைவு நிறைவுபட்டும் நிகழும் ஆன்மாக்களது இச்சாஞா னக் கிரியைகள் போலன்றென்பார், பரனதிச்சை பரஞா னங் கிரியையெனப் பகர்ந்தார். ஞானத்தின் வழியே நிகழ் வதாகலாற்பர கிரியை யெனக்கிளந் துரைத்திலர். ஈண்டுப் பரவென்றவை—எவற்றினு மேலானவை யென்னும் பொரு ட்டு. சுத்தம் அசுத்த மென்பவற்றைச் சுத்தா சுத்தமென்ற து வடமொழி மதம். வி, உபஸர்க்கம். மேவிநிலன்றி விரி யாதாக விரிந்த உபாதானங்கண் மேவி என்றது விரிக்க விரிந்தொடுங்கும் இயல்பினை அநாதியே யுடைத்தாகலின். உபாதானம்—முதற்காரணம். மேவுதல்—கடகலசாதிகளை வனைதற்குத் தண்டசக்கராதிகளை யொப்பத்துணைக் கார ணமாகப் பொருந்துதல். உபாதானம் ஒன்றேயாக உபா தானங்கண்மேவி என்றது தனுகரணாதிகள் தோன்றிநின்று தொழிற்படுதன் மாத்திரைக்கேயன்றி அவை சுத்தமாதற் கும் இன்றியமையாச் சிறப்பிற்றுதலை யுணரும்பொருட்டு. ஒன்றாய்—அனன்னியமாய். ஆன்மாக்களோடனன்னியமாகி நின்று செலுத்தியும் அவர்க்கனுபவமாகும் உபாதிகட்கேது வாகிய பாசத்திற்றேய் விலனென்பார், விமலமாயென்றார். பரபோகரூபமென முடிவுமுதலு மொழிந்தமையான் இ டைப்பட்ட சிவயோக சிவதரிசனங்களிரண்டும் இனம்பற் றிக்கொள்ளப்பட்டன. ஸோபான முறையானன்றிப் பர போகத்தை முன்வைத்தது தலைமைநோக்கி. உருவமிலான் உருவமுடையனுதற் கேதுவாதல்பற்றிக் கருணையுருவாகி யெனச் சிறப்பித்தார். ஆகி என்றதை மேலுந் தனித்தனி கூட்டுக. ஞாலம் ஆகுபெயர்.

பரனதிச்சாஞானக்கிரியைகண் மூன்றனுள் நிருத்தஞ் செய்யும் பூங்கமலமலர்த் தாள்களென ஞானக்கிரியைக

ளதுபகாரம் மேலே பெறப்பட்டமையானும், காட்டிக் கண்டாலன்றிக் காணமாட்டாத ஆன்மாக்கட்கு அறிதலும் புரிதலும் நிகழ்வுழி இச்சை கவவாதேல் அவை பயன்படு வன வன்மையானும், ஈண்டுக்கூறியது எஞ்சிநின்ற இச்சை யினதுபகாரமென்பது தோன்றற்பொருட்டு அன்னையருட் பாதமலரென ஒருமையாக வோதினர்.

அனுபவம் அறிகுறி என்னும் ஈரியல்புகளுந் தோன்று மாறு 'பரபோகரூபந்தருங் கருணை யுருவாகி' என்றெடுத்து 'மணிமன்றுளாடல் காணும்' என முடித்தருளினமையான் ஈண்டும் கனகவுபைக்கு உவமைகொள்ளப்பட்டது.

இச்செய்யுட் கண்ணுந் தெளிதற்பொருட்டு வேண்டப் படும் வழிபாட்டையே விளம்பு முகத்தாற் றிருவடிகாணு முபகாரத்தை யுணர்த்தியவாறு. (௬)

நலந்தராறு லிருந்தமிழின் செய்யுட் குற்ற
நண்ணும லிடையூறு நலியாமை கருதி
யிலங்குமிரு குழையருகு பொருதுவரி சிதறி
யிணைவேல்களிகழ்ந்தகயற்கண்ணியொடுமிறைவ
கலந்தருள வருமானை முகத்தான் மும்மைக் [ன்
கடமருவி யெனநிலவு கணபதியி னருளா
லலந்துமது கரமுரிவர் பரவவளர் கமல
மனையதிரு வடியிணைக ணினைதல் செய்வாம்.

(இ—ள்) பெருமை பொருந்தியதமிழாற்செய்யப்புகுந்த இந்நூல் வழூஉச்சொற்புணர்தல் பொருடோன்றாது மயங் குதன் முதலிய குற்றங்களில்லாததாய், ஐயந்திரிபறவோதி யுணர்வார்க்குப் பொருள்விளங்கிச் சுவானுபவமாவதாய், இனிதுமுடிந்துநடைபெறுதற்கு ஒருவாற்றானும் விக்கினம் வாராவண்ணம் அங்கயற்கண்ணம்மையாகிய உமாதேவி யோடு சிவபெருமான் கலந்தருளத்தோன்றிய யானைமுகத் தினையும் அம்முகத்தினின்றும் அருவிபோற் பொழிந்து விளங்காநின்ற மும்மதங்களையுமுடையனும், சிவகணங்கட்

குத் தலைவனாய், எழுந்தருளியிருக்கும் விநாயகப் பெருமானது காருண்யத்தால் வண்டுகள் ஆசைமிகுத்துக் கானங்களைப்பண்ணத் தேனைப்பொழிகின்ற தாமரைமலர்களைப்போலத் தபோதனர்கள் அன்புமிகுத்துத் தோத்திரங்களைப் பண்ண இன்பத்தைப் பெருக்குகின்ற அவனது திருவடிகளைத் தியானிப்பா மென்பதாம்.

இருந்தமிழினால் செய்யுட்குற்ற நண்ணுமனலந்தர இடையூறு நலியாமை கருதி எனவும், மதுகரமுனிவரலந்து பரவ எனவுங் கொண்டு கூட்டுக.

இருந்தமிழென்பது, "தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்ததுமுதலை, யுண்ட பாலனை யழைத்தது மெலும்பு பெண்ணுருவாக், கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித், தண்டமிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்" என்றருளிய வாற்றானறிக.

நலம்—ஏற்புழிக் கோடலான் வீடு பேற்றின் மேற்று. கயற்கண்ணுக் கழகாவதிது வென்பார், இலங்கு மிருகுழையருகு பொருதுவரிசிதறியிணைவேல்களிகழ்ந்த கயற்கண்ணென்றார். வரிசிதறல்—செவ்வரிபரந்திருத்தல். ஆனைமுகத்தனாய் வருதற்குக் காரணம், "பிடியதனுருவுமை கொளமிகு கரியது, வடிகொடு தனதடி வழிபடு மவரிடர், கடிகணபதிவர வருளினன் மிகுகொடை, வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே" என்றருளிய திருவாக்கானினிது விளங்கும். யானைமுகத்தாற்கு மும்மைக்கடம் அருவியெனநிலவுமென்றது, கையொடு இருகன்னப்பாலு நின்று பொழிதலின். கணபதியினருளால் திருவடியிணைகணினைதல் செய்வாமென்றது, திருவடிகளை வழிபடுதல் தன்பொருட்டேயன்றி அவன்பொருட்டன்றாகலின் அஃதிடையூறின்றி நிகழும் வண்ணம் அவனருளைப்பெற வேண்டுமென்னுங் கருத்தால் "அவனருளாலே அவன்றாள் வணங்கி" என்றருளியபடி. மதுகர முனிவர் உவமத்தொகை. அலத்தல்—அன்பு மிக்

கூர்தல், வளர்தற்குச் செயப்படுபொருட்கள் எற்குமாறு வருவிக்கப்பட்டன.

இருந்தமிழினூல் செய்யுட்குற்ற நண்ணுமனலந்தர இடையூறு நலியாமை கருதி திருவடியிணைகணிணைதல் செய்வாம் என நடுவணின்ற இச்செய்யுட் கண்ணேவைத் ததனால் இதனைச் சிங்கநோக்காக்கொண்டு வழிபாட்டதிகாரமுழுவதினும் உய்த்துரைத்துக் கொள்க.

இனி அந்தரார்த்தமாவது, ஞானசாரியராற்பெற்ற சிவானுபவத்தினின்றும் வெளிப்பட்டுழி அங்ஙனம் வெளிப்படுத்தியதும் சிவானுபூதியைப் பெறுதற்குத் தடையாக வாஸனாரூபமாய்த் தோற்றுவதும் பஞ்சவிஷயாகாரமாய் மயக்கி நிற்பதுமாகிய சப்தவிஷயத்தை அனுத்திரட்களின் வைலபோகமேயன்றிப் பிறிதன்றெனக்கண்டு கழித்துப் பிராரப்த போகமாய் வந்துகூடுவதும் இன்பந்துன்பங்களையூட்டுவதும் விஷயவஸமஷ்டியாய்த் திரண்டதுமாகிய மகளிர்போகத்தை அனுகுமுன்னரே சிந்தித்துத் தாம்பெற்றபேற்றை நோக்க அணுவுமேருவும்போலத் தாரதம்மியமுடைய தெனத் தெளிந்து மனத்திற் கோசரியாதகற்றி வாஸனையால் ஒரோவழிக்கோசரிக்கினும் அதுபற்றி யுண்டாம் விஷயவின்பத்துன்பங்கண்மேலாதல் அவற்றிற்கு வாயிலாயினார் மாட்டாதல் விருப்பு வெறுப்புக்களின்றி உதாஸீனமாய் நிற்கும் பேரறிவாளர்பால் அவைமீட்டும்வந்து கூடாவண்ணம் அவரைத் தன்னுடைத்துவிதமாக்கொண்டு நின்று உட்புறம்பென்னும் வேற்றுமையறச் சிவானுபூதியைப்பெறுவித்து அங்ஙனம்பெறுவித்த வுபகாரத்தை நினைந்தும் அப்பேற்றையே விழைந்தும் தேனுண்டவண்டுகள் கானம் பண்ணுவதைப்போல வாழ்த்தி வணங்கித் தோத்திரஞ் செய்யும் அவ்வடியவர்கட்கு வண்டுகளுண்டு களிக்கும்படி மேன்மேலுந் தேனைப்பெருக்குகின்ற தாமரை மலர்களைப் போலும் சிவானந்தானுபூதியைப்பெருக்கி வாழ்விக்கும் உபதேசப் பொருளினது ஞானக்கிரியாசக்திகளை அப்பொரு

ளினது காருண்யத்தால் யாமும் அப்பேறு பெறுமாறு இடைவிடாது தியானிப்பா மென்பதாம்.

இருந்தமிழின் செய்யுள் இறைவன் கலந்தருள இடையூறு நலியாமை வரிசிதறி இலங்குமிருகுழையருகு பொருது இணைவேல்களிகழ்ந்த கயற்கண்ணி யொடும் குற்றநண்ணுடல் வருமும்மைக் கடமருவியென நிலவுமது கரமுனிவர் அலந்து பரவ வளர்கமலமனைய ஆனைமுகத்தான் கணபதியின் றிருவடிகள் அருளால் நூனலந்தரக் கருதினதல் செய்வாமென ஈண்டுக்கொண்டு கூட்டுக.

இருந்தமிழின் செய்யுள் என்பது, பேரின்பாகாரமாய்ச் சமைந்த உள்ளமென்னும் பொருட்டாய்ச் சிவானுபவப் பேற்றை உணர்த்தி நின்றது. செய்யுளென்றதைச் செய்குன்றென்பதுபோலக் கொள்க.

இறைவன் கலந்தருள—சிவானுபூதியைப் பெறுதற்கு. பரிச முதலிய ஏனைய நான்குவிஷயங்களையுந் தன்னுளடக்கியும் ஆக்கியு நிற்குஞ் சப்தவிஷயத்தைச் சராசரப் பொருட்களுள் ஒன்றுயினும் வியஞ்சகமாகா வழியுந் தனது காட்சி மாத்திரையானே உதிப்பிக்கும் விசேஷணமுடைமைபற்றி அக்ஷரரேகையின் மேல்வைத்து 'வரி' என உபசரித்தார். அவ்விஷயம் அவ்வாறடக்கியும் ஆக்கியு நிற்றல் பொதுவதிகாரத்தாற் புலப்படும்.

பெத்த வாஸனைப்பற்றித் தோன்றும் பிரபஞ்சாகாரத்தை ஒழித்தற்குப் பெத்ததிசைக்கட்பைசந்திஸ்தானத்துப் புலப்படும் அனுபவத்தின் வைத்துண்டாம் ஊகமாத்திரையே அமையுமெனக்கொண்டு சப்த விஷயத்தை அணுத்திரட்களின் வையோகமேயன்றிப் பிறிதன்றெனக்கண்டு கழித்தென்பார் 'வரிசிதறி' என்றார்.

இலங்குதல்—அந்தக்கரணத்தழுந்தும்படி விளக்கமாக வருதல். இருகுழை—அங்ஙனம் விளக்கமாக வருவதனுற் கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியு மைம்புலனும் ஒருங்கே விருந்தாயருந்தத்தரும் பொருளாவதன்றே இஃதென

மயங்கி இன்பாகாரமாகவும் அப்பொருளே அக்கணமே அனுபவிக்கப் பெறாமையானும் பெற்றுழியும் பிரிதல் ஊடல் காத்தல் இழத்தன் முதலியவற்றானும் துன்பாகார மாகவும் குழைதலை உடனிகழ்ச்சியாகச்செய்யு மகளிர் போகத்திற்கு ஆகு பெயராயிற்று.

அருகுபொருதல்—மகளிர்பான் மீட்டு மீட்டும் பிரவிர்த் தியாற் பெறப்படும் இன்பம் அறவுஞ் சிறியதாதலேயன்றி அநித்தியமுமாகி அளவிறந்த துன்பத்தை யளிப்பதெனக் கண்டு மனத்திற்கோசரிக்குமுன்னரே அகற்றுதல். எவற் றையாயினுங் கொள்ளுதல் தள்ளுதல் வலித்திக்குமளவும் வேல் நுழைந்தது போல உள்ளத்தை வருத்து தலின் விருப்பு வெறுப்புகளை இணைவேல்களென உருவகஞ் செய்தார். கயல் நீட்சிக்குருவகமாய்ப் பெருமையையும், கண் அறிவையையும் உணர்த்தின. வருமென்றது ஈண்டு அத்துவிதமாக்கோடன் மேற்று.

ஆரம்பத்தில் பாசவலிமையயழிக்க வேண்டுதலின் 'ஆணை' எனவும் அவ்வழித்தோன்றும் பயன் அடைவே பெருகி அளவிறந்ததாகலின் 'உமிழ்தான மிகமேவும்' எனவும் ஈண்டுப் பாசவாஸனை மாத்திரையே அழிக்கவேண்டுதலின் 'ஆணைமுகத்தான்' எனவும் அவ்வழிப் பெறப்படும் பயன் உடனே அளவிறந்ததாகலின் 'அருவி' எனவும் அனுபவம் அனுபூதிகட்குத் துணைத்தருளும் பாகு பாடுகளும் பயன் களும் விளங்க அருளிச்செய்தார். கடம்—சிவானுபவத் திற்குருவகம். மும்மைக் கடநிலவு மென்றது முன்பெற்ற சிவானுபவத்தையே ஈண்டு அனுபூதியாகப்பெறுவித்தலின். நிலவு—நிலவுவித்து.

உபதேசப் பொருளானது ஸாதகர் ஸாத்தியரென்னும் இருதிறத்த எவரானும் யாண்டும் ஆசிரயிக்கப்படுவதாகலின் அவருக்குத் தலைமையாய் விளங்குவதென்பார், கணபதி யென்றார். கணம்,கூட்டம்,குழு,என்பன ஒருபொருட்கிளவி. நூனலம் ஞான நூற் பொருண் முடிவாகிய சிவானுபூதி.

சிதறிப்பொருது இகழ்ந்தவை மீளாது சிவானு பூதி யைப் பெறுதல் உபதேசப் பொருள் அனன்னியமாகத் தோன்றி நின்றாலன்றி யமையாவாகலின் இச்செய்யுள் தெளிந்து நிஷ்டைகூடற் பொருட்டு வழிபடுமாற்றை நிகழ்த்து முகத்தான் வாஸனா ரூபமாய் நின்ற பாசத்தை வீட்டு முபகாரத்தை யுணர்த்தியவாறு. (ச)

வளநிலவு குலவமர ரதிபதியாய் நீல
மயிலேறி வருமீச னருண்ஞான மதலை
யளவில்பல கலையங்க மாரணங்க ளுணர்ந்த
வகத்தியனுக்கோத்துரைக்குமண்ணல்விறலெ
வுளமருவுசூரனுரமெனதிடும்பையோங்க [ண்ணெ
லொன்றிரண்டுகூறுபடவொளிதிகழ்வேலுகந்த
களபமலி குறமகடன் மணிமுலைகள் கலந்த
கந்தன்மல ரடியிணைகள் சிந்தை செய்வாம்.

(இ—ள்.) எண்ணி லாண்டெய்தியும் உண்மை ஞானத்தை யுணரப் பெறுதவேதாவைப் பரிபாகமுறும் பொருட்டுக் குட்டிச்சிறை யிருத்தினன் பிள்ளைமைப் பருவக் கோமானெனக் கூறிய விண்ணப்பத்தைத் திருவுளத் தடைத்து அவ்வுண்மை ஞானத்தின் பெருமையை உலக முணருமாறு கேட்குமுறையிற் கேட்டருளிய சிவபெருமானாகிய தாதையார்க்குத் தானுணர்ந்தமை தோன்றக் கேட்பிக்குமுறையிற் கேட்பித்தருளி உவப்பச் செய்தோனைப் பலவகைப்பட்ட ஸமய நூல்கள் ஒன்றோடொன்று முரணிக் கூறுதன் மாத்திரையே யன்றித்தத் தங்கடவுளர்க்குச் சொல்லிய ஆதிக்கங்களைப் பிரமாண முகத்தாற் சாதிக்கமாட்டாமை யானும் வியாகரணமுதலிய அங்கங்களோடுணரப்படும் வேதநூல்கள் ஒவ்வொரு பொருட்கும் ஆதிக்கங்கூறுதன் மாத்திரையேயன்றி வாக்கியார்த்தங்களைப் பலவாகத் தோற்றுவித்தலானும் ஐயுற்றிருந்த தென்னம்பொருப்பற்கு அவ்வையமகலும்பொருட்டுப் பரமசிவன்ஒருவனே ஸர்வாதிக்க

முடையனுகவும் ஏனைச் சமயத்தெய்வங்க ளெல்லாம் அவனுக்கங்க மாகவும் அவனை யங்கியாகவும் பிரமாண முகத்தாற் சாதித்துநிற்கும் சிவாகமநூற் பொருளுணர்த்து முகத்தான் வேதமாதாவாகிய ஸ்ரீ ஸமஷ்டி காயத்திரியி னது அந்தரங்கமே சைவ ஸித்தாந்தஸாரமாகிய வஸ்து நிர்ணய மெனவும் சைவஸித்தாந்த மஹாவாக்கியமாகிய ஸ்ரீ வியஷ்டி பஞ்சாக்ஷர நிலையே வேதாந்த மஹாவாக்கியத் தின் லக்ஷியார்த்தமாகிய முக்தி நிர்ணயமெனவுந் தெளி வித்து அவ்வாறே ஸ்வானுபவமாம்படி உபதேசித்தருளிய ஞானுசாரியனுய், தனதுபெருமையை மதியாது அகங்கரித் தெழுந்த கிரௌஞ்சகிரியும் அவுணத் தலைவனுகியசூரபத்ம னது வலியும் எனது பிறவித் துன்பமும் நிலை யழியும்படி தனது இச்சாசக்தி ஞான சக்திகளோடு நிகழுங் கிரியா சக்தியாகிய வேலாயுதத்திற் பிரியம்வைத் தருளியவனுய், பிரம்ம விஷ்ணுக்களும் இந்திராதி முப்பத்து முக்கோடி தேவர்களும்சூழ்ந்து ஸேவிப்ப மயூராரூடனுக வெழுந் தருளி வருபவனுய், யானை பெறும்பிடியையும் மானுதவுங் கொடியையும் மணந்தருளியவனுய் விளங்குகின்ற ஆறு முகப் பெருமானது திருவடித்தாமரைகளைத் தியானிப்பா மென்பதாம்.

ஈசன் ஞான மருண்மதலை அளவில் பலகலையங்க மாரா ணங்களுணர்ந்த அகத்தியனுக்கோத்துரைக்குமண்ணல்விற லெண்ணு வோங்கல் சூரனுளமருவு முரம் எனதிடும்பை ஒன்றிரண்டு கூறுபட திகழொளி வேனுகந்த வளநிலவு குலவமரரதிபதியாய் நீலமயிலேறி வருங்களப மலிகுற மக டன் மணிமுலைகள் கலந்த கந்தன் மலரடியிணைகள் சிந்தை செய்வாமெனக் கொண்டு கூட்டுக.

ஈசனென்புழி நான்காம் வேற்றுமை தொக்கி நின்றது. ஞானத்தை யென விரித்துரைக்க.

அளவி லென்றதினடங்குவதாகிய பலவென்றதை ஈண்டு வேறுவைத் தோதினமையால் அளவி லென்னும் அடை

அப்பலகலைகளான் வஸ்து நிர்ணய முக்தி நிர்ணயங்கள் வாராவென்பதை யுணர்த்திற்று.

கலை ஜாதி யொருமை.

அங்கங்களோடெனா விரித்துரைக்க.

அங்கங்களாவன—வேதத்தின் பதலக்ஷணத்தை விபரிப்பதாகிய வியாகரணமும், வேதத்தின் பதங்கட்கு விவரணங்கூறுவதாகியநிருத்தமும், வேதத்தின் உக்தைமுதலிய ஸந்தோபேதங்கட்கு அக்ஷர ஸங்கியையைக் கற்பிப்பதாகிய ஸந்தோ விசிதியும், வேதத்தின் உச்சாரண லக்ஷணத்தை யுணர்த்துவதாகிய சிக்ஷையும், வைதிககருமங்கட்குத் திதி வார நக்ஷத்திர யோக கரண லக்கின முதலியவற்றுற் காலத்தை யறிவிப்பதாகிய ஜோதிஷமும், வைதிககருமங்களைப்போதாயனீயம்ஆசுவலாயனீயம் ஆபஸ்தம்பமுதலிய ஸூத்திர ரூபத்திருந்து பிரயோகிக்குமுறைமையைக் கற்பிப்பதாகிய கற்பமும், என ஆறுமாம்.

அங்கம் ஆரணங்கள்உணர்ந்த அகத்தியனுக்கு ஒத்துரைக்குமெனஅவற்றின்மேலாகவேறுவைத்தோதினமையானும், பொதுச்சிறப்பென்பதே யன்றிப் பொருள் வேற்றுமையில்லாமைபற்றிஆரணத்திற்குரிய பெயர்களெல்லாம் சிவாகமத்திற்கும் சிவாகமத்திற்குரிய பெயர்களெல்லாம் ஆரணத்திற்கும் இயைவவென்பது மேலோர் துணிபாகலானும், ஈண்டு ஐயந் தெளிவித்து நிற்கப் பெறுதலானும், ஒத்தென்பது இயல்பென்னும்பொருட்டாய்ச் சிவாகமங்களையுணர்த்தும்.

அண்ணல்—ஏற் புழிக்கோடலான் ஆசாரியன் மேற்று. கிரௌஞ்ச முகத்தினையுடைய ஓர் அவுணன் அகங்காரத்தால் ஓங்கல் வடிவெடுத்து நின்றமை பற்றிக்கிரௌஞ்சகிரியெனப் பட்டனன். கிரௌஞ்சம்—அன்றில். உரம்—வலி. எனதிடும்பை ஒன்றிரண்டு கூறுபடவென ஈண்டொருங்குவைத்தோதியது செய்யுண்முகத்தான் வழிபடும் பொருட்டுச் சிந்திக்கவே ஆசாரியனைப் மூர்த்தீகரித்தெழுந்

தருளிவந்து அடிமை கொண்டு ரக்ஷித்தருளிய அவனது பெருங்கருணைப் பிரவாகத்தின் மேற்கொண்ட பேரன் பினாமையான். ஒவ்வொன்றும் இரண்டு கூறுபடவென விரித் துரைக்க- இரண்டு கூறுபடுதலாவது இரண்டி ரண் டாகப் பிளவுபட்டு நிலையழிதல்.

வள நிலவுதல்—செல்வம் கல்விஸித்திமுதலியவற்றின் பெருமையான்விளங்குதல். குலம்—வஸுருத்திரஆதித்த மருத்துவரென்னு முப்பத்துமுக்கோடிகள். ஒளிதிகழ்வேலை யுகந்தருளிய மாத்திரையே மணந் தருளிய தாகலானும் இனம் பற்றியும் யானை பெறும்பிடி வருவிக்கப்பட்டது. கந்தன்—ஆறுருவு மோருருவாக்கூடியவனென்னும் பொரு ட்டாய் வந்த காரணப் பெயர்.

இனி அந்தரார்த்தமாவது, சிவபெருமான் தனது அருட் பெருங் கருணையையே ஓர் வடிவாகக்கொண்டு பேரறிவாள ராகிய சிவஞானிகள் சூழ்ந்து ஸேவிப்ப வரம்பிலின்பப் பயனையுணர்த்து ஞான நூல்களாகிய வேதசிவாகமங்களை வியாகரணமுதலிய அங்கங்களோடு ஓதி யுணர்ந்து பரிபாக முற்றிருக்கும் உள்ளமுடையார்பாற் காட்சி மாத்திரையா னே பசு பாசங்கள் வியாப்தி வியாப்பியங்களாமாறு திரு நோக்கால் வியாபித்தெழுந்தருளி வந்து நூற் பொருள் ஸ்வானுபவ மாகும் வண்ணம் ஸாதகநெறியை உபதேசி த்தருள்பவனைப், நூலுணர்வின்மையாற்பாசவெற்றி கொண் டருளும் அவனது ஆற்றலை யறியாத அபக்கு வரதுள் ளத்தே பொருந்தியிருப்பதும் யானெனை முனைத்து நின்றெ திரிட்டறிவதுமாகிய ஜீவபோதத்தையும் அப்போதத்தா லறியப்படும் பொருளை எனதெனப் பற்றுதலானுண்டாம் வருத்தத்தையும் அவற்றான் மேன்மேலும் ஓங்கிவளர்தலே யன்றித் தேய்தலுறாத ஸங்கற்ப முடைமையாற் கனி யப் பெறாதமனத்தினது வலிமையும் முக்தியில் விருப்பும் பெத்தத்தில் வெறுப்புமாகிய இருகூறாய்ப் பரிணமிக்கும் படி தனது இச்சா சக்தி ஞானசக்திகளோடு நிகழுங் கிரி

யாசக்திபாற் பிரேரகப் பிரியம் வைத்தருளி அதனால் அவ்வான்மாக்கட்குச் சுத்த வாஸனை மிகுத்து மீதூரும் இச்சைவழியே சிவானுபவமாகும் வண்ணம் அவரது ஞானக்கிரியைகள் வியாப்பியமாமாறு தனது ஞானக்கிரியைகளால் வியாபித்தருள்பவனாய், அவ்விருதிறத்தாரது அனுபவமும் அனுபூதியாகும் படி அவரைத் தன்னோடனன்னிய மாகக் கொண்டருள்வன். அவ்வாறுகொண்டருளுவோனாகிய ஞானாசாரியனது ஞானக்கிரியைகளை நமது அபீஷ்ட ஸித்தியின் பொருட்டுத் தியானிப்பா மென்பதாம்.

ஈசனருண் ஞான மதலை வளநிலவுகுலவமரரதி பதியாய் அளவில்பலகலை ஆரணங்களங்க ளுணர்ந்த வகத்தியனுக்கு நீலமயிலேறிவரும் ஓத்துரைக்கும் விறலெண்ணு வுளமருவு சூரனுர மெனதிடும்பை யோங்கலொன்றிரண்டு கூறுபட திகழொளி வேலுகந்த களபமலிகுறமகடன் மணிமுலைகள் கலந்த கந்தன் அண்ணல் மலரடியிணைகள் சிந்தை செய்வாமென ஈண்டுக்கொண்டு கூட்டுக.

சிவபெருமானது எல்லையற்ற பூரணவடிவ நின்றவாறே நிற்க அதினின்றும் எல்லைகாணும்படி அருட்பெருங் கருணையையே வடிவாகக் கொண்டெழுந்தருளுதலின் ஈசனருண் ஞான மதலை யென்றார். வளம்—பெருமை. நிலவு—அறிவு. வர்க்கமென்னும் பொருட்டாய குலம்—ஞானத்திற்சரியையாதிய நாற்பாதங்களினிற்பார்மேற்று; அவருண் மந்திரேசுவரரேயன்றி அஷ்டவித்தியேசுவரர் அனுலைதாசிவரும் ஆசிரியரது ஸங்கற்பத்தின்வழியே இயங்குவோராகவிற் சூழ்ந்து ஸேவிப்பரென்பதாயிற்று. பயனென்பது—பலவென வடமொழி வழக்காய்த் திரிந்தது. கலை—ஞானநூல். அகத்தியன்—அகத்தையுடையோன். அகம்—உணர்ச்சிக் கிடனாகிய வுள்ளம். மயிலினது பஞ்ச வன்னங்களும்—பஞ்ச பாசங்கட்கும், அவற்றுள்ளு மிகுத்துத் தோன்று நீல வன்னம்—சிறப்பு வகையான் ஆணவத்திற்

கும், மயில்—ஆன்மாவிற்கும், ஏறுதல்—வியாபித்தற்கும், உருவகமாயின. இயல் பென்னும் பொருட்டாய ஒத்து—ஸாதக நெறியின் மேற்று. சூரன்—யானென முனைத்து நிற்கும் ஜீவன். உரம்—அம்முனைப்பால் எதிரிட் டறியும் ஜீவபோதம். எனதிடும்பை—எதிரிட்டறியப்படும்பொருளை எனதெனப் பற்றுதலானுண்டாம் வருத்தம். ஓங்கல்—கனியா மனத்திற் குருவகம். ஒன்று—ஒவ்வொன்று.

ஒவ்வொன்றும் இருகூறு படுதலாவது = முக்தியை விரும்பி அதனைப் பெறுவேமென வூக்கி யெழுவது—யானென முனைத்து நிற்கும் ஜீவனும், பெறுவிக்கும்பொருட்டு ஞானசாரியரை வழிபடுவது—எதிரிட் டறியும் ஜீவபோதமும், ஞானசாரியரிடத்தே யுண்டாய பற்றுக் கோட்டினால் அவரது ஆணையாகிய ஸாதக நெறியைத் தலைப்படுதலிற் றுவளுதல்—அறி பொருளை எனதெனப் பற்றுதலானுண்டாம் வருத்தமும், அத்துவட்சியான் முயற்சியினழுவாது எத்துணைத் துன்பம் வரினும் முக்தியைப் பெறுதொழியேனென மேற்கொண்டு உலக வாஸனையாற் குழையாது மனந் திண்ணியவாகப் பெறுதல்—கனியப் பெறாத மனத்தினது வலியும், ஆகிய ஒரு கூறுமென்க.

பெத்தத்தை வெறுத்து அதனை யொழிப்பேனென வூக்கியெழுவது—யானெனமுனைத்துநிற்கும் ஜீவனும், ஒழிக்குமுகத்தான் உலகரூபமாகிய விஷயங்களினுண்மையை உற்றுணர்வது—எதிரிட்டறியும் ஜீவபோதமும், அவ்வுணர்ச்சி பற்றி விஷயங்கண் மாட்டுண்டாய வெறுப்பினால் அவற்றிற்கு விலக்ஷணமாதலிற் றுவளுதல்—அறிபொருளை எனதெனப்பற்று தலானுண்டாம் வருத்தமும், அத்துவட்சியான் முயற்சியினழுவாது எத்துணைத்துன்பம் வரினும் பந்தத்தைஒழியாது நில்லேனென மேற்கொண்டு உலகவாஸனையாற்குழையாது மனந்திண் ணியவாகப் பெறு

தல்—கனியப்பெருதமனத்தினது வலியும், ஆகியமற்ருெரு கூறுமென்க.

அறிபொருளை ஒழிக்க முயறலான் அதன்கட்பற்றுள தென்பது ஊகத்தாற்காண்க. பற்றியறியாத முத்தியிற் பற்றுக்கோடும் பற்றியமுந்திய பந்தத்திற் பற்றறுதியும் பெறுகின்றமையாற் பரிணமித்தவாயின.

ஐம்புலவேடரின் வளர்ந்தயர்தலாற் குறமெனவும், அச்சேர்க்கையினின்று நீங்கி வரம்பிலின்பத்தை வழங்கப்பெறுதலான் மகளெனவும், அப்பேற்றிற் குரிமையாம்படி ஞானக்கிரியைகள் சுத்தவாஸனையான் மிகுதலாற் களபமலி மணிமுலைக ளெனவும், கழறலமையும். ஞானக்கிரியைகள்தோன்றி நிற்றற்கிடமாவது இருதயமாகலான் மார்பத்தெழுந்த மணிமுலைகள் அவற்றிற் குருவக மாதலும் ஆதற்கண் மணியென்பது முலைகளின் சிறப்பியல்பு வழாதிருக்கும் வனப்பின்மேற்ருதலை யொப்ப ஞானக்கிரியைகளாது தளர்வின்மை மேலும், கந்தனென்றது அவ்வனுபவம் அனுபூதியாமாறு அனன்னியமாக் கொண்டருளுதன் மேலுமாம்.

நூலுணர்வில்லாரும் பரிபாகமெய்திவீடடைதல் சிறப்புவகையானுமென்பதற்குஇந்நூலாசிரியராளேமுள்ளிச்செடியும்முத்திபெற்றமையேசான்று. கனியாமனத்திற்குக்கல்லுருவகமாதல் "திணியான மனோசிலை மீதுனதா ளணியாரரவிந்த மரும்பு மதோ" என்றருளியவாற்ருனறிக. பரிபாகிகட்கு மகளிர் உருவகமாதல் "கருவிகட்கிறைமை காட்டுநிற்றலிற் புருட நாமமும் புனைந்தனமாயினும் அத்தநிற்குறிப்பிற் சத்திகளியாமே" என்றருளியதனுற்காண்க.

பரிபாகம்வந்து சுத்தவாஸனை மிகுத்துழி சிவானுபவத்தின்கண்ணேஇச்சைமீதூருமென்பது "உயர்ந்தோன்றலைவனைத்தோட் புணரினு மிழிந்தோட் புணரினு மிழிபெனப்படாதேஆதலின்யாமுனைக்காதலித்தனமாற்காதலினெனமையருட் கைப்பிடித் தருளி ஒருவரு முணராப் பரம வீட்டி

விருளறை திறந்த பெருவெளி மண்டபத் துயர்நா தாந்தத் திருமலரமளியிற் புளகமெய்போர்ப்ப மொழிதடுமாற வுள்ளொலிநாதப் புள்ளொலி முழங்க ஞானவாரமுத பானமதருந்திக் கருவிகள் கழன்று பரவசமாகிப் பரமானந்தப் பரவையுட்படிந்து பேராவியற்கை பெற்றினிதிருப்ப ஆரா வின்பமளித்தரு ளெமக்கே" என்றருளியதனுனும்.

சிவானுபூதிச் செல்வராயினுர் மாட்டு நிகழும் இச்சையைத் திருவுளத்தடைத்து அவ்வாறேஅனுக்கிரஹித்தலியல்பாகலின் இச்செய்யுள் கள்ளத்தலைவர் துயர்கருதித் தங் கருணை வெள்ளத்தலைதன் மிகுத்தலானுய பரிதாபத்தை நீக்கியருளும்பொருட்டுவழிபடுநெறியைவகுக்குமுகத்தான் வழிபடுவோராகிய சிவானுபூதிச் செல்வரைச் சிறப்புவகையானுவேசித்து நின்று கள்ளத்தலைவர் துயர்தீரும் வண்ணம் பண்டைப் பரிசைவிளக்கு முபகாரத்தை யுணர்த்தியவாறு.

சுத்த சிவன் ஒருவனே தன்னுடைலே ஆன்மாக்கள் காணும் பொருட்டுத் தனது தாதான்மிய சக்திகாணுமாறு காட்டி நிற்றலாற் பதி யெனவும், கண்டு நிற்றலாற் சதி யெனவும் அவ்வுபகாரங்களினைக்கியத்துதித்த சிவானுபூதி முன்னர் வாலறுருபமாய்நின்ற பாசங்களை வீட்டித் திருவடிகூட்டியருளலான்மூத்தபிள்ளையாரெனவும், பின்னர்க்கருணைவெள்ளத்தலையும் பரிதாபந் தீரும் பொருட்டுக் கள்ளத்தலைவர் துயர்தீரும்படி பண்டைப்பரிசைவிளக்கியருளலான் இளையபிள்ளையா ரெனவும், புணர்ந்துரையான் வழங்க நிற்பதேயன்றிப் பொருட்பன்மையன் றென்பர் புலவோர்.

காட்டல் காணல்களினைக்கியம் கேட்டன் முதலிய நான்கினும் அடைவே தாரதம்மியப்பட்டு நிகழ்வதாகலிற் சாதகநெறியிற்படும் பாசங்களை நிராகரிப்பதும் இம்மூத்த பிள்ளையாரேயாம். (ரு)

## குரு வணக்கம்.

தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
  திருநந்தி யவர்கணத்தோர் செல்வர்பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிக ளடிசேர்
  பரஞ்சோதி மாமுனிகள் பதியாம்வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலான் மாரு
  விரவுபுக ழருணந்தி விறலார்செல்வத்
தாவிலருண் மறைஞான சம்பந்த ரிவரிச்
  சந்தானத் தெமையாளுந் தன்மையோரே.

(இ—ள்.) ஆசாரிய பரம்பரையை வழிபட்ட தென்பதாம்.

ஓர் செல்வர்—ஒப்பற்ற ஸனற்குமார மஹாமுனிவர். பாரிற்பாவிய சத்தியஞான தரிசனிகள்—பக்குவான் மாக்களுக்கனுக்கிரஹிக்கும்பொருட்டுத் திருக்கைலாயத்தினின் றும் பூவுலகின் கண்ணெழுந்தருளினவர். ஏனைய வெளிப்படை.

பாசவைராக்கியத்தாற் றற்பயன் குறியாது ஜீவகாருண்யத்தாற் பக்குவிகளிடத்தே கருணைவைத்து வேதாகமங்களில் அவர் ஓதியுணர்ந்த ஞானபாதப் பொருள் ஸ்வானுபவமாகும்படி ஞானஸாதக நெறியிற் பயில்விப்பரென்பார் 'விறலார் செல்வத்தாவிலருண் மறைஞான சம்பந்தர்' எனவும், அச்சாதகத்தானே யாண்டும் எவரானும் புகழும்படி ஞானபாதப்பொருளாகிய சிவரூபானுபவத்தை ஸ்வானுபவமாக அளித்தருளுவரென்பார் 'மாரு விரவு புகழருணந்தி' யெனவும், அவ்வனுபவத்தால் ஞாயிற்றின் முன்னர் நவநீதத்தை யொப்ப ஆக்கையுமுருகா நிற்கும் அன்புடையார்க்கு வாஸனாரூபமாய்த் தோன்றும் பிரபஞ்சத்தைக்கானனீரையொத்ததெனக்காட்டிக் கழிப்பித்து உண்மையாகிய சிவதரிசனத்தைப் பெறுவிக்கும் ஆற்றலுடைய

ரென்பார் 'பதியாம் வெண்ணெய் மேவியசீர் மெய்கண்ட திறலான்' எனவும், அவ்வாறு சிவதரிசனம் பெற்றார் பிரா ரப்தத்தான் உலகவியாபாரத் துழலினும் அவரைச் சிவ யோகத்தாற் புலன்வழிச்செல்லாப் புண்ணியராகச் செய்வ ரென்பார் 'அடி சேர் பரஞ்சோதி மாமுனிகள்' எனவும், அங்ஙனம் புலன்வழிச் செல்லாப் புண்ணியத்தாற் பெறு வித்த சிவபோகத்தினின்றும் உற்றநோ யொழித்தன் முத லியபற்றித்தானுகவேவெளிப்படினும் உண்மைநிலையைப்பிரி யாத வுணர்வுடையராகச் செய்வரென்பார் 'பாரிற் பாவிய சத்தியஞானதரிசனிகள்' எனவும், பிராரப்தம் பற்றிப் பிற ரானே உணர்த்தப்பட்டுப் பிரபஞ்சத்தை யுணர்ந் துழியும் தனதுபேற்றிற்பிறழாதுநிற்கும் பேரறிவுடையராகச்செய்வ ரென்பார் 'அவர் கணத்தோர் செல்வர்' எனவும், சிவபோ கத்தை மேன்மேலும் வளரச் செய்யுந் திருவருளை யொரு வாற்றானும் பிரியாத ஸதா நிஷ்டராகச் செய்வரென்பார் 'தேவர்பிரான் வளர்கயிலைக் காவல்பூண்ட திருநந்தி' என வும், இச்சோபானக் கிரமத்தால் எம்மையும் ஆண்டருளிய வள்ளன்மையை இயல்பாகவே யுடையரென வணங்குவார் 'இவரிச்சந்தானத் தெமையாளுந் தன்மையோர்' எனவும் சாற்றி யருளினு ரென்பது அந்தரார்த்தம்.

தலைமைநோக்கிக் கேசாதிபாதாந்தமாக வைத்தா ரெனி னும் ஸ்வானுபவ ஸோபான முறைமைபற்றிப் பாதாதி கேசாந்தமாகப் பொருட் படுத்துக. அச்சோபானங்களி லேற்றுவோரை ஏறுவோராக் கூறியது காணு முபகாரத் தின் வைத்து.

மஹா வீரரையுங் குழைக்கு மாதர் மயக்கத்தைப் புறங் காண்டலாகிய வேண்டாமை யென்னும் விழுச் செல்வப் பேறே வெற்றியாகலிற் பாசவைராக்கியம் விறலார் செல்வ மெனப்பட்டது. தாவிலருள்—நீங்காக் கருணை யென்னும் பொருட்டாய் ஜீவகாருண்யத்தை யுணர்த்திற்று. ஸம் பந்தப்படுத்தல்—ஞானபாதப் பொருளோடு கதைத்தற்குரிய

ஸாதகநெறியிற் கூட்டுவித்தல். அருணந்தியென்றது சிவ பெருமானுக்குரிய திருநந்தியென்னுந் திருப் பெயரையே பெயராகப் பெற்ற ஸந்தாநாசாரிய பரம்பரையாதல்பற்றி ஆசாரியரெனப் பொருட்டரும். பதியென்றது உயிருக்கிருப் பிடமாகிய உடம்பு. வெண்ணெய் ஆம் என மாறுக. அடி சேர்த லெனினும் சிவயோகமெனினும் ஒக்கும். ஓர்|செல் வம்—ஒப்பற்ற பேறு. காவல் பூணல்—பற்றி யழுந்தி விடாது நிற்றல். அணுஸதாசிவரும் ஸம்ஹிதா மந்திர ஸ்வரூபராய்ப் பல திறப்படுவராகலிற் பேறுந் தாரதம் மியப் படுமென்பது தோன்ற 'தேவர்பிரான் வளர் கயிலை' என்றார். ஸந்தானமென்றது ஏற்புழிக்கோடலான் ஸ்வா நுபவ ஸோபானங்கண் மேற்று.

எண்ணிறந்த பரிபாகிகளை யாள்வோரை எமையாளு மெனக் கிளந்துரைத்தமையாற் பரிபாக நோக்காது எமை யும் ஆண்டருளிய வள்ளன்மையுடைய ரென்பதூஉம் தன் மையோரென்றமையால் அவ்வள்ளன்மையை இயல்பாகவே யுடைய ரென்பதூஉமாயிற்று. ஆகவே அவரது பெருங் கருணையைப் புகழுமாற்றான் வணங்கினா ரென்பது தானே போதரும். எமையு மென்னுஞ் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

இவரிச்சந்தானத் தெமையாளுந் தன்மையோ ரெனப் பன்மைபடக் கூறினும் பொருள் ஒருமையேயா மென்பது வருஞ்செய்யுளாற் பெறப்படும்.

இச்செய்யுள் மேற் கூறிய ஐவகை யுபகாரங்களையும் ஸோபானக் கிரமத்தாற் பெறுவித்தற்கும் அப்பேற்றின் பொருட்டுச்செய்யும் வழிபாடு கொண்டருளுதற்கும் வாயி லாக் கொண்டருளிய ஆசாரிய மூர்த்தத்தை வழிபட்ட வாறு. (௬)

பார்திகழ வளர்சாம வேத மல்கப்
 பராசரமா முனிமரபு பயில ஞானச்

சார்வுதர வந்தருளி யெம்மையாண்ட
 சைவசிகா மணிமருதத் தலைவ னந்தண்
கார்மருவு பொழில்புடைசூழ் மதின்மீதே மதியங்
 கடவாமை நெடுங்கொடியின் கரந்தகையுங்கடந்
சீர்நிலவு மறைஞான சம்பந்த னெந்தை [தைச்
 திருவளரு மலரடிகள் சென்னி வைப்பாம்.

(இ-ள்.) சிவபெருமானால் ஆயிர முகத்தொடும் தீர்க்க ஸூத்திரத்தொடும் ஆதிக்கியமுடையதா யமையுமாறு அருளிச்செய்யப்பட்ட ஸாமசாகையராகிய பராசர மஹரிஷி கோத்திரத்துள்ளார் தமது மாதவப்பயனெனப் பாராட்டும்படி சிவாசாரிய மகுட மாணிக்கமாகத் திருவவதாரஞ் செய்தருளிப் பக்குவான்மாக்கள் உய்யும் பொருட்டு ஞானோபதேசம் பண்ணுபவராய்ப் புண்டரீக புரத்திற் றோன்றி எம்மை யடிமைகொண்டருளியவரும் மருதூர்க் குத்தலைவராய்த் திருப்பெண்ணாகடத்தில் வாழ்பவருமாகிய மறைஞான ஸம்பந்த சிவாசாரியரது அடியவர் சிரத்தின் மீதமைத்த மாத்திரையே சிவபோகத்தை மேன்மேலும் வளரச் செய்வதாகிய திருவடித் தாமரைகள் எமது சிரத்தின்மீதும் வீற்றிருந்தருளும்படி வணங்குவாமென்பதாம்.

வளர்சாம வேதமல்கப் பராசர மாமுனி மரபு பயில சைவசிகாமணி வந்தருளி பார்திகழ ஞானச்சார்வு தர எம்மையாண்ட மருதத் தலைவனெனக் கொண்டு கூட்டுக.

மல்கல்—பிறரை ஓதுவித்தலாற் பெருகுதல். மரபு பயிறல்—மரபுள்ளார் பாராட்டுதல். பார்—ஆகுபெயராய்ப் பக்குவான்மாக்களை யுணர்த்திற்று. திகழ்தல்—அறியாமையினீங்கி அருள்பெற் றொளிருதல். ஞானச் சார்வு—ஞானத்தைச் சார்விக்கு நெறியிற் செலுத்துவதாகிய உபதேசம். சீர் நிலவுதல்—வாழ்வார்க்கு வேண்டப்படும் உரிமைகளுள் ஒன்றேனும் ஒழியாதமைந் திருத்தலை யுணர்த்தும்.

இந் நூலாசிரியரை ஆண்டருளியது புண்டரீக புரத்தெனல் வருவிக்கப்பட்டது.

மருதத் தலைவன்—அநிலத்தின் மேற்பட்ட ஆகாய துல்லியமா யகிலமெல்லாநிறைந்திருந்தும் உபாதிகளிற்றோய்வற நிற்பவனாய், பார்திகழ—அவ்விசேஷத்தான் ஞாயிற்றைச் சந்தித்த மாத்திரையானே நற்கண்ணொளிக்குப் பொருள் விளங்குதலை யொப்ப அவனது பாததரிசன மாத்திரையானே பக்குவிகளதுள்ளத்தேபரபோகமே பெருமை யுடைத்தெனப்பதிய, வளர்சாம வேதமல்க—அப்பதிவால் அப்பேற்றை விழைந்து வந்தடைந்தார் ஸாமவேத மஹாவாக்கிய லக்ஷியார்த்தமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரோபதேசம்பெற் றனுஷ்டித்தல் அபிவிர்த்தியாக,பராசர மாமுனி மரபுபயில—அதனுண்டா மன்னலயத்தான் மெய்ஞ்ஞானத்தின் பரம்பரையாகிய நிஷ்காமியச் சரியை கிரியாயோகங்கள் நிகழ்வதாக, ஞானச் சார்வு தர—அந்நிகழ்ச்சியானய பரிபாகத்தால் ஸாதகநெறியிற் பயிலும்வண்ணம் ஞானோபதேசஞ் செய்தருள்பவனாய், அந்தண்கார் மருவு பொழில்—அவ்வுபதேசநெறியிற் பயில்வுழி நீருண்ட மேகம்போலுங் குளிர்ந்தழகிய கூந்தலையுடைய மகளிரானிறைந்திருக்கும் உலகத்தின்கண்ணே, புடைசூழ் மதின்மீதே மதியம்—அம்மகளிரது குழலின் வாழ்தலாற் றேஹோஹபாவனை பண்ணி நிற்கும் அறிவானது, கடவாமை நெடுங்கொடியின் கரந்தகையும்—அப்பாவனையைவிட்டு நீங்காவாறுதடுப்பதாகிய அம்மகளிரது சிற்றின்பத்தைப் பயக்கும் பெரும்போக மயக்கத் தடையையும், வந்தருளி கடந்து—உன் முகத்தே பேரின்பாகாரமா யெழுந்தருளிக் கடப்பித்து, ஐச்சீர் நிலவும்—சிவபோகம் ஸ்வானுபவமாம்படி யளித்தருள்பவனாய், எம்மையாண்ட—எம்மை அடிமை கொண்டருளிய, மறைஞான சம்பந்தன் சைவசிகாமணி யெந்தை—மறைஞான ஸம்பந்த னென்னுஞ் சிவாசாரிய சிரோரத்நமாகிய எமதருட்பிதாவினது, திருவளருமலரடிகள் சென்னிவைப்

பாம்—சிவபோகத்தை மேன்மேலும் வளர்த்தருளு ஞானக் கிரியாசக்திகளின் வியாபகத்துள் ஆன்மஞானக் கிரியைகள் வியாப்பியமாகும்படி அடங்குவாமென்பது அந்தரார்த்தம்.

மாருதம் மருதமெனவும் பராசாரம் பராசரமெனவும் குறுக்கல் விகாரம்பெற்றன. பரம்—உயர்வு. ஆசாரம்—ஒழுக்கம். மா—பெருமை. முனி—மலையம். கார்ஆகு பெயர். மதில்—தேஹத்திற் குருவகம். கொடியின் கரம் நெடுந்தகையு மென வியையும். கொடி—மகளிர்க் குருவகம். கரம்—அளிப்பதென்னும் பொருட்டாய்ப் பயனாய் வரும் சிற்றின்பத்தின் மேற்று. நெடிது—மயக்கத்தாற் றோன்றும் போகப் பெருமை. தகையும்—தகைதலையும். வந்தருளுதற் கிடமும் வருமியல்பும் அவாய் நிலையாற் பெற்றாம். கடப்பித்தலைக் கடத்தலென்றது பொய்கண் டகன்ற மெய்கண்டதேவன் என்றருளினமைபோலும். ஐ—தலைமையென்னும் பொருட்டாய் ஏற்புழிக்கோடல்பற்றி வரம்பி லின்பத்தின்மேலும், சீர்—அதற்குரிமைப்பாடுடைய திருவருளின் மேலும், நிலவும்—விளங்கு மென்னும் பொருட்டாய் ஸ்வானுபவத்தின் மேலும் நின்றன. நிலவும்—நிலவுவிக்கும்.

ஞான வொரதகரையும் அந்நெறியிற் செல்லவொட்டாது மயக்கி மகளிர் போகந் தடுக்குமென்பது "மடுத்தவாளியிற் பிழைத்து வலையை முட்டி யப்புறத், தடுத்தமானை வவ்விநாயலைத்து நின்ற வாதிநா, னுடுத்த பாசவலையினின்று மூய்குவாரை யொய்யெனத், தடுத்தவாவிழைத்து நின்ற தையலாரையொத்தவே." என அருளியவாற்றானறிக.

மேலைச் செய்யுளில் நந்தியடிகண்முதல் மறைஞானஸம்பந்தரீறாகிய தேசிகரெழுவராற் பெறுவிக்கப்படுவதாயியம்பிய பேறனைத்தும் அவருள் இறுதிக்கண் ணின்ற ஒருவரானே பெறுவிக்கப்படுவதாய் இச்செய்யுளி னியம்பினமையானும், "நான்மறை நவின்றநற் பொருளிவை யென மோ

னவாசகத்தான் முப்பொருணவிற்றுபு நன்னலம்புரியுஞான ப்பிரகாசன் இன்னருள்பழுத்த செந்நெறிச்செல்வன் திருக்கிளர்ஞானத் திருந்திழைக் கணியா மருட்பெருஞ் சைவத் தருங் கலனுப்ப ஞ்சைற விளங்கு மாசிலாமணி யமண்மாசறுத்த கவுணியர் பெருந்தகை பிள்ளைமைவிடுத்த தள்ளரும் பருவத் துள்ளதன் படிவ முணர்த்துவ கடுப்ப மாநிலத் தமர்ந்தஞான சம்பந்தன் பொன்னடிக் கமலஞ் சென்னி வைத் திறைஞ்சுதும்'' என ஆன்றோ ரருளிச் செய்தமையானும் அவ்வெழுவரும் பொருட்டன்மையால் ஒருவரே யாமென்பது இனிது விளங்கும்.

இச்செய்யுள் வேலாபானக்கிரமத்தாற் றம்மை யாண்டருளிய ஆசாரிய ரிவரெனச் சிறப்புவகையாற் றெரித்துணர்த்தியவாறு. (எ)

---

## நூலின்யாப்பும் நுதலிய பொருளும்.

புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளி யாய்ப், புகழளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப், பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேத முஞ் சொற்பொருள் போற், பேதா பேதமு மின் றிப் பெருநூல் சொன்ன, வறத்திறனுல் விளைவதா யுடலுயிர்கண் ணருக்க, னறிவொளிபோற் பிறிவரு மத்துவிதமாகுஞ், சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ, சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்.

(இ—ள்.) உலகமுத்தொழிற்படுதலான் அதற்கோர் முதன்மைப்பொருளுளதென வுணராத உலோகாயதன் முதலிய புறப்புறச் சமயிகட்கும் உளதென வுணரினும் அம்முதன்மைப்பொருள் இத்தன்மைத்தென வுணராத வைஷ்ணவர் முதலிய புறச்சமயிகட்கும் உண்மையை யுணரினும் அம்முதன்மைப் பொருளைப் பெறுநெறி யிஃதென

வுணராத வாமி முதலிய அகப்புறச் சமயிகட்கும் விளங் காததாய், பெறு நெறி யிஃதெனை வுணரினும் பேற்றின் றன்மை யிஃதென வுணராத பாஷாணவாதி முதலிய அக ச்சமயிகட்கு விளங்குதன் மாத்திரையாய், பிரமமும் பிரப ஞ்சமும் முத்தி பெத்த மத்தியென்னு முத்திசைகளினு முறையே பொன்னும்பணியும் இருளும்வெளியும் சொல் லும்பொருளும் போல அபேதம் பேதம் பேதாபேத மாவ தென வேதமாகிய பொது நூலுணர்ச்சியாற் றேர்ந்து கன்ம பரித்தியாகஞ் செய்யும் விவேக மாத்திரையானே விளங்குவ தென்னு மாயாவாதி வழக்குப் போலாது ஸம யாதீதராகிய ஸித்தாந்த சைவர்க்கு யாண்டும் உடலும் உயிரும் கண்ணொளியும்கதிரொளியும் கண்ணொளியும் ஆன்மபோதமும் போல அபேதம் பேதம் பேதாபேத முடைத்தாகி யிடைவிடா துபகரிக்கப் பெறும் விசிஷ்ட சுத்தாத்துவித மாவதெனச் சிவாகமங்களாகிய சிறப்புநூ லுணர்ச்சியாற் றேர்ந்து அவற்றுள் விதித்தவாறே அனுஷ்டி க்கப்படு நிஷ்காமியச் சரியைகிரியா யோகங்களான் அடை வேமிகுத்து வருவதாய், திரிகரண சுத்தியால் ஸ்வானுபவ மாகப் பெறப்படுவதாய், வேதாந்த மஹா வாக்கியார்த்த நிர் ணயத்தின் வைத்துண்டாம் ஐயமகலத்தெருட்டும் சைவ ஸித்தாந்த மஹா வாக்கியார்த்தமாயுள்ள பதி பசு பாச மென்னும் முப்பொருட்களதியல்பினை இந்நூன்முகத் தான் விளக்குகின்றே மென்பதாம்.

புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப் பொற்பணிபோ லபேதப் பிறப்பிலதாய் இருள்வெளி போற் பேதமுஞ் சொற்பொருள்போற் பேதா பேதமுமி ன்றி உடலுயிர்கண் ணருக்கனறி வொளிபோற் பிறிவரு மத்துவித மாகுஞ் சிறப்பினதாய் பெருநூல் சொன்ன வறத்திறனால் விளைவதாய் புகழளவைக்களவாகி வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத்திறனிங்குத் தெரிக்க லுற்றா மெனக் கொண்டு கூட்டுக.

கண் என்பது ஒளி என்பதனோடும் ஒளி என்பது கண் அருக்கன் என்பவற்றோடும் சென்றியையும்.

புறச்சமயத்தவர் என்னும் பொதுக்கூற்று புறப்புறம் அகப்புறம் ஒன்னும் ஏனைய விரண்டனையுந் தொகுத்து நின்றது. சக்திக்கே ஆதிக்கங் கூறலாற் சாக்தேயம் வேறு வைத் தெண்ணப்பட்டதாயினும் சிவத்தை அன்னியமாகக் கருதாது "ஆதியந்த மிலாததோர் நாதர் பொன்றில ரேதுன்மங்கல நாணுறுந் திறன்" என்பராகலின் வாமமும் வைரவமுதலியவற்றோ டொருங்குவைத்து அகப்புறச் சமயமாக் கொள்ளப்பட்டது.

பக்குவா பக்குவிகளது அறிவறியாமைகளை இருளா யொளியாயெனப் பொருண்மேல் வைத்துரைத்த துபசாரம்.

அந்தரங்க வழிபாடுடையாரைச் சுட்டியறித லரிதாகலின் அகச்சமயத்தவர்க்கென்னது அகச்சமயத்தென்றார்.

பெருநூல்—சிறப்புநூலென்னும் பொருட்டாய்ச் சிவாகமங்களை யுணர்த்தும். அறத்திறன்—விதிவிலக்குகள். அவற்றுள் விதி—நிஷ்காமியச் சரியை கிரியா யோகங்கண் மேனும், விலக்கு—பொன்னில மாதராதிய பயன்களை வேட்டுச்செய்யும் சரியை கிரியைகள் ஸித்திகளைக் குறித்துச் செய்யும் யோகம் இவற்றின் மேனும், ஏற்புழிக் கோடலா னின்றன.

திரிகரண சுத்தியாய்நிற்றல் எவர்க்கும் மிகவுமரிதாகலின் யாவராலும் புகழப்படுதல் பற்றிப் புகழுளவை என்றார். யோக நிலைக்குக் கூறுந் திரிகரண சுத்திக்கும் ஈண்டுக்கூறுந் திரிகரணசுத்திக்கும் உள்ள வேற்றுமை அனுக்கிரஹமொழிம் பிரதாயத்தா னறிக.

பிரமமும் பிரபஞ்சமும் பொன்னும் பணியும் போலவாமெனின் முதலொன்றே யாகலானும், வெளியும் இருளும் போலவாமெனின் ஒன்றோடொன்று முரணுவவாகலானும்,

சொல்லும் பொருளும் போலவாமெனின் அவை பிறர்க்கே யன்றி ஒன்றற்கொன்று அனுபவமாதலில்லை யாகலானும், பெறுவானும் பேறுமின்றாய் முடிதலின் அவ்வுவமைகள் ஒவ்வாவென்க. அன்றியும் பொன் பணியாதற்குக் கம்மி யனைப்போலப் பிரமம் பிரபஞ்சமாதற்கு வேறோர் பிரமம் வேண்டப்படுமெனவரும். சைதன்னியமாகலின் வேண்டப் படாவெனக் கொள்ளினும் அஜம் நிர்விகாரம் நிருபாதி கம் என்னுஞ் சுருதியொடு முரணு மாகலானும் அபே தப் பிறப்புடைத் தென்ப தடாது.

உடலும் உயிரும் கனவு முதலிய அவஸ்தாபேதங்க ளானும் கண்ணொளியும் கதிரொளியும் காசநோய் முதலிய ஏதுக்களானும்கண்ணொளியும் ஆன்மபோதமும் கவலைமுத லியவற்றானும் ஒவ்வொருகாற்பிரிந்து கூடுந்தன்மை உவமே யத்துச் செல்லாமைப் பொருட்டுப் பிறிவரு மத்துவித மெனவும், எனவே மாயாவாதி கூடஸ்த பிரமவைக்கியமே முக்தியெனக் கூறுங் கேவலாத்துவிதத்திற் செல்லாமைப் பொருட்டு அத்துவிதச் சிறப்பினதா யெனவும், அதுபற்றி வைஷ்ணவர் ஆன்மா பரிபாகத்தாற் சன்னிதிக்கட் சென்று அடிமைத்திறத்தை யடைந்திருத்தலே முக்தியெனக்கூறும் விசிஷ்டாத்துவிதத்திற் செல்லாமைப்பொருட்டுப் பிறிவரு மத்துவிதச் சிறப்பினதா யெனவும், அவ்வாறாயிற்பேறென் னையோவென ஐயமுண்டாகாது உள்ளது ஸ்வானுபவமாய் விளங்குவதாகிய விசிஷ்ட சுத்தாத்துவிதமே முக்திப் பய னெனத் தெருளும் பொருட்டுப் பிறிவரும் அத்துவிதம் ஆகும் சிறப்பினதா யெனவும், அருளினர். என்பது, "ஐக் கியஞ் சிவத்தோடணுதியிலே யைக்கிய, மைக்கிய மைக்கிய மைக்கிய, மைக்கிய, மறியாமையே பாச-மறிந்ததுவேமுத்தி, பிறியாமையே சிவப்பேறு." என ஆன்றோ ரருளியவாற்றா னறிக.

'பெருநூல் சொன்ன வறத்திறனில் விளைவதாய்' எனவே காசிவாஸிகளாற் காசியின் பெருமையை உள்ளபடியே

கேட்டுணர்ந்து பிறர்க்குத் தெளிவுபடக்கூறும் ஆற்றலு டையராயினும் தாம் கேட்ட நெறியே சென்றாலன்றி ஆண் டெய்தினோ ராகாமையும் பைங்கூழை யழிப்போர் பயன் பெறுவோ ராகாமையும்போல நூலுணர்வு மாத்திரையா னுதல் கன்ம பரித்தியாக மாத்திரையா னுதல் முக்தி ஸித் திக்கப் பெற்றோராகா ரென்பதூஉம், 'புகழளவைக் களவாகி' எனவே பிரமம் வாக்கு மனோதீத கோசரமென்னுஞ் சுருதியை மறந்து கரணவளவையாகிய விவேக மாத்திரை யானே ஸாக்ஷிமாத்திரராதல் ஸாதிக்கப்பெற்றோ ராகா ரென்பதூஉம், ஆயிற்று.

இருளாய் நிற்றல் புறச்சமயத்தார்க்கும் ஒளியாய் நிற்றல் அகச்சமயத்தார்க்கு மாகவே பிறிவரு மத்துவிதமாகுஞ் சிறப்பாதல் ஸமயாதீதராகிய ஸித்தாந்த சைவர்க்கென் பது தானே போதரும்.

சைவம் சாக்தேயம் கணுபத்தியம்ஸௌரவம் வைஷ்ண வம் பௌத்தம் எனப் பொதுவகையாற் கூறப்படும் அறு வகைச் சமயங்களுட் பௌத்த மென்பது ஆன்மாக்கள் தமது பக்குவ பேதங்களால் வேத சிவாகம வாக்கியங்க ளுட் சிற்சிலவற்றைப் பிரமாணமாகப்பெற்று அவற்றிற்குத் தத்தம் புத்திக்கெட்டியவாறு பொருளமைத்துக்கொண்டு அதற்கியைய ஒழுகும் பற்பல ஸமயங்கட்குந் தொகை யாய் நின்றதுபோல ஈண்டுச் சைவமென்பது அகப்புறம் அகம் என்னும் இருவகைச் சமயங்கட்கும் தொகையாய் நின்றதே யன்றிப் பிறிதன்றாகலானும் பொதுநூலாகிய வே தத்துட் பிரமப்பொருட்குப் பிரதிபாதிப்பது போலவே சிறப்புநூலாகிய சிவாகமத்துட் பிரமப் பெயர்க்கு ஏதுப் பெயராகிய சிவமெனப் பெயரிய முதற்பொருட்குச் சைவ முதல் பௌத்த மீறாகிய அறுவகைச் சமயங்களும் அங் கங்களாகவும் அம்முதற்பொருள் அவற்றிற் கங்கியாகவும் நிற்பதெனப் பிரதிபாதிக்கின்றமையானும் முதற்பொருளா கிய சிவத்தொடு ஆன்மாக்கட்குள்ள ஸம்பந்தத்தை விள

க்கி அவ்வாறே ஸ்வானுபவமாதற்குரிய நெறியினைக் கூறும் ஸித்தாந்த சைவம் ஸமயாதீதமே யாகலான் அதனை ஆசிரயிக்கு மேன்பாடுடைய ஸித்தாந்த சைவர் ஸமயாதீதரெனப்படுவர்.

வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத்திறனெனவே வேதாந்தம் மயக்கமுடைத் தென்பதாயிற்று. மயக்கமாவதென்னையோ வெனின் மஹாவாக்கியங்கள் எந்த ஆன்மா பிரமமெனவும், எது நானேனெனவும், நான் பிரமமாவதெவ்வண்ண மெனவும், எத்தகைய பூரண ஞானம் பிரடமெனவும் ஐயுறும்படி யிருத்தலாம்.

சைவசித்தாந்தத்திறன் வேதாந்தத்தெளிவாயதுஎவ்வாற்றானெனின் ஸித்தாந்த மஹாவாக்கியமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரமானது எவர்க்கும் இதய ஸம்மதமாகும் வண்ணம் வேதாந்த மஹாவாக்கியங்கட்குப்பொருள் இதுவிதுவென முரணாது வரையறுத்தோதுதலானென்க. இவ்வியல்பு குருமுகத்தா னறிதற்பாற்று. திறன்—இயல்பு.

இந்நூல் கேட்டலுறுவார்க்கு மனவெழுச்சி சேறற்பொருட்டு உணர்த்தவேண்டும் யாப்பு முதலியவற்றுள் வேதாந்தத் தெளிவாஞ் சைவசித்தாந்தத் திறமெனப்படும் யாப்பும், பிறிவருமத்துவித மாகுஞ் சிறப்பென்னும் நுதலிய பொருளும், இச்செய்யுளான் உணர்த்தப்பட்டன. (அ)

---

## நூல்கேட்டற் குரிமை யுடைமை.

மூவகையா ருயிர்வர்க்க மலர்த்தார் கன்ம
  மூலமலத் தார்மூன்று முடையா ரன்றே
தீவகமா மெனவுருவாய் வந்து நாதன்
  றிருநோக்காற் பரிசத்தாற் றிகழும் வாக்காற்
பாவனையான் மிகுநூலா லியோகப் பண்பாற்
  பரவிவரு மௌத்திரி யாற் பாசநாச
மேவவரு ளுதவுமவுத் திரியிரண்டு திறனும்
  வியன்கிரியை ஞானமெனா விளம்பு மாறே.

(இ—ள்.) சிவபெருமானது ஐந்தொழிலும் அநாதியாக லான் அவற்றுள் அநுக்கிரஹத்தைப் பெறுவோராகிய பக்குவான்மாக்களும் ஆணவ மலமொன்று மாத்திரமுடைய விஞ்ஞானகலரெனவும் அதனோடு கன்மமலத்தினையுமுடைய பிரளயாகலரெனவும் அவற்றோடு மாயாமலத்தினையுமுடைய ஸகலரெனவும் அநாதியே மூவகைப்பட்டிருப்பர். அவரை உய்விக்கத் திருவுளங்கொண் டருளிய சிவபெருமானும் அவரிணங்கி யாட்படும்பொருட்டு மானைக்காட்டி மற்றொரு மானைப் பிடிக்குந் தந்திரத்தை யொப்ப விஞ்ஞானகலர்க்கு அருளேவடிவாகவும் பிரளயாகலர்க்குத் தேவவடிவாகவும் ஸகலர்க்கு மானுஷவடிவாகவு மெழுந் தருளிவந்து திருநோக்கமுதல் ஔத்திரியீறாகிய எழுவகைத் தீக்ஷைகளானும் பாசக்ஷயம் பண்ணித் திருவடி கூட்டி யருளுவன். ஔத்திரியும் சிவாகமங்களிற் கூறியவாறே குண்ட மண்டலாதிகளைப் பகிர்முகத்துற்கற்பித்து விரிவாகச் செய்யுங் கிரியாவதி யெனவும் அவற்றை உன்முகத்திற் கற்பித்து ஸங்கிரஹமாகச் செய்யும் ஞானவதியெனவும் இருவகைப்படுமென்பதாம்.

ஆருயிர்வர்க்க மூவகையென மாறுக. ஆருயிர்—அரிய வுயிரென விஞ்ஞானகலர் பிரளயாகலரோடு ஸகலரிற் பக்கு வான்மக்களையே யுணர்த்திற்று, ஏனைய ஸகலர்க்கு ஞானநூலியைபின்றாகலின். ஆணவமென்னும் பொருட்டாய் முதற்கட் கூறிய மலத்தினையே பின் மூலமலமென்றதன்றிப் பிறிதொன்றை யன்று; அது கன்ம மலமென ஒரு பொருளாக் கொள்ளாமைப் பொருட்டும் கன்மமலத்திற்குக் காரணம் ஆணவ மலமென்ப துணர்தற் பொருட்டுமாம். மூன்று முடைமைக்கு மாயாமலம் பாரிசேஷ வளவையாற் கொள்ளப்பட்டது. அன்றே—அநாதியே. தீவகம்—பார்வை மிருகம். திருநோக்கம்—தனது கருவைப்பார்க்கு மீன்போலப் பக்குவியைத் தன் வண்ணமாம்படி பார்த்தல். பரிசம்—முட்டையைப் பறவை சிறகருளடக்குவது

போல ஸ்ரீ ஹஸ்த மஸ்தக ஸையோகத்தானும் பாதமஸ் தக ஸையோகத்தானும் தனது ஞானக்கிரியைகளுள் பக் குவியினது ஞானக்கிரியைகளை வியாப்பியமாகச் செய்தல். திகழும் வாக்கு—பிரளயாகலர்க்குச் சகசநெறியையும் ஸகலர்க்குச் சாதக நெறியையும் விளக்குகின்றவாக்கு. பாவனை—யோகிருந்து காட்டல். மிகுநூல்—ஆகமாந்த ஸாரம். மிகுநூல், பெருநூல், சிறப்புநூலென்பன ஒரு பொருட்கிளவி. யோகப்பண்பு—யோகிருந்திக்காட்டல். பரவிவரும் ஔத்திரி—அவ்வாறு அறுவகைத் தீக்ஷைக ளானும் சிவானுபவம் பிறவாத வழிதடைப்படுத்தி நின்ற பாசத்தின் வலியழியும் வண்ணம் அத்துவ சோதனைசெ ய்து மந்ததரபக்குவிகளையும் உய்வித்தற் கேதுவாதல்பற்றி யாவரானும் புகழப்பட்டு வரும் ஓமஸம்பந்தமுடையது; அதனால் ஏனைய தீக்ஷைகளை ஔத்திரிக்கங்க மென்றுபசரி ப்ப. வியன் கிரியை—விரிவாகச் செய்யுங் கிரியை. விளம் பற்கு வினைமுதல் அவாய் நிலையான் வந்தது. தனது கரு வைச் சிந்திக்குங் கமடத்தைப்போலப் பக்குவியைத் தன் வண்ணமாம்படி கருதுவதாகிய தீக்ஷை தீவகமாமெனத் திருவுருக் கொள்ளுதற்குக் காரணமாய் நிகழ்வதாகலின் அதனை வேறுவைத்தோதாராயினர்.

ஆன்மாக்கள், மும்மலங்களையு முடையராய்க் கலைமுதற் பிருதுவியீறாகிய முப்பத்தொரு தத்துவங்களும் தத்தந் தொழிலைத் தலைப்படுமாறு ஆன்மஞானத்தைச்சுட்டறிவாக விளக்கிநிற்கும் சாந்தியதீதமுதல் நிவிர்த்தியீறாகிய பஞ்ச கலைகளோடுங்கூடி நிற்பவராகலின் ஸகலரெனப்படுவர்.

ஸகலரிற் பக்குவர், குருவருளால் உன்முகத்தே பெற்ற சிவானுபவம் நிலையுதலாயவழி அவ்வனுபவத்தால் விஷயங் களின் மயங்காமையைப்பெறுவரேல்மாயாமலநீங்க ஏனைய விருமலங்கண் மாத்திரையே யுடையராய் ஆன்மஞானம் பகிர்முகத்துஞ் சுட்டறவிளங்கும்படி தத்தமுன்னைத் தொ ழிலை ஒழிந்து நிற்கும் பஞ்சகலைகளோடுங் கூடி நிற்பவராக லிற் பிரளயாகல ரெனப் படுவர்.

பிரளயாகலரிற் பக்குவர், அவர் பெற்ற நனவிற் சுழுத்தி யனுபவம் நிலையுதலாயவழி அவ்வனுபவத்தாற் பிராரப்த மாகவரும் விஷயபோகந் தாக்காவாறு அந்தக் கரணங்க ளோடுங் கூடாதே வாடாதே குழைந்திருக்கப்பெறுவரேற் கன்மமலமுநீங்க ஏனையவொருமலமாத்திரையே யுடைய ராவர் ஆகவே ஆன்மா சராசரங்களனைத்தையுஞ்சுட்டியுஞ் சுட்டாததாகிச் சிவாகாரமாகத் தெளிந்து நிற்கும் வண் ணம் ஆன்மஞானமானது பேரறிவாய் விளங்கும்படி விள க்கிநிற்கும் பஞ்சகலைகளோடுங் கூடி நிற்பவராகலின் விஞ் ஞான கலரெனப்படுவர்.

விஞ்ஞான கலரிற் பக்குவர், அவர்பெற்ற நனவிற் றுரியா னுபவம் நிலையுதலாய வழி அவ்வனுபவத்தாற் றிரிபுடி முனைப்பழியப் பெறுவரேல் எஞ்சிநின்ற ஒருமலமு நீங்கிய வராவர் ஆகவே "பலைப் புணர்ந்து மிருட்பாவைக் குண் டென்றுங் கணவற்குந் தோன்றுத கற்பு" என்றருளியபடி பெத்தமுக்தி யிரண்டினும் அதி ரகஸியமா யிருத்தல் பற்றி மஹா மந்திரமெனப் பெயரிய அம்மலத்தினதாய் இஷ்டஸித்தியின்பொருட்டு அநுஷ்டிக்கப்படும் சிவாதிய நாமங்களி னிறுதியிற் கூட்டிப் பயிலப்படுதலின் வைத்துக் கோடியெனப் பெயருடையவாய் நிகழும் எழுவகைப்பீஜங் களான் உணர்த்தப்படும் யானெனதெனநிற்றல் அதுபற்றி உறவினர்க்கு எனதென்பதைக் கொடுத்தேனெனல் என் னைக் கொடுத்தேனெனல் பகைவரது எனதென்பதைத் தோன்றியவுடனேகெடுத்தேனெனல் தோன்றும்பொழுதே கெடுத்தேனெனல்யானென்பதைத்தோன்றியவுடனே கெடு த்தேனெனல் தோன்றும் பொழுதே கெடுத்தே னெனல் ஆகிய எழுவகைப்பந்தங்களும் பிராரப்தத்தால் அரசாட்சி முதலிய விவகாரங்களிற் பயிலும் ஜீவன்முக்தர் மாட்டும் வாஸனுருபமாய் ஒரோ வழிக்கூடி வாதிப்பதுபோலாகாது ஸதாநிஷ்டையால் அவற்றைக் கீழ்ப்படுத்தி மேற்கொண் டொழுகுவோராகலின் ஸப்தகோடி மஹா மந்திர ரென வும் மந்திரேசுவரரெனவும் பெயர் பெறுவர்.

ஸப்தகோடி மஹாமந்திரரிற்பக்குவர், ஸதா நிஷ்டை யனின்றும் வெளிப்பட்டெழி வாஸஞனந்த முதலிய அஷ்ட வித ஆனந்தங்களைப் பயக்கும் அஷ்டவித வித்தைகளையுங் கீழ்ப்படுத்தி அவற்றின் மேலாகிய நிரதிசயானந்தானுபவி களாய் விளங்கலின் அஷ்டவித்தியேசுவரரெனவும் மந்திர மஹேசுவரரெனவும் பெயர் பெறுவர்.

அஷ்டவித்தியேசுவரரிற்பக்குவர், உட்புறம்பென்னும் வேற்றுமையற்ற நிரதிசயானந்தானு பூதிமான்களாய் அத னால் ஆன்மாக்களில் ஸதாசிவ துல்லியராய் வாழ்பவராக லின் அணுஸதாசிவரெனப் பெயர் பெறுவர்.

கலவென்னும் வடமொழி சண்டுக்கலையெனத் திரிந்ததா கலான் கலரென்பது கலைகளோடு கூடியவரெனப் பொரு டரும். உபஸர்க்கங்களில் ஸ என்பது கலைகள் தன் னியல்பிற்குறையாது தொழில்புரிதலையும் பிரஎன்பது அத் தொழின்முற்றும் லயித்தலையும் உணர்த்துவனவாம். லயம், ஒடுக்கம், ஒழிவு, என்பன ஒரு பொருட் கிளவி. வட மொழியின் அபேத வழக்கால் ளயமெனலாயிற்று. விஞ் ஞானம்—பேரறிவு.

மூவகை ஆருயிர்வர்க்கத்தவர்க்கும் திருநோக்கமுதலிய எழுவகைத் தீக்ஷைகளாற்பாசநாசமேவ அருளுதவுமெனப் பொதுப்படப் புகன்றாராயினும் பக்குவபேதங்கட் கியைய விஞ்ஞானகலர்க்கு உண்ணின்று திருநோக்கத்தானும், பிர ளயாகலர்க்கு முன்னின்று திருநோக்கம் பரிசம் திகழும் வாக்கென மூவகையானும், ஸகலரிற்றீவிரதரர்க்கு அம் மூன்றொடு பாவனையானும், தீவிரர்க்கு அந்நான்கொடு மிகுநூலானும், மந்தர்க்கு அவ்வைந்தொடு யோகப்பண் பானும், மந்ததரர்க்குஅவ்வாறொடுஒளத்திரியானும் தீக்ஷை செய்து அனுக்கிரஹித் தருளுவனெனக் கொள்க.

விஞ்ஞானகலர்க்குச் செய்யுந் தீக்ஷைக்குரிய திருநோக் கம் அவர்பாற்றன்மையி னெழுந்தருளு நிஷ்கள வடிவுக் கியைய நிகழுமென்க.

பிரளயாகலர்க்குத்திருநோக்கமுதலிய முத்தீக்ஷைகளுள வாதல் ஆளுடைய பிள்ளையார் முதலியோர் மாட்டு நிகழ்ந் தமைபற்றி யறியக் கிடந்தன. அவையாமாறு—ஆளுடைய பிள்ளையார்பால் உமாஸஹாயராய் விருஷபாரூடராயெழுந் தருளி வரும்போதே வைத்த அருட்பார்வையே திருநோக் கம், திருமுலைப்பால் கறந்தருளி ஊட்டுங்கால் உண்ணடிசி லென்றருளியதே திகழும் வாக்கு, ஆண்டெதிர் நோக்குங் கண்மலர் நீர்துடைத் தருளியதே பரிசம். ஆளுடைய நம் பியார்பாலும் எழுந்தருளி வரும்போதே வைத்த அருட் பார்வையே திருநோக்கம், ஆவணம் பறிக்குங்கால் அவ ரோடு மற்கட்டியதே பரிசம், விருஷபாரூடராகிப் பித்த னெனப் பாடுகவென் றருளியதே திகழும் வாக்கு என் பவைகளே.

ஆருயிரென்னற்கேதுவாகியபக்குவம்முதற்காரணம்,திரு நோக்கமுதலியதீக்ஷைகள் துணைக்காரணம், நாதன்நிமித்த காரணன். இம்மூன்றும் உதிப்பது சிவானுபவம். (கக)

விரும்பிய மந்திராதி காரமர்ச் சனுதிகார
மேவுமியோ காதிகாரமெனச் சமய விசேடம்
வரும்பொருவி னிருவாண மந்திரங்கள் பதங்கள்
வன்னங்கள் புவனங்க டத்துவங்கள் கலைக
ளிரங்கடைவிற் றெகைபதினொன் றெண்பத்தொ
[ன் றைம்பத்தொன்
றிருநூற்றே டிருபத்து நாலாறு றைந்திற்
பரந்தநெறி யறுவகையு மொருவி நினைவரிதாம்
பரபதத்து ளுயிர்விரவப் பயிற்று மன்றே.

(இ—ள்.) ஞானவதியாயாதல் கிரியாவதியாயாதல் செய் யப்படும் ஔத்திரிதீக்ஷையும் ஸமயம் விசேஷம் நிருவாண மென மூவகைப்படும். அவற்றுட் சமய தீக்ஷையானது போகமோக்ஷங்களுள் இச்சித்தவற்றைப் பயப்பித்தற்குரிய மந்திரங்களை உபதேசக் கிரமமாகப்பெற் றனுஷ்டித்தற்

கும், விசேஷ தீக்ஷை அவ்வாறே சிவார்ச்சனை புரிதற்கும் கன்மயோகப் பயிற்சிக்கும் உரிமைப் படுத்துவனவாம். ஏனைய நிருவாண தீக்ஷையோவெனிற் பிறப்பிறப்புக்களிற் படுத்தும் புண்ணியபாவங்கள் வந்தேறத்தக்க விரிந்த மார்க்கமாகிய ஆறத்துவாக்களையுநீங்கி வாக்கு மனாதீத கோசரமாய் நித்தியமாயுள்ளசிவபதத்துள் ஆன்மாவானது இரண்டறக் கலந்து வாழ்தற்கு வேண்டப்படும் ஸாதகநெறியிற் பயிறற் குரிமைப்படுத்துவ தாகுமென்பதாம்.

சமய விரும்பியவரு மந்திராதிகாரம் விசேடம் அர்ச்சனாதிகார மியோகாதிகார மெனமேவு மெனவும் நிருவாணம் அறுவகையு மொருவி நினைவரிதாம் பொருவில் பர பதத்து னுயிர்விரவப் பயிற்று மெனவுங் கொண்டுகூட்டுக.

இரங்கல்—ஒலித்த லென்னும் பொருட்டாய் ஈண்டியம்புதன் மேற்று. 'நினை வரிதாம்' எனவே வாக்குக் கரிதா மென்பது தானே போதரும். 'பரபதத்து னுயிர்விரவப் பயிற்றும்' என்றதனால் ஆன்ம ஞானத்திற்குக் கோசரமாகு மென்பதாயிற்று. பொருவில் பரபதம்—ஸாலோக்கியாதி பதமுக்திகளைப்போலாத ஸாயுஜ்யமாகிய நித்தியமுக்தி.

## அத்துவாக்கள தியல்பு.

கலாத்துவாவாவது—அதீதத்தேகிடக்கும் ஆன்மாவிற்கு அனுபவம் உண்டாகும்படி பஞ்சமை முதல் வைகரியீறாகிய வாக்குக்களைத் தோற்றுவிக்குங் கருவிகளாகும்.

தத்துவாத்துவாவாவது — அவ்வாக்குக்களால் ஆன்மாவிற்கு அனுபவநிகழும்படி பிரவிர்த்திக்குங் கருவிகளாகும்.

புவனாத்துவாவாவது—தத்துவாத்துவாவின் பிரவிர்த்தியாற் கண்டுங் கேட்டும் அறியப்படும் பதப்பிராப்தி ஸ்தானங்களாகும்.

வர்ணாத்துவாவாவது—அவ்வாறு கண்டும் கேட்டும் அறிந்தவற்றி னியல்புகளையும் அதனைப் பெறுதற்குரிய வுபா

யங்களையும் உணரும்படி பயிலத்தக்க ஸாதனமாகிய வேதாகமாதிய நூல்களாகும்.

பதாத்துவாவாவது—அந்நூல்களா லறியப்படும் போகங்களாகும்.

மந்திராத்துவாவாவது — அவற்றுள் வேண்டப்படும் போகங்களைப் பெறும்பொருட்டு ஆன்மாக்களால் உபாஸிக்கப்படும் ஈசுவர மூர்த்தமாகும்.

இவற்றுள் மந்திராத்துவாவைச் சிறந்தெடுத்தோதுவது பேற்றையளிக்கும் பெருமை யுடைத்தாகலின். இவ்வத்துவாக்களை லயக்கிரமத்தான் மந்திரமுதலாக வைத்தோதுப. அத்துவசோதனையில் மந்திராத்துவாவையுஞ் சோதிக்கும்படி விதித்திருப்பது போகாபேக்ஷையால் ஈசுவரனிடத்தே சென்றிருக்கும் இச்சையைச் சுத்தீகரிக்கும் பொருட்டு.

இச்செய்யுள் நிருவாண தீக்ஷைபெற் றுடையரே இந்நூலையோதல் பொருளைக்கேட்டுச் சிந்தித்தல் சிந்தித்தழுந்திய பொருளைப் பெறுமாறு ஸாதகநெறியைத் தலைப்படலென்னு மூன்றற்கும் உரிமை யுடையரென்பதை யுணர்த்திற்று; ஆகலானும், ஸமயதீக்ஷைபெற்றுப் புராணாதிகளைக் கேட்டு அப்பொருளின்கண்ணே யழுந்தி அதனால் வேண்டப்படும் கிரியாயோகங்களைப் புரிதற்குக் காமக்குரோதாதிகளாற்றடைப்படாத ஆற்றலுடைப் பரிபாகம்வந்தவர்க்கே விசேஷதீக்ஷை உரித்தாவதெனச் சிவாகமங்கள் விதித்தலானும், ஞானநூல் கேட்போர் காமக்குரோதாதிகளி னீங்கினோரா யிருக்கவேண்டுமென ஞானநூன் முகத்துங் கூறவேண்டுவதில்லையென் றொழிவர் ஆசிரியன்மார்.

கிரியா யோகங்கட்குக் காமக்குரோதாதிகளாற் றடைப்படாதிருக்க வேண்டுமென்பது "கந்த வர்க்கமுங் கிளர்மணப் புகையுங் கவின்கொடீபமும் புனித மஞ்சனமுங், கொந்தவிழ்ந்த நன்மலரு மற்றுளவுங்கொண்டு மாயையின்

குணத்தி லொன்றிலரா, யைந்துசுத்தி செய்தகம் புறமிறை ஞ்சி யங்கியின் கடன் கழித்தருள் வழிநின், றிந்தநற் பெருங்கிரியை யன்புடனே யியற்ற வல்லவரெம் மருகிருப் பார்'' எனவும், "முக்குணம்புல னைந்துட னடக்கி மூல வாயுவை யெழுப்பிரு வழியைச், சிக்கெனும்படி யடைத் தொரு வழியைத் திறந்து தாண்டவச் சிலம்பொலியுடன் போய்த், தக்க வஞ்செழுத் தோரெழுத்துருவாந் தன்மை கண்டருட்ரும் பெருவெளிக்கே, புக்கழுந்தின ரெமதுருப் பெறுவார் புவியின் வேட்டுவனெடுத்த மென்புழுப்போல்'' எனவும், ஆளுடைய அடிகளாகிய வாதவூர் வள்ளலார்பாற் றிருவாய் மலர்ந்தருளியதனானும் இனிது விளங்கும். (ம)

நூல்செய்த வழியும் பயனும் பெயரும்.

கிரியையென மருவுமவை யாவு ஞானங்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்குமுண்மைச்
சரியை கிரியாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூபங் கண்
மருவியிடு முயர்ஞான மிரண்டா மாரு
மலமகல வகலாத மன்னு போதத்
திருவருளோன் றென்றதனைத் தெளியவோதுஞ்
சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே.

(இ—ள்.) காமியமாகச் செய்யப்படுந்தானமுதல் யோக மீறுகி யவற்றின் பயன்கள் முன்னர் இன்பமாகத் தோன் றினும் காலநியதிகளிற் படுதலின் வைத்து அநித்தியத்தாற் பின்னர்த் துன்பம்விளைத்தலின் அவ்வாறுகாத நித்தியவின் பத்தைப் பெறுதலே உயிர்க்குறுதியா மென்பதோர் ஞான முண்டாதற் கேதுவாவனவா மெனவும், நிஷ்காமியமாகச் செய்யப்படுந் தான முதலிய வெல்லாவற்றினுஞ் சிறந்த சரியை கிரியா யோகங்கள் உண்மை ஞானத்தைப் பெறு விப்பதாகிய சித்த சுத்தியைப் பயத்தன் மாத்திரையேயன்,

றி ஸாலோக்கியாதி பதமுக்திகளைப் பெறுவித்தலும் ஒரு தலையாமெனவும், சித்த சுத்தியாற் பெறப்படும் உண்மைஞானமும் மற்றெவ்வகை யுபாயங்களானுநீங்காத அஞ்ஞான நீங்கும்படி ஆன்மாக்களதுள்ளத்தே விட்டு நீங்காது ஸதோதயமாக விளங்குவதாகிய திருவருள் ஒருவகையும் அதனை அநுபூதியாகப் பெறுதற்குரிய நெறியை மயக்க மறவுணர்த்துவதாகிய சிவாகமங்கள் ஒருவகையுமாக இருவகைப்படுவன வாமெனவும், பக்குவான் மாக்களுணரும்படி ஸ்வாநுபூதிமான்களா லருளிச்செய்யப்பட்ட வழிநூல்கள் சாற்றுமென்பதாம்.

உலகறியச் செப்புநூல் கிளக்குமெனக் கொண்டு கூட்டுக. என என்பவற்றிற் பின்னையது மருவியிடுமென்பதனோடுஞ் சென்றியையும். உம்மைகள் வருவித்துரைக்க.

கிரியையென மருவுமவை—புறத்தொழில்போலவே அகத்தொழிலாய் நிகழும் இஷ்டதேவதாத்தியான முதல் யோகமீறாகியவை. யாவும் என்றது அவ்வகத்தொழில்களோடு புறத்தொழில்களாகிய தானமுதலிய ஸகல ஸத்கருமங்களையுந் தழுவிற்று. நிஷ்காமியமாகச் செய்பவை நித்தியப் பயனுக்கேதுவாகலான், உண்மைச்சரியை கிரியாயோகம் என்முர். தன்மையோர்—அஞ்ஞான ஸந்தேக விபரீதங்களின்றி விதிவழாது செய்து முடிப்போர். மருவியிடுமென்றது இச்சியாவிடினும் பயனளித்தல் ஒருதலையென்னும் பொருட்டு; அப்பொருட்டால் நிஷ்காமியமாகச் செய்யுஞ் சரியை கிரியாயோகங்களானேர் படும் பயன்களிற்றலைநின்றது சித்த சுத்தியென்பதே துணிபு. உண்மைஞானமென்பார் 'உயர்ஞானம்' என்முர். எனவே முந்தின ஞானம் உயிர்க்குறுதியாவதின்றெனஉணர்தன் மாத்திரைக்கே சாலும். உலகென்றது ஈண்டுப்பக்குவான் மாக்கண் மேற்று. செப்புதற்கு வினைமுதல் அவாய் நிலையாற் பெற்றும்.

·தெரித்த குருமுதல்வ ருயர்சிவ ஞானபோதஞ்
　செப்பினர் பின்பவர் புதல்வர் சிவஞானசித்தி
விரித்தனர் மற்றவர்க டிருவடிகள் போற்றி
　விளம்பிய நூ லவையிரண்டும் விரும்பி நோக்கிக்
கருத்திலுறை திருவருளு மிறைவனூலுங்
　கலந்துபொது வுண்மையெனக் கருதியானு
மருத்திமிக வுரைப்பன் வளர் விருத்த நூறு
　மாசில் சிவப்பிரகாச மாகுமன்றே.

(இ—ள்.) அருள்பெறத்தேடும் அன்புடையார்க்கு அறிவுடையோராற் றெரிவிக்கப்பட்ட ஆசிரிய சிரேஷ்டவர்க்கத்துட் டலைவராகிய ஸ்ரீ மெய்கண்ட தேவநாயனூர் சிவ ஞானபோதமென ரௌரவாகமத்து ஞானபாதத் தெழுந்த பன்னிரு சூத்திரங்களையும் தமிழின் மொழிபெயர்த்து ஏது திருஷ்டாந்தங்களோடு வார்த்திகப் பொழிப்பும் உரைத்தருளினர். அவரது மாணுக்கராகிய அருணந்தி சிவாசாரியர் அதனை விரித்துச் சிவஞானசித்தியாரென வழிநூல் செய்தருளினர். அவரது மாணுக்கராய் எம்மையடிமைகொண்டருளிய மறைஞான ஸம்பந்த சிவாசாரியரால் யான் பெற்றபேறு உலகம் எளிதிற் பெற்றுய்ய வேண்டுமென வெழுந்த பேராசையே காரணமாக ஆசிரியன்மாரது திருவடிகளை வணங்கிக்கொண்டு முதனூல் வழிநூலிரண்டன் கருத்தும் உள்ளபடியே புலப்படும் வண்ணம் விருப்புடனாய்ந்துணர்ந்து அதனோடு ஏனையவேத சிவாகமங்களது அந்தரங்கங்களையும் அருளிறையடிகளா லறிவுறுக்கப்பட்டு எனதுள்ளத்தே ஸ்வானுபவமா நிகழும் பொருளியல்பினையுங் கலந்து நோக்கி அவற்றுள் ஆசிரியர் உபதேசித்த மாத்திரையே பரிபாகிகள் பலரும் ஒருங்கே யுணரத்தக்க திரிபதார்த்தங்களது தூலமாகிய பொதுவியல்பு இவையெனவும் தனித்தனி ஸாதகஞ் செய்து அவரவரதுள்ளத்தே ஸ்வானுபவமா யுணரத்தக்க சூக்குமமாகிய சிறப்பியல்பு

இவையெனவும் நிச்சயித்துப் பகுத்து இந்நூல் செய்கின்றேன். இதனை ஐயந்திரிபற வோதியுணர்வார்க்கு அதுகாறும் பிறப்பிறப்புக்களை விருத்திசெய்துவந்த அறியாமை வலியழியும். அழியவே ஞானசாரியர்பாற் றேட்டமுண்டாம். அத்தேட்டத்தால் அவரையடைந்து அவராலனுக்கிரஹிக்கப்படும் உபதேசநெறியைக் கடைப்பிடியாக்கொண்டு அநுஷ்டித்துப் பெறுவதாகிய சிவானுபவம் வாஸனாமலத்தாற் றடைப்படாது வ்வானுபூதியாக விளங்குமென்பதாம்.

அருத்திமிக என்பதனை விரித்தனர் என்பதன் பின்னாகக் கூட்டுக.

கருத்திலுறை திருவருளுங் கலந்தென்றதனுன் அருளிறையடிகளாகிய மறைஞானஸம்பந்த சிவாசாரியரது திருவடிகளையும் வணங்கிக்கொண்டாரென்பது தானேபோதரும்

உயர் சிவஞானபோதம்—ஆன்மாக்களது பரிபாக பேதங்கட்குத் தக்கபடி பொருள் பலபடத்தோன்றி மயங்காவண்ணம் ஏதுதிருஷ்டாந்தங்களோடுஉரைத்தருளிய வார்த்திகப்பொழிப்பாற் பொருளைவரை யறுத்துணர்த்து மேம்பாட்டினையுடைய சிவபோதம். இறைவனூல்—இறைவனாலருளிச்செய்யப்பட்ட வேதசிவாகமங்கள். நூல்ஜாதியொருமை. திரிபதார்த்தச் சிறப்பியல்புகள் உள்ளுணர்வாயன்றி விளங்கப்பெறுதனவாகலான் உண்மையெனப்பட்டது. கருதல்—கண்டு நிச்சயித்தன் மேற்று. அருத்திமிகிற்பக்குவிகளை முன்னூல்களாற் றெருட்டலாமாகவும் இந்நூல் செய்தது உரை மேலுரைக்கின் ஊக்கமுண்டாகி ஒல்லையிற் பயின்று பயனடைதல் உலகநடையிற் காண்டலானென்பார் யானுமுரைப்பனென்றார்.

வளர்விருத்தமென்பது பிறப்பிறப்புக்களை வளர்ப்பதாகிய அறியாமையின்மேலும், ஆசிலென்பது வாஸனைக்ஷயத்தின்மேலும், ஆகுமென்பது சிவானுபூதியாதன்மேலும், குறிப்புமொழிகளாச் சார்ந்து நிற்பனவாக்கொள்க.

அன்றே—நூற்பொருளுணர்ந்த அப்பொழுதே. அறியாமையை விருத்தமென்றது இழிபுடைத்தாகலின்.

நூற்பொருளை ஐயந்திரிபற வோதியுணர்ந்து பரிபாக முதிர்ந்தார்க்கும் அப்பொருள் ஸ்வானுபவமாதல் ஆசிரியரை யின்றியமையாவாகலான் ஞானசிரியராற் பெறப்படுதல் வருவிக்கப்பட்டது.

உயர் சிவஞானபோதஞ் செப்பினர் சிவஞானசித்தி விரித்தனர் விளம்பிய நூலவையிரண்டும் விரும்பிநோக்கிக் கருத்திலுறை திருவருளும் இறைவனூலுங் கலந்து பொது உண்மையெனக்கருதி யுரைப்பனென்றமையான் இஃது புடைநூலென்பதூஉம், நூல்செய்தவழியும், வளர்விருத்தநூறும் ஆசில் சிவப்பிரகாசமாகுமென்றமையான் நூற்பயனும், பெயரும் இச்செய்யுளானுணர்த்தியவாறு.

இறைவனூலுங் கலந்தெனவே சுருதியும், விளம்பிய நூலவையிரண்டும் விரும்பிநோக்கியெனவே குருவாக்கும், கருத்திலுறை திருவருளுங் கலந்தெனவே ஸ்வானுபவமுமாகிய மூன்றும் ஒத்துக்கூடிய பொருள் இந்நூலின்கண்ணே அமைக்கப்பட்டதென்பது கருத்து.

நூலாசிரியர் நான்முகத்துப் பயனை நுவலாதொழியாராகலானும், நூலாசிரியரே எண்ணுரைத்தல் வழக்கின்கணின்மையானும், இந்நூல் நூற்றொருசெய்யுளா யமைந்திருத்தலானும் நூறுமென்பதை எண்ணின்மேல்வைத்துப் பொருள்கோடல் இயைபாகாமை காண்க. (கஉ)

## அவையடக்கம்.

தொன்மைய வாமெனு மெவையு நன்றாகா வின்று, தோன்றிய நூலெனு மெவையுந் தீதாகா துணிந்த, நன்மையினர் நலங்கொண் மணிபொதி யு மதன்களங்க, நவையாகா வெனவுண்மை நயந் திடுவர் நடுவாந், தன்மையினர் பழமையழ காராய்

ந்து தரிப்பர், தவறுநலம் பொருளின்கட் சார்வா ராய்ந்தறித, லின்மையினுற் பலர்புகழி லேத்துவ ரே திலருற், றிகழ்ந்தனரே லிகழ்ந்திடுவர் தமக்கெ னவொன் றிலரே.

துணிந்த நன்மையினுர் நல்ந்தவறு பொருளின்கட் சார் வார் நலங்கொண்மணியொதியு மதன்களங்க நவையாகா வென வுண்மை நயந்திடுவர் நடுவாந்தன்மையினுர் பழமை யழகாராய்ந்து தரிப்பர்தமக்கென வொன்றிலர்ஆய்ந்தறிதலி ன்மையினுற் பலர் புகழிலேத்துவரே திலருற்றிகழ்ந்தன ரேலிகழ்ந்திடுவர் தொன்மையவாமெனுமெவையு நன்றாகா வின்று தோன்றிய நூலெனுமெவையுந் தீதாகாவெனக் கொண்டு கூட்டுக.

(இ—ள்.) அரதனங்கொள்ளுமிடத்து நன்மையையே பயனுகத் தேர்ந்த உத்தமர் குணங்குற்றங்களைப் பொருண் மேல் வைத்தாராய்வராகலான் அணிவோர்க்கு நற்பயனை யளித்தற்குரிய அரதனத்தினியல்பு தோன்ருவண்ண மறை த்திருக்கும் அதனது மலினத்தான் அவ்வரதனங்குற்றமு டைத்தாகாவெனத் தேர்ந்து அதனுனாகும்பயனையே விரும் பித் தக்க கருவியினமைத்து மலினத்தை நீக்கிப் பொருள் விளங்கக்கண்டு அணிந்துகொண்டு பயனடைவர். மத்திமர் காலப்பழமையையும் வடிவச்செப்பத்தினையும் உடைத் தோவன்ருே வென்பதையே ஆராய்ந்தணிவர். அறிவிலிக ளாகிய அதமர் ஆராயுமாற்றலிலராகலிற் பொருள் எத்த ன்மைத்தாயினும் அப்பொருளுடையார்க்கு உற்ருர் பலரா னும் புகழக்கேட்கிற்ருமும் புகழ்தலும் உருதார் பலரானும் இகழக்கேட்கிலிகழ்தலுஞ் செய்வர். அதனையொப்ப அறி டையார் காலப்புதுமையானும் சொல்லெச்ச முதலியவற் ருற் பொருடோன்ருமையானும் இந்நூல் குற்றமுடைத் தெனத் தணவாது இலக்கணக்கருவியினமைத்துப் பொ ருள்விளங்கக் கண்டு அனுஷ்டித்துப் பயனடைவர். ஆராயு மறிவினைப்பெற்றிருந்தும் பொருணலநோக்கிப் புணர்ந்து

இன்பநுகராது பெருரைப்போலக் காலநீடிப்பு நுதற்கவி னும் இன்றென்பதையே காரணமாக்கி நூலைக் கைவிடு வோர்க்கு யாம் நுவலுமாறென்னை. அறிவிலிகள் எவ்வாறி யம்பினு மியம்புக வென்பதாம்.

பழமை என்றதனோடு அழுகாராய்ந்தெனவும் பகர்ந்தத னால் தொன்மையவாமெனும் என்றதன்பின்னாக அணியவா மெனும் எனவும், இன்று தோன்றியநூலெனும் என்றதன் பின்னாக அணியுடைத்தல்லவாமெனும் எனவுங் கொள்ளக் கிடப்ப. ஆகலான் எனவும் அதனை யொப்ப எனவும் விரித் துரைக்க.

கற்பவர்க் கெளிதாகும் வண்ணஞ் சுருங்கச்சொல்லிய இந்நூற்பாவினங்களிற் சொல்லெச்ச முதலியவை அமை தியான் வந்தனவென்பார் 'பொதியுமதன் களங்கம்' என வுவமித்தார். நலங்கொண்மணிபொதியு மதன்களங்க நவை யாகாவென வுண்மை நயந்திடுவரென்றதனான் உவமையி னும் உவமேயத்தும் கருவியினமைத்துப் பொருள் விளங் கக் கண்டென்பது வருவிக்கப்பட்டது. தவறு—ஏற்புழிக் கோடலாற்றீங்கின்மேற்று. நயந்திடுவரென்றதுபயன்பெறு மாறு விரும்பி அணிந்துகொள்வரென்னும் பொருட்டு. ஒன்று—ஒப்பற்றதென்னும்பொருட்டாய்அறிவின்மேற்று.

நடுவாந்தன்மையினாரென்றதனால் தமக்கெனவொன்றிலர் கடையாந்தன்மையினராகிய அதமரென்பதூஉம், இவ்விர ண்டானும்எனையோர்உத்தமரென்பதூஉம்உணரக்கிடந்தன

ஆராயு மறிவினைப் பெற்றிருந்தும் பொருணலநோக்கிப் புணர்ந்தின்பநுகராது பெருரைப்போலக் காலநீடிப்பும் நுதற்கவினும் இன்றென்பதையே காரணமாக்கி நூலைக் கைவிடுவோர்க்கு யாம்நுவலுமாறென்னையென்பது 'தொன் மையவாமெனு மெவையு நன்றாகாவின்று தோன்றியநூலெ னுமெவையுந் தீதாகா' என்றதன் குறிப்புப்பொருள். (கரு)

---

பாயிரம் முற்றிற்று.

## பதியியல்பு.

பலகலையா கமவேத மியாவையினுங் கருத்துப்
பதிபசுபாசந் தெரித்தல் பதிபரமே யதுதா
னிலவுமரு வுருவின்றிக் குணங்குறிகளின்றி
நின்மலமா யேகமாய் நித்தமாகி
யலகிலுயிர்க் குணர்வாகி யசலமாகி
யகண்டிதமா யானந்த வுருவாயன்றிச் [த்
செலவரிதாய்ச்செல்கதியாய்ச்சிறிதாகிப்பெரிதாய்
திகழ்வதுதற் சிவமென்பர் தெளிந்துளோரே.

(இ—ள்.) வேத சிவாகமங்களும் அவற்றின் வழித்தாய பலவுமய விந்தாந்தங்களும் அவ்விரு வகையினையும் உணர்தற்கு வேண்டப்படுந் தருக்கம் வியாகரணமுதலிய கருவிகளுமாகிய நூல்க ளெல்லாவற்றினுடையவும் அந்தரங்கமானது, பதி பசு பாசமென்னு முப்பொருட்களதியல்பினை யுணர்த்துவதேயாம். ஆகலான் அவ்வியல்பினையே கற்பவர்க்கெளிதாகும் வண்ணங் காட்டப்புகுந்து முதற்கட்பதியினதியல்பினைப் பகர்கின்றும். பதியாவது, பசு பாசங்களோடொருங்குவைத் தெண்ணப் படுவதாயினும் அவ்விரண்டற்கு மேற்பட்டதேயாம். எவ்வாற்றுனெனிற் பசுக்களைப்போலப் பாசமாகிய அறியாமையும் அவ்வறியாமையாற் பயிற்சிக்கின்றியமையாச் சிறப்பிற்றும் வேண்டப்படும் பஞ்ச சரீரங்களும் அதுபற்றி ஒப்பாருமிக்காரும் உளராதலும் இல்லாததாய், இல்லையாகவே தானே எவற்றினு மிக்கதாகிப் பசுக்கள் வினைப்பயன்களை யனுபவிக்குமாறு உடனின்று செலுத்தியும் தான் விகாரப் படுவதல்லாததாய், அவ்வாறு பசுக்கடோறுந் தனித்தனி நிற்பினு முதலொன்றேயாய், வினைப்பயன்களை யனுபவிக்குங்காற் பசுக்கட்கு நேரிடுங் குறைபாடுகளைத் தீர்க்குந் தகைமைத் தாதலே யன்றித் தனக்குஒருவாற்றுனுஞ் சற்றுங் குறைபாடுடைய தல்லாததாய், அத்துணைப்பெருஞ் சிறப்

பிற்றுமெனக் கேட்டு அதனைக்கூடித் தமது குறைபாடுகளை விரைவிற்றீர்த்துக்கொள்வேமென வுன்னுவார்க்கு எதிரிட்டுக்காணக்கிடையாததாய், அவ்வழியாற் காணக்கிடையாத தாயினும் ஆசாரியரதனுக்கிரஹநெறியிற் செல்வோர் கண்டு கூடி யனுபவித்துக் களிக்கும் பயனாய், பயனுதற்கண் எல்லையற்றதாயினும் அவ்வியல்பனைத்தும் பசுக்களதுள்ளத்தே யமையுமாறுவியாப்பியமாகுவதாய், வியாப்பியமாயிடினும் பசுபாசங்களனைத்துந் தன்னுள் வியாப்பியமாகும் வண்ணம் வியாபித்தெழுந்தும் நிலை பெறுவதாய், அத்தகைய வியாபகத்தன்மையாற் புறப் பொருளாகியுங் கட்புலனுக்கெய்தாமையான் எவ்வொளிபற்றிக் காண்டுமெனக்கருதுவார் கருத்திற்கும் அமையாது ஸோமஸூரியாக்னிகளையும் ஜ்வலிப்பிப்பதாகிய ஸ்வயம் பிரகாசமாய் நிகழ்வதாகலின். அதனை வேதாந்த மஹாவாக்கியத்தின்றற் பத லக்ஷியார்த்தமாகிய சிவமென ஸ்வானுபூதிமான்கள் செப்புவரென்பதாம்.

இதனாற் பசுவிற்பரமாகியபதி பசுவானன்றிப் பயன்படாத பாசத்தினும் பரமென்பதுபகராமலே இனிதுவிளங்கும்.

வேதாகம பலகலையாவையினுங்கருத்தெனவும், அது தானின்மலமாய் நிலவு மருவுருவின்றிக் குணங்குறிகளின்றியேகமாய் நித்தமாகியலகிலுயிர்க்குணர்வாகி எனவுங் கொண்டு கூட்டுக.

பசுக்கட்குப்போல அனுமானப் பிரத்தியக்ஷங்களான் யாண்டுங் காட்சிப்படு மாயாகாரியமாகிய ஸ்தூல சூக்குமங்களில வென்பார் 'நிலவுமருவுருவின்றி' எனவும், தம்பாற் பசுக்கள் கொள்ளும் அன்பு வன்புக்கண் மாத்திரையானே அவர்க்கு மகிழ்ச்சி வாட்டங்களுண்டாவதற்கேதுவாகிய இன்பத்துன்பங்கள் தமதாணையாற்சென்று கூடுதல் ஒருதலை யாதலைநோக்கி இரக்கத்தால் அவ்வன்பு வன்புக்கண்மேற்றேயன்றி அவை காரணமாய் நிகழும் உபசார வபசாரங்களிற் றம்பொருட்டாய விருப்பு வெறுப்புக்களை

யுடையனன்மையான் ரஜோகுண தமோகுணங்களும் அனு தி பெத்தராய்க்கிடக்கும் பசுக்கட்கிரங்கி அவரைத்தனது திருவடிகூட்டும்பொருட்டு உதாஸீனமின்றி ஐந்தொழிலிய ற்றலின் ஸத்துவகுணமுமின்மையாற் குணசரீரமும் இயல் பாகவே விளங்கும் இச்சாஞானக் கிரியைகளை யுடையோ னாகலாற் கலாதிகளும் ஸ்வயம்புவாகலாற்காலமும் எவ ற்றிற்கும் ஸாக்ஷிமாத்திரமாயிருப்போனாகலான் நியதியு மாகிய கஞ்சுக சரீரமும் இன்றென்பார் 'குணங்குறிகளின் றி' எனவும், எவர்க்கும் ஸாரூப்பியாதி போகங்களையும் பிரஸாதித்தருள்பவனாகலான் வாழ்நாளிற் போகத்தான் ஒப்பாரின்மைபற்றி ஏகமாய் எனவும், வாழ்நாளில் ஒப்பாரி லராயினும் வருநாள் வீழ்நாட்களில் ஒப்பாரிலராதல் உலகத்தின்மையான் ஆண்டைக்கு இவன் எத்தன்மைய னென்ன ஐயநிகழாமைப் பொருட்டுக் கபால மாலையினை யுடைய காலாந்தகனாகலான் இவனோடொப்பாரில்லை யென்னும்படி அந்நாட்களை யுடையானல்லனென்பார் 'நித்தமாகி' எனவும், "அறிவுடையாரெல்லாமுடையா ரறிவிலாரென்னுடையரேனுமிலர்" என்றவாற்றான் அறி வின் மிக்காரே மிக்காரெனப் படுதலின் இவனின் மிக்காரில்லையெனலாக எவர்க்கும் அறிவாயிருப்பனென் பார் 'அலகிலுயிர்க்குணர்வாகி' எனவும், "சந்தத முநீக்கமின்றி யாடிநிழலசைப்பான்போற் புவனமாக்கிய சைத்தருளுமாணை" யோனாகலின் யாண்டும் அவிகாரியே யாமென்பார் 'அசலமாகி' எனவும், எண்ணிறந்த கடங்க டோறு நிறைந்திருக்கும் ஆகாயத்தையொப்ப எண்ணிறந்த பசுக்கடோறும் உணர்வாய் நிறைந்திருப்பினும் முதல் ஏகமே யென்பார் 'அகண்டிதமாய்' எனவும் எவராயினும் எப்பொருளையாயினும் இன்பஸாதனமெனக் கருதியே யீட்டுவராகலின் இன்பத்தின் மேற்றேயாய குறைவு நிறைவுகள் இவனுக் கின்றென்பார் 'ஆனந்த வுருவாய்' எனவும், எதிரிட்டுக் காணத்தோற்றும் பொருள் கெடுதலும் அக்கேட்டினூற் றுன்பம் விளைதலும் ஒருதலையாகலின்

இன்பாகாரமாகிய இவன் அவ்வாருகில னென்பார் 'அன்றிச் செலவரிதாய்' எனவும், ஆயின் இன்பாகாரமாகிய அவனை எவ்வாறடைதுமெனத் தளராது இயம்புநெறியே செல்வார்க்கு எய்துவ னென்பார் 'செல்கதியாய்' எனவும், கதியி னியல்பு அளத்தற்கரியதாயினும் அவ்வாறு கதியாதல் உள்ளத்தின்கண்ணே யாகலாற் 'சிறிதாகி' எனவும், அக்கதிக்கண்ணே பசு பாசங்கள் தோன்ருதடங்குதலாற் 'பெரிதாகி' எனவும் அருளினர்.

பசுக்களின் பொருட்டுத் தனுகரண புவனபோகங்களாய் அவனுற் காரியப்படும் ஜடமாகலாற் சித்தாகிய அவனை மயக்கு மாற்றலின்மையின் மாயையாகிய காரண சரீரமும் அவனுக் கின்றென்பது உடன்கொண் டுரைக்கப்பட்டது. அதனை ஓதாதொழிந்தமை அம்மாயை கடகலசாதிகட்கு மண்ணைப்போல்வதேயன்றிப் பிறிதன் றென்பதையும் சொற்பல்காமையையுங் கருதி யென்க.

பரமே என்னும் ஏகாரம் தேற்றம். அதுதான் என்றது சுட்டி யழுத்தல். நிலவுதல்—காட்சிப் படுதல். அருவத்தான் வந்து வந்துகழியும் உருவத்தைப்போலாதுபரமுக்திகாறு நிலைபெறுஞ் சிறப்புடைமை நோக்கி அருவத்தை முன் வைத்தார். இச்சாஞானக்கிரியைகளை விளக்கி வினைப்பயனுய் வரும் போகங்களை யூட்டுதலின் வைத்துப் பசுவைப் பாசமாகிய ஜடத்திற் பிரித்துக்காட்டி நிற்றலாற்கஞ்சுக சரீரம் பசுவிற்கு அடையாளமாதல்பற்றிக் குறியெனத் தொழிலாகுபெயர் பெற்றது. நின்மலம்—அனுதிமலமுக்தம். அன்றுதல்—எதிரிடுதல். தத் என்னும் வடமொழி ஈண்டுத் தற்றெனத்திரிந்தது. தற்சிவம் இருபெயரொட்டுப் பண்புத் தொகை.

பதி பரமே அதுதான் தற்சிவமென்பர் தெளிந்துளோரென்றமை வேதாகமப் பொருள் ஒன்றே யென்னுந் துணிபான். அது "வேதமோ டாகம மெய்யா மிறைவனூலோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக நாதனருளவை

நாடி விரண்டந்தம் பேதம தென்பர் பெரியோர்க் கபே
தமே" என்றருளியவாற்ருன் இனிது விளங்கும். (௧)

நீடுபராசத்தி நிகழிச்சா ஞான
நிறைகிரியை தரவதனை நிமலன் மேவி
நாடரிய கருணைதிரு வுருவமாகி
நவின்றுபல கலைநாதவிந்து வாதி
கூடுமொளி வளர்குடிலை மாயைமேவிக்
கொடுவினை கொடனுகரண புவனபோகம்
பீடுபெற நிறுவியவை யொடுக்கு மேனி
பிறங்கிய நிட்களசகளப் பெற்றியாமே.

(இ—ள்.) சிவமெனப்படும் பொருட்குப் பதியெனப் பெயர்வந்ததெவ்வாற்றனெனின் அநாதிமல முக்தமாயிருக்கும் அச்சிவம் அநாதிமல பெத்தமாய்க் கிடக்கும் பசுக்களை அப்பெத்தத்தினின்று நீக்கித் தனது திருவடி கூட்ட வேண்டுமெனக் கொண்டருளிய திருக்குறிப்பின் வழியே அச்சிவத்தொடு தாதான்மியமாய் நிகழும் சிற்சக்தியானது விசிரும்பித்துப் பராசக்தியாகி இச்சாஞானக்கிரியைகளாய் விளங்க அச்சக்திகளையுடையானுப்ச் சுட்டற்கரிய கருணையையே சுட்டற்குரிய திருமேனியாக்கொண்டருளி வேத சிவாகமங்களை யருளலும் காரியப்பாட்டிற்குரிமை பெற்றிருக்கும் இருவகைமாயைகண்மேலும் வைத்த ஸங்கற்பமாத்திரையானே சுத்தமாயையால் நாதமுதல் சுத்தவித்தையீருகிய பஞ்சதத்துவங்களையு நிருமித்து அவற்றினிடமாக நிஷ்களம் நிஷ்களஸகளம் ஸகளம் என மூவகைத்திருமேனிகள் கொண்டுவீற்றிருந்தருளி அசுத்தமாயையான் அநாதிகன்மங்கொடுக்கப் பசுக்கட்கனுபவமாமாறு இன்பத்துன்பப் பயன்களைக் கொள்கின்ற தனுகரண புவன போகங்களைச் சிருஷ்டித்துக் கூட்டி ஸ்திதித்து மீட்டுஞ் சிருஷ்டிக்கவேண்டாப் பரிபாகம்வந்துழி அவற்றை ஸம்ஹாரி

த்துப் பசுக்களைத் தனது திருவடி கூட்டி வாழ்வித்தலுஞ் செய்யுமாகலினென்பதாம்.

நிமலன் பீடுபெற நீடுபராசத்தி நிகழிச்சாஞான நிறைகிரியை தரவதனை மேவி நாடரிய கருணை திருவுருவமாகி பலகலை நவின்று நாதவிந்து வாதிகூடுமொளிவளர் குடிலை மாயை மேவி பிறங்கிய நிட்கள சகளமேனிப் பெற்றியாம் வினைகொடு கொடனுகரண புவனபோக நிறுவியவை யொடுக்குமெனக்கொண்டு கூட்டுக.

மேவி என்றது குடிலை என்பதனோடுஞ் சென்றியையும். அதன்பின்னுக அக்குடிலையானென விரித்தும், நாதவிந்து வாதிகளை யிரட்டித்து நிறுவி என்பதனை இயைத்தும், தனுகரண புவனபோகத்தையிரட்டித்துக் கூடுமாயையென இயைத்தும், மேவி என்றதின்பின்னுக அம்மாயையானென விரித்தும் உரைத்துக்கொள்க.

பீடுபெறுதல்—ஏற்புழிக்கோடலாற் சிவபதப் பேற்றின் மேற்று—அப்பேற்றிற்குரிமைப்பொருள் வருவிக்கப்பட்டது. நீடுதல், விசிரும்பித்தல், விரிதல், என்பன ஒருபொருட் கிளவி. நிகழ்தல்—பசுக்களதைப்போலாது யாண்டும் ஒருபெற்றித்தாய் விளங்குதல். நிறைகிரியை—ஸங்கற்ப மாத்திரையயானே அவ்வாறே நிரம்புங்கிரியை.

நீடுபராசத்தி நிகழிச்சாஞான நிறைகிரியை தரவெனவே பசுக்கட்குப்போல மாயாகாரியங்களானன்றித்தாதான்மிய சக்தி ஸ்வயமாகவே சிறப்புவகையான் விளங்கியவென்பதூஉம், அதனைநிமலன்மேவி எனவே அச்சக்திகளையுடையனுதல் பசுக்களை உய்விக்கும்பொருட்டேயன்றித் தன்பொருட்டன்றென்பதூஉமாயிற்று.

அனுமானத்தானன்றிக் காட்சியளவைக்கெய்தாததென்பார் 'நாடரியகருணை' யென்ருர். ஏனையநூல்களனைத்தும் வேதசிவாகமங்களின் வழியாய் விரிந்தனவேயன்றி வேறன்றென்பதுதோன்றப்பலகலைநவின்றென்ருர். அது "வேதநூல் சைவநூலென்றிரண்டேநூல்கள் வேறுரைக்கு நூலிவற்

றின் விரிந்த நூல்களாதி நூலநாதி யமலன் றரு நூலிரண்டும்"
என்றருளியதனாற்காண்க. பலகலை—பலவாக விரிந்துநின்ற
கலையெனக் காரணப்பெயராகக்கொள்ளினுமமையும்.

கூடுதல்—தண்ணீர்க்கலப்பான் வனைதற்குரிமை பெற்றி
ருக்கும் மண்ணையொப்பச் சிற்சத்தியினாவேசத்தான்
நாதவிந்து வாதிகளாய்க் காரியப்படுதற்கு உரிமைப்பாடு
டைத்தா யிருத்தல். படம்குடிலானாற்போல நாதவிந்துவா
திகளாய் விளங்கி விரியுஞ் சுத்த மாயை யென்பார் 'ஒளிவ
ளர் குடிலை' என்றார். மலகன்மங்களோடு விரவிய அசுத்த
மாயாகாரியத்தி னீங்கி யடைந்தார்க்கு அறிவு பெருகுமிட
மாகலின் அவ்வாறோதினா ரென்னலுமாம். நாதவிந்துவாதி
கூடுமுரிமைசிற்சத்தியாற் பெறப்பட்டமையின் சிவம் மேவு
தல் ஸங்கற்பத்தின் மேற்றாம்.

நிட்கள சகளப்பெற்றியா மென நிகழ்த்தினமையான்
இனம்பற்றி நடுவணின்றதுங் கொள்ளப்படும். அவரவர்தவ
த்தின் தார தம்மியத்திற் கேற்பக் காட்சிப் புலனாம்பயனாய்
வருவதாகலிற்பிறங்கியநிஷ்களஸகளப்பெற்றியாமென்றார்.

வினை—அநாதி கன்மத்தின் மேற்று. கொடுக்க எனவும்
கொள்கின்றனவும்விரித்துரைக்க. கொள்வதற்குச்செயப்
படுபொருள் வருவிக்கப்பட்டது.

கரணமென்னும்பொதுக்கூற்று உள்ளந்தக்கரணங்களா
கிய கலாதிகளையும் புறக்கரணங்களாகிய இந்திரியங்களையுந்
தழுவி நிற்கும். புவனம்—சிவபெருமான் ஸகளீகரித்தெழு
ந்தருளியிருக்குந் திருக்கைலாய முதலிய பதப்பிராப்தி
ஸ்தானங்கள். போகம்—ஆண்டாண்டுப் பெறப்படும் ஸா
ரூப்பியாதி பதப்பேறுகள். புவனம்—இந்திரியங்களென
வும், போகம்—சப்தாதிய விஷயங்க ளெனவும், புகறலு
மொன்று ; அது இந்திரியங்களா னன்றி அநுபவிக்கப்
பெறாத சப்தாதியவிஷயங்களே மேற்கூறிய புவனங்களிட
மாகநின்றும் அநுபவிக்கப்படும் போகமாகலின். அவ்விரு

திறங்களின் முன்னையதை அண்டத்தின்மேலும் பின்னை யதைப்பிண்டத்தின்மேலுமாகப்பகுத்துவைத்துக்கொள்ள லுமாம்.

நிறுவியதனுைரும் பயன் நிலையானன்றிப் பெறப்படா மையாற் றிதித்தென்பது தானேபோதரும். நிறுவி என்ப தனை யிரட்டித்துக்கொள்ளலுமாம். அழிக்கு மென்னுது ஒடுக்கு மென்றதனுல் அது சூக்கும சரீரங்களு முளப்படு மஹா ஸம்ஹார மளவுஞ் செல்லும். பதியா லொடுக்கப் படுங்கரணபுவன போகங்களோடு தனுவையும் ஒருங்குவை ந்தோதியது நமது குலதெய்வங்களாகிய ஆளுடைய பிள் ளையார் முதலிய பரமாசாரியன் மார்பேறும் அடங்குதற் பொருட்டு. திரோபாவானுக்கிரஹங்களை அவ்வவற்றின்கா ரியங்களாகிய நிலையிறுதிகளி னடக்கி மூன்ருக மொழிந் தார்.

பலகலை நவின்ற பின்னர் நாதவிந்து வாதி நிறுவியதென் னின் நவிலுங்காற் கேட்போ ரின்மையானும் நிறுவிய பின் னர் நவின்றதென்னின் நவிலுங்காறும் வரம்பறியாது உல கம் மயங்குமாகலானும் இரண்டும் ஏககாலத்திநிகழ்வதெ ன்பதே துணிபு.

அருட்டிருமேனியி லுதித்த வேத சிவாகம வொலிக ளும் அருளே யன்றி மாயா காரியமாகா. அற்ருகலினன்றே வேத சிவாகமங்களை ஸ்வயம்புவென விளம்புவது. (௨)

ஈங்கிது வென்றது கடந்த வியல்பினுனு
மீறுமுத னடுவொன்று மிலாமையானு
மோங்கிவளர் ஞானமய னுதலானு
முண்மைபிறர்க் கறிவரிய வொருமையானுந்
தாங்கரிய வெறுப்பினெடு விருப்புமெல்லாஞ்
சார்வரிய தனிமுதல்வ னுகலானு
நீங்கலரு முயிர்க்குயிராய் நிற்றலானு
நிறுத்திடுவ னினைந்தவுரு நிமலன்ருனே.

(இ-ள்.) ஒருவன் ஓரேகாலத்துப் பலவிதமான வடிவங்களைக்கொண்டுநின்று பலவிதமானதொழில்களிற் பயில்வதெவ்வாற்றாற் கூடுமென்னிற் பதி தேசகால தேஹபோக குணாதீதனாய் ஸர்வ வியாபகஜ்ஞானசரீரியாய் நிற்றலாற் றன்னாலாதல் எதிரிட்டறியவொண்ணாவண்ணம் பசுக்களெவற்றினோடும் அனன்னியமாகி அவற்றி னதியக்கத்திற்கின்றியமையாச் சிறப்பினனா யுடனிற்போனாகலாற் பிறரானாதல் தடைப்படாத ஒப்பு முயர்வு மின்றிய ஓரே முதல்வனாகலின் அவன் பசுக்களை யுய்விக்கும்பொருட்டுத் திருவுள்ளத்திற் குறித்தவாறே ஏககாலத்தில் எண்ணிறந்த விதமானதிருமேனிகளைக்கொண்டு நின்று எண்ணிறந்தவிதமான தொழில்களை யியற்று மியல்புடையோனாதற் கிழுக்கின்றென்பதாம்.

ஈங்கென்றது தேசத்தையும், ஈறுமுத னடு வென்றது காலத்தையும், இது வென்றது தேஹத்தையும், ஒன்றுமென்றது காலத்தினோடியை புடைத்தாகிய நியதியெனப்படும் போகத்தையும், வெறுப்பினொடு விருப்பு மென்றது தமோகுண ரஜோ குணங்களையும், எல்லாமென்றது ஸத்துவ குணத்தையும், பிறர்க்கறிவரிய ஒருமை யுண்மையென்றது அனன்னியமாய்நிற்குந் தன்மையையும், உயிர்க்கு நீங்கலரு முயிராய் நிற்ற லென்றது கண்ணொளிக்கு ஆன்மபோதம்போல் உடனாய் நிற்றலையும், தனிமுதல்வனென்றது ஒப்புயர்வுகளின்மையையும் உணர்த்திற்று.

பசுக்களது சூழ்ச்சி எத்துணைப் பெரியதாய் வளரினும் அத்துணையும் வியாப்பியமாம்படி வியாப்பித்தெழுஞானமே திருமேனியாக வுடைய னென்பார் 'ஓங்கி வளர் ஞானமயன்' என்றார். குணமென்னுங் குன்றேறி நின்றாரது வெகுளி கணமேயும் வெகுளப்பட்டாராற்றம்பான்மேவாது காத்த லரிதாமாயிற் குன்றேற்றி நிற்பிப்போனதுவெகுளி இன்னவாறுமென வியம்புதற் கரிதாதல்பற்றித் தாங்கரிய வெறுப்பு' என்றார்.

நிறுத்திடுதல்—தோற்றம் நிலையிரண்டற்கும் பொதுக் கூற்று. 'நினைந்த வுரு நிறுத்திடுவன்' எனவே நிறுத்திய தனுகும் பயனுய ஐந்தொழி லியற்றுவனென்பது தானே போதரும்.

மல மறைப்பினுன் மாயா காரியமும் மாயா காரியத்தாற் கன்மமும் கன்மத்தால் இன்பத்துன்பங்களும் இன்பத்துன் பங்களாற் பற்றுதல் விடுதல்களுமுடைய பசுக்களைப்போ லாது பசுக்கள்பொருட் டாகவே திரு மேனிகொண்டு நின்று ஐந்தொழி லியற்றுமாற்றலுடைய னென்பார் 'நிம லன்' என்முர். தானே—ஸ்வேச்சை வழியே.

தேசகால தேஹமுதலியவை செய்யுணடை நோக்கி முறைபிறழ்ந் தமைந்தன. (௩)

உலகமெலா மொருவனே டொருத்தியொன்றென்
றுளதாகி நின்றளவி லொடுங்கும் பின்னு
மலமதனு லுளதாகு முருவமாறி
வருவது போவது செல்வதாதலானு
மலைவிலசேதன மாயை யாதலானு
மணுக்க ளுருவடையு மறிவிலாமையானு
நிலவுதொழின் மருவியுரு நிற்றலானு
நின்றவையு மளித்திடுவ னமலன்றனே.

(இ—ள்.) உலகம் தன்னியல்பானிகழ்வதாகவும் அஃது ஒருவனலைந்தொழிற்படுமென்பதற்கும் அவ்வாறு தொழிற் படுத்துவோன் சிவபெருமானே என்பதற்கும் ஏதுவென் னையோவெனின் இயல்பென்பது யாண்டும் ஒரு பெற்றித் தாய் நிகழ்வதாகும். உலகம் அவ்வாறன்றி ஆண்பெண் அலி யெனு முத்திறத்தவயவப்பகுப்புடையவாய்த் தோன்றிநின் றொடுங்குதலும் அவயவப்பகுப்புடைய உடம்புகளாகக் காரியப்படுமாயை இயங்குதற்கு மரியஜடமாகவும் உடம்புக ளோடுதோன்றி நின்றொடுங்கும் உயிர்கள் அவ்வுடம்புகளைத் தாமாகப் பெற்றுக்கொள்ளும் அறிவுடையனவன்றுகவும்

உயிரும் உடம்புங்கூடித்தொழில்புரிந்து நிற்றலுமாகியபிரத்தியக்ஷப்பிரமாணத்தானும், ஒடுங்கிய உயிர்கள் மீட்டும்வினைச்சேடத்துக்கியையமல பரிபாகம் வருமளவும் அச்சுமாறிப் பூமியிற் பிறத்தலும் நிரயத்திற் புகுதலும் துறக்கத்தையடைதலுமாகிச் சுழலுமென்னும் ஆகமப்பிரமாணத்தானும், அவ்வாறு நிகழ்வித்தற்கோர் வல்லபன் இன்றியமையாச் சிறப்புடையனாய் வேண்டப்படுவனென்பதூஉம் அத்தன்மையனாவான் யாவனென ஆராயுங்கால் உலகத்தைப்போல ஐந்தொழிற்படுவோனல்லனாய் உலகத்துயர்ந்தோராகிய அரியயன் முதலியோரையும் ஐந்தொழிற்படுத்துவோனாய் யாண்டும் நிலைபெறும் அனாதிமலமுக்தனாகிய சிவபெருமானே என்பதூஉம் அனுமானப்பிரமாணத்தானும் இனிது விளங்கக் கிடந்தவேயா மென்பதாம்.

உலகமெலா மொருவனோடொருத்தியொன்றென்றுளதாகிநின்றளவிலொடுங்கும் மாயை அலவில சேதனமாதலானும் அணுக்களுருவடையுமறிவிலாமையானு நிலவுவுருமருவிதொழினிற்றலானும்பின்னுமலமதனாலுருவமாறி வருவது போவது செல்வதுளதாகுமாதலானும் எவையுமளித்து நின்றிடுவனிமலன்றானே எனக்கொண்டுகூட்டுக.

அளவிலொடுங்கல்—காலநியதிகளின்படி யொடுங்கல். மாயையும்அணுக்களுங்கூடித்தொழில்புரிதல்பிரத்தியக்ஷப்பிரமாணமேஎன்பார் 'நிலவுவுருமருவித்தொழினிற்றல்'என்றார். மருவியென்றது நடுநிலைத்தீபம். அரியயன்முதலியோரையுந் தழுவுமாறெழுந்து எவையுமென அமைந்தது அஃறிணைப்பொருட்கள் ஒழியாமைப்பொருட்டு. அளித்தல் என்பது பிறப்பிருப்பிறப்புக்களாகிய துன்பத்திற் செல்லவொட்டாது காத்தலென்னும் பொருட்டாய்ச் சிருஷ்டி முதல் வீடுபேறளவுந் தழுவிநின்றது.

குடமாய்த்தோன்றிய மண்போலும் உடம்பாய்த்தோன்றியமாயை அலவிலசேதனமென்பது மிருதவுடம்பானும், அணுக்களுருவடையும் அறிவுடையனவன்றென்பதுகுருடு

செவிடு ஊமை முடமுதலிய குறைபாட்டுப்பிறப்பானும், அரியயன்முதலியோரும் ஐந்தொழிற்படுவரென்பது அயனை யீன்ற அரியினது தசாவதாரத்தானுந்தெருளப்படும். (ச)

கந்தமல ரயன்படைக்கு முலக மெல்லாங்
கண்ண னளித்திடு மவையெங் கடவுடானே
யந்தமுற வழித்திடுவ னதலாலே
அயனரியு மவனதுய ரதிகா ரத்து
வந்தமுறை தன்றொழிலேமன்னுவிப்பனெல்லாம்
வருவிப்பன் விகாரங்கண் மருவான் வானின்
முந்திரவி யெதிர்முளரியலர்வுறுமொன்றலர்வான்
முகையாமொன் றென்றுலரு முறையினுமே.

(இ—ள்.) சிருஷ்டிஸ்திதி ஸம்ஹாரமென்னு முத்தொழிற்களுமுறையே அயனரி அரனென்னுமூவரானிகழ்த்தப் படுவதென முதியோர்மொழிய எல்லாம் ஒருவனே உஞற்றுவனென்பதெவ்வாறெனின் சிவபெருமான் ஞாயிற்றின்முன்னர் முளரிகளை யொப்பத்தனது ஸன்னிதிமாத்திரையானே உலகமுழுவது முத்தொழிற்படுமாறு சலியாது நடாத்துதலேயன்றி மீளச்சிருஷ்டிஸ்திதிகள் வேண்டப்படாவண்ணம் மஹாஸம்ஹாரத்தையுஞ்செய்து பசுக்களை வாழ்விக்கும் ஆற்றலுடையோனவன். ஆயினும் உலகர்க்கு அரசிபலை யறிவுறுப்பானுப்ஸ்தூலப்பிரபஞ்ச சிருஷ்டிஸ்திதிகளின்பொருட்டுத் திரோதானசக்திஸகளமாய் அனந்த சயனத்தொடு அரியையும் அரியினது உதரத்தினின்று நாபிவாயிலாகக் கமலாஸனத்தொடு அயனையுந் தோற்றுவித்து அக்காரணேசுவரர் வாயிலாகத் தவப்பயனுற் கமலாஸனத்தொடு அதிகாரம்பெற்ற உபப்பிரமராற் சிருஷ்டித்தலுா் அனந்தசயனத்தொடு அதிகாரம்பெற்ற உபவிஷ்ணுக்களாற்றிதித்தலும் அங்ஙனஞ் சிருஷ்டிஸ்திதிகணிகழுந்தோறும் சுத்தவித்தியாதத்துவாதிபதியாகிய உருத்திரர் வாயிலாகக் காலாக்கினியுருத்திரரால் ஸம்ஹரித்த

னுஞ் செய்வன். ஏனையவியற்றற்கதிகாரங்கொடான் ஆகலான் முத்தொழிற்களும் அவனதேயாமன்றிப் பிறரதாகாவெனத்தெருளுகவென்பதாம்.

முத்தொழிற்களும் அவனதேயாமன்றிப் பிறரதாகாவெனத்தெருளுகவென்பது குறிப்பெச்சம்.

எங்கடவுள்வானின் முந்திரவியெதிர்முளரியலர்வுறுமொன்றலர்வான் முகையாமொன்றொன்றலருமுறையின் உலகமெல்லா மெல்லாம் வருவிப்பன் விகாரங்கண்மருவான் அவையந்தமுறதானே யழித்திடுவனும் அயனரியுமவனதுயரதிகாரத்துவந்தமுறை கந்தமலரயன்படைக்குங் கண்ணனளித்திடுந்தன்றொழிலே மன்னுவிப்பன்ஆதலாலே எனக்கொண்டு கூட்டுக.

எங்கடவுளென்னுமுரிமைப்பாடுமுத்தொழிற்களுட்காத்தலே சிறப்புடைமை எனவும் அதனாற் காப்போனாகிய அரியே தலைவனாவானெனவும் முரணும் வைஷ்ணவரை நோக்கிக்காப்பும் அழிப்பும் பாசபந்தத்தின்மேற்றேயன்றிப் பிறபொருண்மேலன்றாகலான் அழிப்போனே தலைவனாவானெனமறுத்துணர்த்தியவாறு. முந்திரவியெதிர்முளரியலர்வுறு மென்றதனால் உலருதல் பிந்திரவியெதிரும் முகையாதல் இடையிரவியெதிருமாமென்பதுபோந்தன. முந்திரவி பிந்திரவி இடையிரவி என்பன கிரணத்தினது உஷ்ணபேதங்களாய பருவத்தின்மேற்றேயாம். எல்லாம் வருவிப்பனென்றது தனதாணை மாத்திரையானே முத்தொழினுநிகழச் செய்வனென்னும்பொருட்டு. முளரிகள் முத்தொழிற்படுதற்கேதுவாய் நிகழுஞாயிற்றினது சலிப்புடைமையிற் பிரித்துணர்த்துவார் 'விகாரங்கண்மருவான்' என்றார். விகாரங்களென்னும் பன்மை எத்தொழினிகழ்த்தினுஞ் சலியானென்பது தோன்றற்பொருட்டு முத்தொழிற்களாகிய பன்மைகட்கியைய மொழிந்தது. அந்தமுறவழித்தல்—மீளச்சிருஷ்டிஸ்திதிகணிகழவேண்டாவாறு சூக்குமசரீரங்களையுமழிக்கு மஹாஸம்ஹாரமாகிய அனுக்கிரஹ

த்தின்மேற்று. ஆகவேதிரோதானமும்அடங்கும். தானே—ஸ்வதந்திரமாகவே.

அவனதுயரதிகாரத்துவந்தமுறைமையென்றமையான் அரி அனந்தசயனத்தொடு திரோதானசக்தி ஸகளமாகவும், அயன் கமலாஸனத்தொடு அவ்வரியினது உதரத்தினின்று நாபிவாயிலாகவுந் தோன்றிய காரணேசுவரரென்பதூஉம், கந்தமலரயன்படைக்குங் கண்ணனளித்திடுமென வேறு வைத் தோதினமையான் அவ்வயன் உலகத்தைச் சிருஷ்டிக்கும்படியும், அக்கண்ணனாகிய அரிதசாவதாரம்பண்ணி உலகத்தை ரட்சிக்கும்படியும் தவத்தான் அதிகாரம் பெற்றுவந்த காரியேசுவர ரென்பதூஉம், தன்றொழிலே மன்னுவிப்பனென்றமையாற்றிரோ தானத்தானவதாய சிருஷ்டிதிதி கன்மாத்திரைக்கே அவரை அதிகாரிகளாக்குவ னென்பதூஉம் ஆயிற்று. கந்தமலரயனெனவே கண்ணனாகிய அரிக்கு அனந்த சயனமுளதென்பதூஉம், காரியேசுவரருக் கிவ்வாறாகவே காரணேசுவரருக்கு அவையுளவென்பதூஉம் தானேபோதரும்.

எங்கடவுடானே அந்தமுறவழித்திடுவனெனவேஸ்வதந்திரமாயும், அந்தமுறவும் அழியாது சுத்த வித்தியாதத்துவாதி பதியாகிய உருத்திரராற் பிரேரிக்கப்பட்டுப் பசுக்கட்குமலபரிபாகம் வருமளவு மீட்டுமீட்டும் சிருஷ்டி ஸ்திதி கணிகழுமாறு ஸ்தூலப்பிரபஞ்ச மாத்திரையே யழிக்குங்காலாக்கினி யுருத்திரரும் உளரென்பது பெற்றாம்.

அரிதிரோதான சக்திஸகளமென்பது சிவலிங்கத்தின் கடைக்கூறாகிய சதுஷ்கோணம் பிரம பாக மெனவும், நடுக்கூறாகிய அஷ்டகோணம்விஷ்ணுபாகமெனவும், முதற்கூறாகிய விருத்தாகாரம்அடைவே உருத்திர மகேசுவரஸதாசிவபாகமெனவும், அதனால் நவ வடிவங்களுள்வைத் தெண்ணுமாறும், பராசக்தி ஸகளமாகிய மகேசுவரிக்கு இடப்பாகத்தை யளித்து அர்த்தநாரீசுவரரெனத் திருமேனி கொண்டருளியவாறே ஆதி சக்தியெனப் படுந்திரோதா

னசக்தி வடிவமாகிய அரிக்கு வலப்பாகத்தை யளித்து அரியர்த்தரெனத் திருமேனி கொண்டருளிற் றெனவும், அதுபற்றிச் சிவமூர்த்தங்கள் இருபத்தைந்தனுள் ஒன்றாக வைத்தெண்ணுமாறும் சிவாகமங்கள் செப்பு தலானும்; "அரியலாற் றேவியில்லை ஐயனையாறனார்க்கே" என்றருளிய திருவாக்கானும் இனிது விளங்கும். இவையே இச்சாஞானக்கிரியா சக்தி வடிவமாகிய ரௌத்திரிக்கு அரி முன்னோனென முறை வழங்கி வருதற்கும் ஏதுவாயது. சக்தியென்றது சிவபெருமானது வல்லப மென்னும் பொருட்டேயன்றிப்பெண்டன்மை யுடைத்தென்பதன்று. அச்சக்தி வடிவுகரிக்குங்கால் ஆண்பெண் அலியென்னு முத்திறத்தெண்ணிறந்த வியல்பினதாகவு நிற்கு மாற்றலுடைத்தென்க.

அரிதிரோதான சக்திவடிவமேஎன்பது வைஷ்ணவாகம விதிகளானுந் தெருளா லாகும்.

சக்தன் சக்தி என்பனபோல அரன் அரியென நின்றமையால் திராவிடவேதபாராயணத்திற்கு முதலினு முடிவினுந் திருச்சிற்றம்பல மென்னு மாறே ஆரிய வேத பாராயணத்திற்கு ஆதியினும் அந்தத்தும் அரி நாமத்தை வந்தன வசனமாக வழங்கிவருவதும் அரனது சக்தியால் அனைத்தும் உதித் தொடுங்கு மென்பதை அயராமைப் பொருட்டு.

அரியும் அயனும் காரணேசுவரர் காரியேசுவரர் என விருதிறத்தவ ருளரென்பது "நாட்டுத் தேவரு நாடரும்பொருளே சேட்டைத் தேவர் தந்தேவர் பிரானே" என்றருளிய திருவாக்காற் றெருளுக.

தவத்தா லதிகாரம் பெறுங் காரியேசுவரருக்கும் அனந்த சயன முதலிய வுளவென்பது "குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க் கிமையாக் குஞ்சரமும் படங்கொள்பாயும் பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி" என்றருளியதனுனும்.

ஸ்தூலப்பிரபஞ்சத்தின் பொருட்டுக் காரியேசுவரராகக் காலாக்கினி யுருத்திரர் முதலிய மூவருள ரென்பது "தேவர்கோவறியாத தேவதேவன் செழும் பொழில்கள் பயந்து காத்தழிக்கு மற்றை மூவர் கோனாய்நின்ற முதல்வன் மூர்த்தி" என்றற்றொடக்கத் தனவாய திருவாக்குக்களானுணர்க.

காரியேசுவரராவார் அண்டங்க டோறும் வெவ்வேறு அதிகாரிகளா யிருப்பர். காரணேசுவர ராவார் பல்லாயிர கோடி அண்டங்களெனப்படும் உலகமுழுமைக்கும் ஒரே அதிகாரிகளாவர். அவ்வவ்வண்டத்தலைமைநோக்கிக்காரியே சுவரராகிய உபப்பிரமரை ஆதிப்பிரமராகவும் உபவிஷ்ணுக்களை ஆதிவிஷ்ணுக்களாகவும் ஸங்கற்பிப்பர்.

தக்ஷயாகத்திற் கூடியிருந்ததற்காகத் தண்டிக்கப்பட்டதின் வைத்தும் தசாவதாரங்களிற் சிறந்த மூன்றனுள் நாரசிங்கன் சரபபட்சியானும், இராமன் சரயுநதிப் பிரவேசத்தானும், கண்ணன் வனசரவாளியானும் நிலையழிந்தமைபற்றியும், இக்காரியேசுவரரையே ஸகல ரென்பராயினும் காரணமின்றிக் காரிய நிகழாதென்னும் கருத்தான் அருணகிரிநாதர் முதலிய ஆன்றோரதாசாரம்பற்றிக் காரணேசுவரரோடு காரியேசுவரரை அபேதமாய்ப் பாராட்டுவர். (ரு)

ஏற்றவிவையரனருளின் றிருவிளையாட் டாக
வியம்புவர்களணுக்களிடர்க் கடனின்று மெடுத்தே
யூற்றமிக வருள்புரித லேது வாக
வுரைசெய்வ ரொடுக்கமிளைப் பொழித்தன் மறைத்
தோற்றமல பாகம்வரக் காத்தல் போகந்
துய்ப்பித்த றிரோதாயி நிறுத்த லாகும்
போற்றலரு மருளருளே யன்றி மற்றுப்
புகன்றவையு மருளொழியப் புக லொணாதே.

(இ-ள்.) இறைவன் இவ்வாறு ஐந்தொழிலியற்றற்கேது வென்னையோ வெனின் தனது சத்தியாற் செய்யப்படுந் திருவிளையாட்டா மெனவும் விளையாட்டொப்ப வெளிதாகப் பசுக்களை மலவியாபகத்தானாகிய துன்பவோகரத்தினின்றுங் கரையேற்றி அருள் வியாபகத்தானாகும் இன்பவோகரத்தின் மூழ்குவித்து மீளாவண்ணம் வாழ்வித்தலாகிய ஆட்கொண் டருள்வதேயா மெனவும் ஆன்றோருரைப்பர். எவற்றினு மேம்பட்ட இவ்வைந்தொழிற்களுட் சிருஷ்டியானது மலபரிபாகம்வருவித்தற்பொருட்டுத் தனுகரணபுவனபோகங்களைக்கூட்டுவித்தலும், ஸ்திதி—அவற்றானே வினைப்பயனாகிய இன்பத்துன்பங்களை யூட்டித் தொலைத்தலும், ஸம்ஹாரம்—சிருஷ்டி ஸ்திதிகளிற்பட்ட தனாலாய இளைப்பினை யொழித்தலும், திரோபாவம்—அம் முத்தொழிற்களினும் பசுக்களை முயங்குவித்தலும், அனுக்கிரஹம்—அம்முயக்கத்தான் மலபரிபாகம்வரக்கண்டு திருவடி கூட்டுதலுமாம். அனுக்கிரஹத் தொழிலொடு முரணக் கூறிய ஏனைய நான்கும் திருவடிகூட்டற் பொருட்டேயாகலான் அவையும் அனுக்கிரஹத் தொழிலாகவே கொள்ளற்பாலன வென்பதாம்.

எடுத்தே என்றதின் ஏகாரத்தை புரிதலென்றதனோடியைத் துரைத்துக் கொள்க.

இவை என்னுஞ் சுட்டுமேலைச் செய்யுளிற் கூறிப்போந்த சிருஷ்டியாதிகண்மேற்று. பசுக்களாற் செய்யப்படும் ஜடபதார்த்தத்தின் மேற்றாய ஐந்தொழிற்களைப்போலாத சித் பதார்த்தத்தின் மேற்றாய ஐந்தொழிற்க ளென்பார் ஏற்றவிவை என்றார். ஏற்றம்—உயர்வு. ஜட பதார்த்தத்தின் மேற்றாய ஐந்தொழிலாவது மண் முதலியவற்றைக் கடகலசாதிகண்முதலியவற்றாய் வனைதன்முதலியவைகளே. ஆண்டுத் திரோதான அனுக்கிரஹங்கள் மண் முதலியவற்றினியல்பினை மறைத்தலுங் காட்டலுமேயாம். அணுக்கள்—அணுக்களை. ஊற்றமிகல்—மேம்பாடு அதிகரித்தலென்னும்

பொருட்டாய்த் திருவடிப் பேற்றை யுணர்த்திற்று. ஒடுக் கத்தை முன்னாக வைத்ததும் மற்றைத் தோற்றமென்றதும் புனருற்பவமுளதெனப்புலப்படுமாறு. திருவடிகூடுநெறியை ஞானசாரியரா னுபதேசிக்கப் பெறினும் அதனைக் கடைப் பிடித்து நின்றநுஷ்டித்தல் அரிதாகலிற் போற்றலருமருள் என்றார். அன்றி—முரணி. முரணுதல் அநுக்கிரஹத்தானு கும்பயனைப்போலாது கொள்ளிவட்டமுங்கறங்கும்போலத் துன்புறச் சுழற்றுதல். மற்று அசை.

அணுக்களை இடர்க்கடனின்று மெடுத்து ஊற்றமிக அரு ள்புரிவது ஐங்கலப்பாரஞ் சுமத்தல் சாத்தனுக்கு ஓர்விளை யாட்டென்பதுபோல எளிதாகச் செய்வனென்னுங் கருத் தாற் சைவஸித்தாந்திகள் விளையாட்டெனச் சாற்றுவர். வேதாந்திகளில் சிருஷ்டி முதலிய ஐந்தொழிற்களு முள வென உடன்படுவாரும் அவற்றை விளையாட்டு மாத்திரை யாகவே விளம்புவர். (சு)

## பசு வியல்பு.

எண்ணரிதாய் நித்தமா யிருண்மலத்தி னழுந்தி
யிருவினையின் றன்மைகளுக் கீடான யாக்கை
யண்ணலரு ளானண்ணி யவையவரா யதனு
லலகினிகழ் போகங்களருந்து மாற்றாற்
புண்ணிய பாவம்புரிந்து போக்குவரவுடைத்தாய்ப்
புணருமிருண் மலபாகம் பொருந்தியக் காலரு
ளுண்ணிலவு மொளியதனு லிருளகற்றிப்பாத [ளா
முற்றிடுநற் பசுவர்க்கமெனவுரைப்பருணர்ந்தே.

(இ—ள்.) இனிநிறுத்த முறையானே பசுவினதியல்பி னைப் பகர்கின்றாம். பசுவானது, அளவுபடுத்த வமையாத பலவாய் அழியாதனவாய் ஆணவமல வியாபகத்து ளட ங்கிக்கிடத்தலான் அதினின்றும் விமோசிக்கும்பொருட்டு அனுதி கன்மப் பயனை யூட்டியொழிக்குமாறு அப்பயனுக்

குரிய தனுவை இறைவனுக்கிய சிவபெருமானது ஆணைகூட்டப் பொருந்தி அத்தனுவிற் கியைந்த கரண புவனங்களை யும் போகஸாதனங்களையு முடையராய் அவ்வவ்வாகார மாய் நின்று அவற்றாற் பிராரப்த போகங்களை யனுபவிக்கு மாற்றான் ஆகாமியத்தானே புண்ணிய பாவங்களை யார்ச்சித்து அப்பயனை யனுபவிக்க வேண்டித் துறக்க நிரயங்களிற் சேறலும் பூமியிற் பிறத்தலுமாகிச் சுழன்று மலபரிபாகம் அடையுங்காற் சிவபெருமானே அருளிறை யடிகளா யெழுந்தருளி அனுக்கிரஹிக்கப்பெற்று அதனு ளுள்ளத்தே விளங்கித் தோன்றுஞ் சிவாதித்திய கிரணமாகிய உண்மை ஞானப்பிரகாசத்தான் ஆணவ மலமாகிய விருளைப் பற்றறக் களைந்து சிவ பதத்தைப் பெற்று மீளாது வாழுந் தன்மையுடையவாமென ஸ்வானுபூதிமான்களாகிய மேலோர் சுருதி யுக்தி யனுபவங்களானிச்சயித்து விளம்புவரென்பதாம்.

ஓர் தனுவைக் கொண்டே பலதிறத்த வின்பத் துன்பங்களையனுபவித்தலான் 'இருவினையின் றன்மைகளுக்கிடான யாக்கை' யென்றது. அவை என்னுஞ் சுட்டு யாக்கையோடு அதற்குரிய கரணபுவனபோகங்களையு முணர்த்திற்று. பிராரப்த வினைப்பயனாக எதிர்கணத்தெய்தும் அனுபவங்கள் இத்தன்மையவென எட்டுணையும் அறியாவண்ண மறைந்து நின்றெய்த நிகழ்கணத்து அவற்றை யான் செய்தேன் பிறர் செய்தாரெனக்கொண்டு விருப்பு வெறுப்புக்களையடைந்து அவற்றிற்குக்கைம்மாறுகருதுதலான்'அலகினிகழ்போகங்களருந்து மாற்றாற் புண்ணிய பாவம்புரிந்து' எனப்பட்டது. பசுக்களோடுந் தொன்று தொட்டு அனன்னியம் போனிற்கும் ஆணவமலத்தை அவரின் எவரேனும் தனக்கன்னியமெனக்கண்டு அதனையுபாதியை யொழித்தற் குபாயமியாதெனத் தீவிரப் படுதலே 'புணருமிருண் மலபாகம் பொருந்தல்' எனவும், அதிதீவிரம் ஏதுவாகப் பெறப்படும் உபாயத்தான் அதனை யொழித்தலே 'அருளானுண் ணிலவு

மொளியதனு லிருளகற்றல்' எனவும் உணர்க. பாதமுற்றிடு மியல்பு உண்மை யதிகாரத்துப் பெறப்படும். பரிபாகிகளைச் சிறப்பு வகையாற் பிரித்துணர்த்துவார் 'நற் பசுவர்க்கம்' என்றார்.

எண்ணரிதாய் உடைத்தாய்என்றது ஜாதியொருமைகள். எண்ணரிதாயெனப் பொதுப்பட எடுத்துக்கொண்டாராயி னும் நற்பசுவர்க்கமாதல் பெரும்பான்மையும் உயர்திணைக் கேசாலுமென்பதுதோன்றஅவராயென நடுவண்வைத்தார்.

---

## பாச வியல்பு.

ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளு
மெண்ணரிய சத்தியதா யிருளொளிர விருண்ட
மோகமாய்ச் செம்பினுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாயறிவு முழுதினையு மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதான சத்தி
பண்ணுதலான்மலமெனவும் பகர்வரதுபரிந்து
நாகமா நதிமதியம் பொதிசடையா னடிக
ணணுகும் வகை கருணைமிக நயக்குந்தானே.

(இ—ள்.) இனிப்பாசத்தி னியல்பினைப் பகர்கின்றாம். பாசமென்பது, பல பகுப்புக்களை யுடையது. அவற்றுள் ஆணவமலமாவது, ஒரேமுதலாய் அழியாததாய் ஏனையமல ங்கட்கெல்லாங்காரணமாய்ச்செம்பிற்களிம்புபோலப்பசுக்க டோறும் அனாதியே விரவிக் கார்காலத் திரவினிருளை ஒளி யென்னும்படி எப்பொருளின தியல்பினையும் தன்னையுங் காட்டாது மயக்கி நின்று பசுக்களால் பற்றப்படும் நிஷ்கா மியச் சிவபுண்ணியத்தாற் பரிபாகப்பட்டுழிவிட்டு நீங்குவ தாகிய அளவிறந்த சக்திகளையுடையதாய் அப்புண்ணியம் இயற்றற்கு வேண்டப்படுந் தனுகரணங்களைப் பெறுமளவும் அவரதறிவினை முற்றினு மறைப்பதாகும். திரோதை

மலமாவது அத்தன்மைய ஆணவமலம் பரிபாகமுறும்பொருட்டு அதனை நிலைக்களமாக்கொண்டு நின்று செலுத்துதலான் மலமென உபசரிக்கப்படும் ஆதிசக்தியேயாம். அச்சக்தி இன்பத்துன்பங்களையும் அவற்றிற்கேதுவாகிய பஞ்சவிஷயங்களையும் தனது காருண்யத்து ளடக்கி நிற்கும் சிவபெருமானது திருவடியைப் பெறும்பொருட்டுப் பக்தி செய்யும் பசுக்கண்மாட்டு அவனது காருண்ய மிகுக்குங்கால் அவ்வாறே திருவடிப்பேற்றிற் குபகரித்தலுஞ் செய்வதாகு மென்பதாம்.

ஏகமாய்நித்தமாய் மூலமலமாய்ச் செம்பினுறுகளிம்பேய்ந்து இருளொளிர விருண்டமோகம் தங்காலவெல்லைகளின் மீளு மெண்ணரிய சத்தியதாய் அறிவு முழுதினையு மறைக்கும் பாகமாம் வகைநின்று பண்ணுதலான் மலமெனவும் பகர்வர்திரோ தானசத்தி அதுநாகமா நதிமதியம் பொதிசடையா னடிக ணணுகும்வகை பரிந்து கருணைமிக தானே நயக்குமெனக் கொண்டு கூட்டுக.

மோகம் வினையெச்சம். தங்கால வெல்லைகளின் மீளுதல் கண்ணொளியை மறைத்து நின்ற விருளானது ஔஷதத்தாற் காசநீர் அகல்வுழி அகறலை யொப்ப ஆன்ம ஞானத்தை மறைத்து நின்ற அறியாமையானது நிஷ்காமியச் சிவபுண்ணியத்தால் யானென தென்பதகல்வுழி அகலுதல். அகலினும் வாகட நூல்வழியிற் பிறழ்வோர்மாட்டு மீட்டுங் காசநீர்கூடக் கூடுமிருளை யொப்ப உபதேச கலையின் விதித்தவாறன்றிச்சிவபுண்ணியங்களைக் காமியத்தாற்செய்வோர் மாட்டு மீட்டும் யானெனதென்பது தோன்றத் தோன்றி உண்மை யறிவை மறைப்பதாகலாற் கெடு மென்னுது மீளு மென்றார். நிஷ்காமியச் சிவபுண்ணிய மென்பது ஞானஸாதகபரியந்தந் தழுவுமென்க.

பாகமாம்வகை நின்று திரோதானசக்தி பண்ணுதலாவது உலக வாழ்க்கையின் பொருட்டு எப்பொருளை யாயினும் ஈட்டல் காத்தல் இழத்தல்பற்றிச் செய்யு முயற்சிகளும்

அம் முயற்சிகள் வாயிலாகவரும் பயன்களுந் தம்மிற்பெ
ரும் பான்மையு முரணித் தோன்றுதலின்வைத்தும் காமி
யமாகவாதல் நிஷ்காமியமாக வாதல் செய்யப்படுஞ் சரியை
கிரியா யோகங்களாகிய ஸத்கருமங்கட்கும் பற்பல விடை
யூறாக ணோர்படுதலானும் ஞானஸாதக நெறியில் ஒவ்வோ
ரிடத்து ஸகல கேவலங்களாற் றடைப்படுதலைக் கண்டும்
நாம் ஸ்வதந்திரமுடையே மல்லேம் நம்மை வினைவழிநடா
த்தும் ஸ்வதந்திரமுடையானு மொருவ னுளன் அவனரு
ளாலே அவன்றாள் வணங்கினு லன்றி உய்விலையென வுண
ர்ந்து அவ்வுணர்ச்சிபற்றி நாமென்னும் போதமுனைப்பொ
ழிந்து அம்முனைப்பிற் கேதுவாகிய அறியாமை நீங்கும்
படி அவ்வறியாமையை நிலைக்களமாக் கொண்டு நின்று
லௌகிக வைதீக ஸன்மார்க்கங்களை இன்பாகாரமாகக்கா
ட்டிப் பற்றச்செய்து அப்பற்றுக் கோட்டின் வழியாக என
தென்பதைச் செலுத்துதல். அதனு னன்றே அச்சக்தி
க்கு மஹாமாயி எனவும் அச்சக்தி ஸகளமாகிய அரிக்கு
மாயனெனவுங் காரணப் பெயர்வந்தது. மலமெனவும் பகர்
வரென்றமையான் அஃது உபசார மென்பதாயிற்று.

விஷத்தைப்போல மூர்ச்சிக்கச் செய்தலான் விஷயங்க
ட்கு நாகமும், உலகங் கலங்குமாறு அழித்தற் கெழுந்த
தாகலாற் றுன்பத்திற்கு மாநதியும், தாபத்தைநீக்கிக் குளிர்
விப்பதாகலான் இன்பத்திற்குமதியமும், அருட்டிருமேனியி
னின்றுங் கருணைபொங்கி யெழுந்துவழிந்தமைகாட்டலாற்
காருண்யத்திற்குச் சடையும், அறிகுறியாதல் மேலுமு
ரைத்தாம். மதியம் ஈண்டு விஷயவின்பமாத்திரைக்கே அறி
குறியாம்.

பொதிதல்—அடக்குதல். வகைஇரண்டும்—பொருட்டு.
பரியவென்பது பரிந்துஎனத் திரிந்துநின்றது. பரிய—பக்தி
செய்ய. நயத்தல்—அருள்கூர்தலென்னும் பொருட்டாய்
எவற்றினும் நிவிர்த்தியையே இன்பாகாரமாகக் காட்டுதல்.

செம்பிற்குவமேயமும் ।அறிவிற்குடையாரும் பரிதற்கு வினைமுதலுமாகிய பசுக்களென்பது அவாய்நிலையான்வந்தது. (அ)

உன்னலரும் பரசிவன்ற னருளாலே நாத
முதிக்கு மிகுங்குடிலைதனில் விந்துவருநாதந்
தன்னிலதி னெளிவளருஞ் சதாசிவரா மவரிற்
றயங்கவரு மீசர்வித்தைதனை யளிப்பரதனன்
மன்னுவரிவ்வகையைவர்வாய்மையினுன்முன்னே
வந்திடுமென் றுரைசெய்தவிந்துவழாவகையே
முன்னுதவு சூக்குமாதியொரு நான்கு மென்று
மொழிந்திடுவரருங் கலைகண் முதிர்ந்துளோரே.

(இ—ள்.) மாயாமலமென்பது சுத்தம் அசுத்தமென்றிருவகைப்படும். அவற்றுட் சுத்தமாயாமலமாவது, சித்தமுஞ் செல்லாச்சேட்சியனுகிப்பரைவியாபகத்துளிருந்த சிவபெருமானது அப்பராசத்தியான்ஐந்தொழிற்பொருட்டு லயசிவர் லயசக்தி ஸதாசிவர் மஹேசுவரர் உருத்திரனொன்னுங் காரணேசுவரர் அவதரித்தற்கிடமாகும்வண்ணம் அடைவேநாதமும்நாதத்தில் விந்துவும் விந்துவிற்சாதாக்கியமும் சாதாக்கியத்தில்ஈசுவரமும் ஈசுவரத்திற்சுத்தவித்தையுமாகியபஞ்சதத்துவங்களாய்த்தோன்றுவதன்றியும் ஆன்மஞானம்ஸவிகற்பவுணர்வாய் விரியாதொழியாவண்ணம்வாய்பாடுடைமை பற்றி முதற்கட்டோன்றிய வாய்மொழிந்தவற்றுள் விந்துவின் முந்தியநாதமே சூக்குமை பைசந்தி மத்திமை வைகரி என்னும் நான்கு வாக்குக்களாகவும் விந்துவே அந்நான்கு வாக்குக்களையும் உணர்த்துவதாகிய சாந்தி வித்தை பிரதிஷ்டை நிவிர்த்தி என்னு நான்குகலைகளாகவும் விரிந்துதோன்றுமெனச் சிவாகமங்களிற் றேர்ச்சியுடையார் செப்புவரென்பதாம்.

மன்னுவரிவ் வகையைவர் வழாவகை வாய்மையினுன் முன்னே வந்திடுமென் றுரைசெய்த விந்துமுன்னே சூக்கு

மாதி யொருநான்கு முதவுமென்று மொழிந்திடுவ ரெனக் கொண்டு கூட்டுக.

தானதானிகளைக்கலந்துரைத்தமையாற் றானதானிகளின் றேற்றம் ஒருங்கேயாமென்பது போதருதலிற் றனங்கட் குத் தானிகளும் தானிகட்குத் தானங்களும், வழாமைக் குச் செயப்படு பொருளாகிய ஆன்மஞானமும், ஆன்ம ஞானம் உணரும்படி உணர்த்துங் கருவிப் பொருளாகிய சாந்தி முதலிய கலைகளும் வருவிக்கப்பட்டன.

உன்னலரும்—உன்னற்கரும். உன்ன லென்றது ஈண்டு அந்தக் கரணவியாபாரங்களின் முடிபாய்க் குவிந்துநிற்கும் சித்த நிலையின்மேற்று. பரைவியாபகத்து விருந்தோன்— பரசிவன். அருளென்றது அப்பரையினையே. மிகுங்குடிலை படங்குடி லாறுற்போலக் காரியரூபமாய் விருத்திப்படும் சுத்த மாயையென்னும் பொருட்டாகலான் நாதமுதிக்கு மிகுங்குடிலை தனிலென்பதும் அவ்வாறே வரும் ஏனையவும், குடந்தோன்று மண்ணிலென்பதுபோலன்றி நீக்கப்பொரு ளாக் கொள்ளற்பாலனவன்று. ஒளிவளருஞ் சதாசிவர்— தன்னை யடைந்தார்க்கு உண்மைஞான மிகும்படி வீற்றி ருந்தருளு நித்தியானந்தர். தயங்கவரு மீசர்—ஹாதக மாகிய வருத்தத்தை யடைவார்க்கு ஸ்வானுபவமாக வரு முதல்வர். வருமென்றது ஈண்டு நிகழ்காலக் கூற்றின்மேற் றாய் ஹாதகமெத்துணை அத்துணைப்பயன் உடனிகழ்ச்சியா மென்னும் பொருட்டு.

பரசிவன்றனருளாலே குடிலையில் நாதமுதிக்குமெனத் தொடங்கி ஈசர் வித்தைதனை யளிப்பரென முடித்து அத னுன் மன்னுவரிவ்வகையைவர் என வழங்கினமையான் உரு த்திரர்க்குக் கீழாகச் சுத்தவித்தையில் வைகுவோராய்த் திரோதானசத்திபாற் றோன்றிய அரியும் அரிபானுதித்த அயனும் அனுக்கிரஹகாலத்திற் றிரோதானத்தொடு லயிப் பதுபோலாது இவரைவரும் பரமுக்திகாறு நிலைபெறுவ ரென்பதாயிற்று.

நாதவிந்துக்கண் முன்னே வந்திடுமென் றுரைசெய்தற் குரிய வாய்மையாவது—நாதவிந்துக்கண் முதலிய சுத்த தத்துவங்களைந்தும்காலதத்துவத்தோற்றத்தின் முன்னரே தோற்றியதாகலான் முற்பிற்பாடு மொழிவதற்கின்றாயினும் ஆன்மாக்களது மலமறைப்பை நீக்கற்குரிய சுத்த மாயா கலையை அதிகாரகலை போககலை லயகலையென மூவகைப்படு த்திக் கலையித்திரிஎனவும் நிவிர்த்திகலை பிரதிஷ்டாகலை வித் தியாகலை சாந்திகலை சாந்தியதீத கலையென ஐந்தாய்விரித்து ரௌத்திரி மஹேசுவரி மனோன்மனி லயசக்தி லயசிவை யெனவும் பெயர்பெற்று அக்கலைகளான் ஆன்ம ஞானக் கிரியைகளைச் சிறப்புவகையான் விளக்கி அவற்றுள் ஞான மேறிக்கிரியை குறைந்தும் கிரியையேறி ஞானங்குறைந்தும் ஞானக்கிரியைகள்ஸமமாயும்கிரியைமாத்திரையாயும் ஞான மாத்திரையாயும் வியாபரிக்கும்படி வியாபரித்து நின்று வியாப்பியமாக்கிவீடுகூட்டி வாழ்விக்குங்காற் பிராரப்தானு பவங் காரணமாகப் பகிர்முகப்படுத்தும் வழி ஒடுக்கிய அடைவே உதிப்பிக்கும் பராசக்தியினது வியாபார பேதங் களால் ஆன்மாக்கட்குண்டாம் அனுபவத்தின் வைத்து முற்பிற்பாடு மொழியக் கிடத்தலாம். அனுபவ வடைவு முன்னர்ப் பெறப்படும்.

உரை செய்தவென்றது உபசரித்த வென்னும்பொருட்டு. உரை செய்தவற்றுளென விரித்துரைக்க. இறந்தது தழீஇய தாய் விந்துமுன்னே என்புழிநின்ற ஏகாரம் விந்து என் பதனோடுஞ் சென்றியையும். லயக்கிரமத்தால் நாதமே பஞ்சமை வாக்கெனவும், விந்துவே சாந்தியதீதகலை என வும் பெயர்பெறும். அது "நிகழ்ந்திடும் வாக்கு நான்கு நிவிர்த்தாதி கலையைப் பற்றித் திகழ்ந்திடு மஞ்சதாக" என் றருளியதனுற் காண்க. அருங்கலைகள்—வீட்டு நெறியைத் தெளிவுபடக் கூறும் அருமையாகிய சிவாகமங்கள்.

சாந்தியதீத முதலிய கலைகளான் அடைவே விளக்கப் பட்டொழியன்றி ஆன்மஞானம் ஸவிகற்ப வுணர்வாய் விளங்

காமை எவர்க்கும் பொதுவாயினும் பெத்தர்க்கு வித்தியா கலை முதலிய முக்கலைகளால் விளக்க விளங்குவதே ஸ்வா னுபவமாவதன்றிமேனின்ற சாந்திகலையான்விளக்க விளங் குவதும் தவத்தானன்றிப் பெறவொண்ணாததும் ஆகிய ஸவிகற்பஞானம் ஸ்வானுபவமாவதன்று. (௯)

உருவாதி சதுவிதமா யொன்றென் றெவ்வா
வுண்மையதாய் நித்தமா யொன்றா யென்று
மருவாகிக் கன்மமா ரணுக்க ளியார்க்கு
மாவார மாயசித்தா யசல மாகி
விரிவாய தன்செயலின் வியாபியா யெல்லாம்
விரிந்தவகை புரிந்தடைவின் மேவியவை [யொடுங்க
வருகால முயிர்களெல்லா மருவிடமாய் மலமாய்
மன்னியிடு மரனருளான் மாயை தானே.

(இ—ள்.) அசுத்த மாயாமலமாவது, மஹா ஸம்ஹாரக் கடவுளாகிய சிவபெருமானது ஆணையான் அவ்வவ்வியோ னிக்குரித்தாய்ப் பொதுவகையானைத்தும் சிறப்புவகையா னெவ்வாதும் பிரித்தறியுமாறு காணப்படுகின்ற உறுப்புக்க ளையுடையதனுகரண புவனபோகமென்னுநான்குவகைத்தா ய்க்காரியப்பட்டுப்பசுக்கடோறுந் தனித்தனி பொருந்திநிற் பினுமுதலொன்றேயாய்,தனது காரியமழியினுந்தானழியாத தாய், அழியாதிருப்பினும் வீடுபெற்றவழியும் விளங்காத தாய், விளங்குவதன்றாயினும் சுட்டறிவினையுடைய பசுக்க ளியாவர்க்கும் பற்றுக்கோடுடையதாய், அருட் பிரவேசத் தான் ஆன்மாவாலன்றி யறிதலும் இயங்குதலும் அற்றசட மாய்,தனுவாதிகளாற்பசுக்களனைத்தையும்வியாபித்துநின்று துரியாதீதமுதலிய அவஸ்தைகளைப் பொருந்தி அடைவே தொழிற்படுவதாய், அத்தொழிலொடுங்க வரும் பிரளயகா லத்துப்பசுக்களனைத்திற்குந் தங்குமிடமாய், ஆணவமலத் தொடும் அத்துவிதமாய் நிற்பதாகும் என்பதாம்.

மாயைதான் அரனருளால் ஒன்றொன்றொவ்வா உண்மையதாய் உருவாதி சதுவிதமா யொன்றாய் நித்தமாயென்று மருவாகிக் கன்மமாரணுக்களியார்க்கு மாவாரமாய சித்தாய சலமாகி விரிவாயதன்செயலின் வியாபியாயெல்லாம் அடைவின்மேவி விரிந்த வகைபுரிந்து அவையொடுங்கவருகாலம், உயிர்களெல்லா மருவிடமாய் மலமாய் மன்னியிடு மெனக் கொண்டு கூட்டுக.

தோற்றுவிப்பானுக்கு ஈண்டு அரனென்னு நாமஞ் சூட்டியது "ஒடுங்கி மலத்துளதாம்" என்னுஞ் சூத்திரக் கருத்துப்பற்றி. ஒன்றொன் றொவ்வாமை சிறப்பியல்பினையும் அவ்வொவ்வாமையின் பின்வந்ததனால்உண்மை ஒவ்வுமென்னும் பொருட்டாயப் பொதுவியல்பினையும் உணர்த்திநின்றன. அவ்வியல்புகள்எழுவகைத்தோற்றத்துள்ஒவ்வொன்றினும் ஆண் பெண் அலியெனு முத்திறத்தவயவப் பகுப்புடைமையான் இனிதுவிளங்கும். பெத்தத்திற் றன்னையுங் காட்டாது மறைவதனாலும் முத்தியின் ஞாயிற்றினொளி முன்னரிருளையொப்ப அருளொளியின் முன்ன ரடங்குவதனாலுந் தோன்றாத ஆணவமலத்தோட பேதமாய் நிற்றலான் என்றும் அருவாயது. ஸதா நிஷ்டர்க்காயினும் சுட்டறிவு தோன்று மேற்றனுவாதிகளாற் பற்றாக்கோடுளதாதல் ஒருதலையென்பார்கன்மமாரணுக்களியார்க்கு மென்றார். ஈண்டுக் கன்மமென்றது அதிசூக்கும கன்மமாகிய சுட்டறிவின் மேற்று. கீழாலவஸ்தை நித்தியப் பிரளயமாயினும் ஒடுங்கவருங் காலமென்றதனால் அக்காலம் மஹாபிரளயத்தின் மேற்றாயிற்று.

மல கன்மங்களோடு விரவியதனாற் சுத்த மாயையின் அதோபாகமெனப் படுவதே அசுத்த மாயையாகலானும், அவ்விரவலிற் பிரிந்துழிப் பெறப்படு நாமமாத்திரையே சுத்த மாயா தனுகரண புவன போகங்களெனப்படுவதாகலானும், தனுகரண புவன போகங்களாய் நிற்றலைக் குடிலைக்கும் இலக்கணமாகக் கூறுதொழிந்தார்.

என்னையிது வெனினுலகுக் குபாதான மில்லை
யிறைவனல தெனினசித்துச் சித்தினிடத் [துதியா
மன்னியுள தென்முதல்வ னென்கொ லென்னின்
மாயைதா னசித்துருவாய் மருவ மாட்டா
தன்னவனு மிதுவொழிய வாக்க மாட்டா
னசத்தனு மெனின துவு மவன்போ னித்த
முன்னவனவ் வசித்தை விரித் தெவையு மாக்கு
முதன்மையது கொடுத்ததென மொழிந்திடாரே

(இ—ள்.) மாயையென்பதியாதெனிற் கடகலசாதிகட்கு மண்ணைப்போலத் தனுகரணபுவனபோகங்களாகிய உலகத்திற்கு முதற்காரணமாகும். உலகத்திற்கு முதற்காரணமும் இறைவனே யன்றி மாயை யென்பதோர் பொருளில்லை யெனிற் சித்தாகிய இறைவனிடத்து ஜடமாகிய உலகந் தோன்றாதாகலான் மாயையே முதற்காரணமாகும். உலக வடிவாய்த் தோன்றிய அம்மாயை நிலைபெற்றுள்ள தாயின் இறைவனாற் போந்தபயன் யாதோவெனின் மாயைஜடமாக லாற்றானாக உலகவடிவாய்க் காரியப்படமாட்டாது ஆக லான் இறைவன் நிமித்த காரணனும் மாயைமுதற் கார ணமுமேயாம். இறைவனும் சிற் சக்தியைத் துணைக்காரண மாக்கொண்டன்றி மாயையைக் காரியப்படுத்தமாட்டாத அசக்தனாகலான் நிமித்தகாரணத்துவமும் சிற்சக்தியுடைய தாய் அச்சக்தியா லளிக்கப்பட்டு இறைவற்கு வந்ததே யாமெனிற்சிற்சக்தியும் இறைவனைப்போல நித்தியமாயிருந் தும் அவனாலன்றி மாயையைக் காரியப்படுத்தற் கேலாத தாய்க்குலாலனற்ற தண்டசக்கராதிகளைப்போலவே கிடக் கும். இறைவனோவெனிற் றிருவுளத்திற் கொண்டவற்றெல் லாம் அச்சக்தியான் மாயையை விரித்துக் காரியப்படுத்து வோனாவான். ஆதலான் இறைவற்கு நிமித்த காரணத்துவம் இயல்பாகவே யுடைத்தாவ தன்றிச் சிற்சக்தியால் அளிக் கப்பட்டு வந்ததென அறிஞர் சாற்று ரென்பதாம்,

இது என்னையெனி னுலகுக்குபாதானம் இறைவனல தில்லையெனின்சித்தினிடத்து அசித்துதியாவெனக்கொண்டு கூட்டுக.

இதுவென முதற்கணின்ற சுட்டு மேற்கூறிப் போந்த மாயைகண் மேற்றாய் இனவொருமையாய் வந்தது.

அசித்தென்பவற்றுண் முன்னையது காரியத்தின் மேலும் பின்னையவை காரணத்தின் மேலு நின்றன. அசத்தனுமெ ன்றதனுனும் அவன் போனித்த மென்னும் ஸமத்துவம் தாதான்மியமாகிய சிற்சக்திக்கே யன்றி ஜட சக்தியின் மேற்செல்லாதா கலானும் இது அது வென்னுஞ் சுட்டுக் கள் குறிப்புப்பொருளவாய்ச் சிற்சக்தியை யுணர்த்தின. முன்னவ னவ்வசித்தை விரித்தெவையு மாக்குமென்றமை யான் அதன் எதிர்மறை சக்திக்கும், முதன்மையது கொடு த்ததென மொழிந்திடா ரென்றமையான் அதன் உடன் பாடு இறைவற்கும் தானேபோதரும். அசித்தை விரித் தென்றது குடிலாகாரியத்தின் மேலும், எவையுமாக்கு மென்றது தனுகரண புவனபோகங்கண் மேலும் சார்வன வாம்.

அன்னவனு மிதுவொழிய வாக்கமாட்டானென்னும் வா தம் ஆக்குவனென மறுக்கப்படாமை யானும் "சிவஞ்சத்தி தன்னையீன்றுஞ் சத்திதான் சிவத்தை யீன்றும் உவந்திருவ ரும் புணர்ந்திங்கு லகுயிரெல்லா மீன்றும்" என்றருளின மையானும் சக்தனுக்கு ஸங்கற்பமில்வழி சக்தி உத்தி யோகிக்கமாட்டாவாயினும்சக்தியில்வழிஸங்கற்பம்ஸாத் தியமாகாமை உலகநெறியிற் கண்கூடாகலானும், முன்னவ னவ்வசித்தை விரித்தெவையு மாக்கற்குச் சக்தி இன்றி யமை யாச்சிறப்பிற்றென்பது போதருதலின் அச்சக்தியா லென்பது வருவிக்கப்பட்டது.

உலகத்திற்கு முதற்காரணம் மாயை யென்பதற் கேது காட்டி மாயாவாதியை மறுக்கு முகத்தானே இறைவன் நிமித்தகாரணனென நிறுவியதற்கியையப் பிந்தியகடாவிடை

கள் எஞ்சிநின்ற துணைக்காரணமாகிய சிற்சக்தியின் மேற்
றாய் சாக்தேய வாதியை மறுத்தவாறாயிற்று. (கக)

படைத்ததொரு படியின்றிப் பறவைபசு நரராய்ப்
பண்ணியதென் முன்னைவினைப் பான்மை யென்
றடுத்தவினை யுளதாயினிறையே னென்னி [ப
லசேதனமற் றவையாவிக் கமைத்த தாகு
மெடுத்தவினை யுருவுறுவ துயிரேற் றனே
யிருவினைக்குத் தக்கவுட லெய்து மென்னிற்
சடத்திரளுங் கத்தாவா யறிவொன் றில்லாத்
தன்மையனுங் கூடவொரு சங்கை யின்றே.

(இ—ள்.) இறைவனது சிருஷ்டி ஒரு தன்மைத்தாயன்
றிப் பற்பல வுயர்திணை அஃறிணைகளாக் காண்டற் கேது
வென்னையோவெனின் ஸஞ்சிதத்தினின்றும் பிரிக்கப்பட்ட
பிராரப்த வினைப்பயனேயாம். ஆகவே முற்பிறவிகளிற் செய்
தொழிந்த அவ்வினை பிற்பிறவிகளிற் றொடர்ந்து கூடுத
லுண்மையாயின் அவ்வினையே தனுகரண புவனபோகங்
களை யளிக்குமென்றது அளிப்போனு மொருவன் வேண்
டப்படுவ னென்பதற்குக் காரண மென்னையோ வெனின்
வினைகள் ஜடமாகலான் இறைவனது நியதியின்படி பய
னாய்ச்சென்று கூடுவதேயன்றித் தானாயளிக்குந்தகவுடைத்
தன்று. செய்த வினைக்குத் தக்க பயனாய்த் தனுகரணாதிக
ளைப் பசுக்கள் பொருந்துமாயின் இச்சையானன்றி வினை
செய்வாரின்மையானும் இச்சித்தவாறே பலிக்குந் தனுகர
ணாதிகளாகலானும் அவற்றைப் பசுக்களே ஏன்றுகொள்ளு
மென்பதொழித்து அதற்கோரிறைவன் வேண்டப் படுவ
னென்பது செல்லாதெனின் அறிவிக்கினும் அறியாத ஜட
மாகிய மாயை தனுகரண புவனபோகங்களாய்ச் சமைதற்
கும் அறிவித்தானன்றி அறியமாட்டாதபசுக்கள் சமைந்த
வற்றைத் தாமாகக்கூடி யனுபவித்தற்கும் ஆற்றலுடையன
வன்று. ஆகலான் அவ்விரண்டனையுங் கூட்டிக் காரியப்படு

த்தற்கோரிறைவன் இன்றியமையாச் சிறப்பினனும் வேண்டப்படுவனெனத் தெருண்டோர் செப்புவ ரென்பதாம்.

ஆகலான் அவ்விரண்டனையுங் கூட்டி என்பது முதல் குறிப்பெச்சம்.

வினையடுத்த எனவும் மற்றவை அசேதனம்எனவும் இருவினைக்குத் தக்க வுடல்தானே எனவுமாறுக.

பறவை பசுநரரென ஒன்றற்கொன் றேற்றமாகிய வேற்றுமைகாட்டிவிளம்பினமையால் இனம்பற்றிநரர்க்கு மேனின்ற ஸுரவர்க்கமும், பறவைக்குக் கீழ் நின்ற ஊர்வன நீர்வாழ்வன தாவரமென்னு மூவர்க்கங்களும், பண்ணியது முன்னைவினைப் பான்மையென்றமையால் அப்பான்மையினுலாகும் ஆண் பெண் அலியெனு முத்திறங்களும், அவற்றுள்ளும் அறியவேண்டியவற்றை யறியாமை அழகின்மை கூன் குருடு செவிடு ஊமை முடமுதலிய குறைபாடுடைமைகளுங் கொள்ளப்படுவனவாம்.

படைத்தது—பசுக்கள் அனுபவமாகப்பெற்றது. பறவைக்கும் நரர்க்கும் இடையே பசுவென்றது மிருகப் பொதுவின் மேற்று. முன்னை வினைப்பான்மை—முற்பிறவிகளிற் செய்து திரண்டிருக்கும் ஸஞ்சித வினையினின்றும் பகுத்தெடுக்கப்பட்ட பிராரப்த வினைப்பயன். என்பர் என்றது முன்னர்வரு மறுப்புக்களோறுஞ் சென்றியையும். அடுத்தல் என விரித்துரைக்க. அடுத்தல், கூடுதல், என்பன ஒருபொருட்கிளவி. மற்று அசை. அவை என்னுஞ் சுட்டு நல்வினை தீவினைஎன்னும் பகுப்பின்மேற்று. அமைத்தது—நியதி. ஆதல்—அனுபவமாதல். எடுத்தவினை—செய்தவினை. திரள்—தனுகரணாதிகள். கூடவொரு சங்கையின்றே என்றது, கூடாதென்னு மெதிர்மறையாய்வந்த இகழ்ச்சிக் குறிப்பு. (கஉ)

அல்லன் மிக வுயிர்க்கிவைதா னணைத்த நீச
னருவினைகளருந்துதற்கோ வினையோ வன்றிச்

சொல்லிவரு மாயையோ வணுவை முந்தச்
 சூழ்ந்ததெனு முரைமுதலோர் தொடக்கிலார்
சொல்லவரு மெனினுளதா முயிருண்டாவே[பா
 யுளதுமல மலமுளதா வொழிந்த வெல்லா
நெல்லின்முளை தவிடுமிபோ லநாதி யாக
 நிறுத்திடுவ ரிதுசைவ நிகழ்த்து மாறே.

(இ—ள்.) மேன் மேலும் பிறப்பிருப் பிறப்புக்களாகிய துன்பத்திற் கேதுவாகத் தனுகரணபுவனபோகங்களைப் பசுக்கட்கு இறைவன் கூட்டுவித்தது வினைப்பயன்களை யனுபவிக்கும் பொருட்டாயின் தனுவாதிகளை யின்றியமையாத வினையோ அன்றித் தனுவாதிகளோ பசுக்களை முன்னர்த் தாய் வியாபித்தது இதற்கு மறுமாற்ற மென்னெனலோவெனின் இவ்விரண்டனுள் எஃதாயினுங் காரணமின்றிச் சுத்தான்மாக்களைப்பற்றியதாயின் முயற்சியானொழிக்கினு மீட்டுமீட்டும் பற்றத்தடையின்றன்றோ ஆகலான் அத்தன்மைத்தன்று. பசுக்களுள்ளவன்றே ஆணவமும் ஆணவமுள்ளவன்றே மாயைகன்மங்களும் உளவாம். அது தண்டுலத்தோடபேதமாய்த்தோன்றிய உமி தவிடு முளைகளைப்போல அநாதியேயாமெனத் தெளிந்தோர் வித்தாந்தமாக நாட்டுவர். சிவாகமங்கள் செப்புவதும் இவ்வண்ணமேயாமென்பதாம்.

ஆகலான் அத்தன்மைத்தன்று என்பது குறிப்பெச்சம். உளவாமென்பது சொல்லெச்சம்.

மாயையினது உருவாதி சதுவிதமாயென்பது முதலிய பொதுவியல்பினைக்கூறிய ஆசிரியர் சிறப்பியல்பினையுங் கூறுதொழியாரென்னுங் கருத்தினைப்ச் சொல்லிவருமாயையோவென்றான். சிறப்பியல்பு வருஞ்செய்யுட்களாற் பெறப்படும். மறுமாற்றத்திற்கு வழியில்லையென்னுங் கருத்துடையனாகி என் உட்புரையெனக்கடாயினனென்க. அது செய்யுணடைபற்றி எனுமுரையென ஒற்று கெட்டு நின்

றது. முதல்—அநாதியென்னும்பொருட்டு. தொடக்கு—பந்தமென்னும்பொருட்டாய் ஆணவமலத்தையும், ஒல்லைவருதல்—கடிதின் வருதலென்னும் பொருட்டாய்க் காரணமின்றி வருதலையும், உணர்த்துவனவாம். மீட்டுமீட்டுமுளதாமெனா விரித்துரைக்க. மாயையின் காரியமாகிய மாயேயமும், ஆணவத்தைச்செலுத்திநிற்குந் திரோதமும், எஞ்சாவாறு அவ்வவற்றுள் அடக்கினல்லாமென்றார். பசுத்துவத்தைநோக்கி நெல்லென உவமித்தாராயினும பொருள் இனிது விளங்குதற்பொருட்டுத் தண்டுலத்தின்மேல்வைத்துரைக்க.

தண்டுலத்தின்கண்ணே உமியுள்வழி தவிடு முளையினின்றும் பைங்கூழைத்தோற்றுவிக்கும். உமி நீங்கியவழி தவிடு முளையும் உளவாயினும் பைங்கூழ்தோன்றா. அதனையொப்ப ஆன்மாவின்கண்ணே ஆணவமுள்வழி மாயை கன்மத்தினின்றும் இன்பத்துன்பப்பயன்களைத் தோற்றுவிக்கும் ஆணவ நீங்கியவழி மாயையும் கன்மமும் உளவாயினும் இன்பத்துன்பங்கடோன்றா. ஆகலான் ஆன்மா கன்மம் மாயை ஆணவம் என்பவற்றிற்கு அடைவே தண்டுலம் முளை தவிடு உமி இவைகள் உவமைகளாக்கொள்ளற்பாலனவாம். அது 'உயிருண்டாவேயுளதுமலம்' என்றதனுன் முளை தவிடுகள் வியக்தமாதற்கு முன்னரே வியக்தமாகி அவற்றொடு தண்டுலக்கருவையுந்தாங்கித்தோன்றுவதாகிய உமியேயன்றிஏனையவை ஆணவத்திற்குவமையாதல் செல்லாமையின்வைத்தும் இனிதுவிளங்கும். (கரு)

அருத்திமிகுங் கலைகால நியதியுடன் வித்தை
யராகமிவை யனந்தரான் மாயைதனி லாகு
முருத்திரராற் கலையதனிற் பிரகிருதி குணங்க
ளுளவாகு யாங்காரம் புந்திதனி லுதிக்குந்
தெரித்தவிது திரிவிதமாந் தைசதவை காரி
திகழ்தருபூதாதியெனத் திருந்தியசாத்துவிதம்

ரித்தகுண மனம்புத்தி யிந்திரிய மென்று
விளம்பியசோத்திராதிமுதல்விளங்கியிடும் விரி
[ந்தே.
மன்னியகன் மேந்திரிய மானவிரா சதஞ்சேர்
வாக்காதி வைகாரி மருவிவருஞ் சத்தந்
தன்னைமுத லாகியதா மதமிகுமாத் திரைபின்
றருமிதனின் வானனிலமனல்புனன்மண்சத்த
முன்னதனில் வெளியாதி யொன்றொன் றுகு
முறையிலுறு மிருமையயன் முடிவா முன்னே
யுன்னுசதா சிவராதி யதிபதிக ளொடுக்க
முதித்தவடைவெனவுரைப்பருணர்ந்துளோரே

(இ—ள்.) மாயேயமலமாவது கலையாதி மண்ணந்தமாயுள்ள தத்துவங்களாத்தோன்றி நின்றொடுங்குந் தன்மைத்தாகிய மாயாகாரியமாமெனச் சிவாகமத்தெருளுடையோர் செப்புவ ரென்பதாம்.

அருத்திமிகு மனந்தரான் மாயைதனிற் கலைகாலநியதியுடன் வித்தையராக மிவையாகுமெனவும், தெரித்தவிதுதைசதவைகாரிதிகழ்தருபூதாதியெனத் திரிவிதமாமெனவும், திருந்தியசாத்துவிதகுணம் முதல் விரிந்து விளங்கியிடுமனம் புத்தியிந்திரியமென்று விளம்பியசோத்திராதி விரித்தவெனவும், இராசதஞ்சேர்வைகாரிமன்னிய கன்மேந்திரியமான வாக்காதிமருவிவருமெனவும்,தாமதமிகுபின்சத்தந் தன்னை முதலாகிய மாத்திரைதருமெனவும், முன்னதனிற் சத்தம்வெளியாதியொன்றொன்றுகுமிருமை முறையிலுறுமெனவுங்கொண்டு கூட்டுக.

அவைவருமாறு:—அருளின துபகாரத்தை அயராமையாலாகிய அன்பின் மிக்கோராய் விளங்கும் அஷ்டவித்தியேசுவரருட் டலைவராகிய அனந்தரால் அசுத்தமாயையிற் கலைகால நியதியெனப்படு முத்தத்துவங்களும் அவற்றுட்

கலையினின்றும் வித்தையும் வித்தையில் அராகமும் தோன்றும். பிரளயாகலருட்டலைவராகிய ஸ்ரீகண்ட வுருத்திரரால் அக்கலையிற் றானே மூலப் பிரகிருதியும் மூலப்பிரகிருதியிற் குணதத்துவமும் குண தத்துவத்திற் புத்தியும் புத்தியில் அகங்காரமும் அகங்காரத்தினது ஸத்துவகுணக் கூறாகிய தைஜஸத்தில் நிருவிகற்ப ஸவிகற்ப வுணர்வுகளை யுடைய மனமும் சுரோத்திரம் துவக்கு சக்ஷு ஜிஹ்வா ஆக்கிராண மென்னு ஞானேந்திரியங்களைந்தும் ரஜோகுணக் கூறாகிய வைகாரிகத்தில் வாக்குப் பாதம் பாணிபாயு உபஸ்த மென்னுங் கன்மேந்திரியங்களைந்தும் தமோகுணக் கூறாகிய பூதாதிகத்திற் சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தமென்னும் தன் மாத்திரைகளைந்தும் தன் மாத்திரைகளில் அடைவே ஆகாயம் வாயுத் தேயு அப்புப் பிருதுவி யென்னும் பூதங்களைந்தும் பூதங்களுள் ஆகாயத்தில் விஷய வடிவாகிய சப்தமும் இரந்திரமுமாகிய விருகுணங்களும் வாயுவில் அவ் விரண்டொடு பரிசமும் சலனமுமாகிய விருகுணங்களும் தேயுவில் அந்நான்கொடு ரூபமும் வெப்பமுமாகிய விரு குணங்களும் அப்புவில் அவ்வாறொடு ரஸமும் தட்பமுமாகிய விருகுணங்களும் பிருதுவியில் அவ்வெட்டொடு கந்தமும் கடினமுமாகிய விருகுணங்களுந் தோன்றி விளங்குவனவாம். இப்பூதங்கட்கு முறையே ஸதாசிவர் மஹேசுவரர் உருத்திரர் அரி அய னென்போர் அதிபதிக ளாவர். தோன்றிய இத்தத்துவங்கள் ஆன்மாக்களது வினைப் பயனுக்கியைய நிலை பெற்று ஒடுங்குங்காற் றோன்றிய அடைவே ஒடுங்குவனவாம்.

அன்பே வடிவாய் முடிந்த அணுஸதாசிவரை நோக்கி அருத்தி மிகுவரெனப் பட்டனர் அஷ்டவித்தியேசுவரர். ஆணவமலத்தானுய மறைப்புச்சிறிது நீங்கினு லன்றிக் காலநியதிகள் பயன்படுவன வன்றாகலின் நீக்கற்குரிய கருவியாகியகலை முன் வைக்கப்பட்டது. குணங்களென்னும் பன்மை

அவ்வியக்தமாகிய பிரகிருதியினின்றும் வியக்தமாதலின் வைத்துவந்தது. தெரித்தல்—வாயிற்காட்சிக்கு விஷயமாவ தொன்றனை இன்னதென நிச்சயிக்கும்படி புத்தி தத்துவத்திற்குத் தெரிவித்தல். தேஜஸையுடையது தைஜஸம். அது ஈண்டுத் தைசதமெனத் திரிந்தது. திகழ்தரு என்றது சிங்கநோக்காய்த் தைஜஸத்தைப் பூதாதிகவைகாரிகங்களிரண் டினும் மிக்க விளக்கமுடையதெனப் பொருடரும்.

திருந்திய சாத்துவிதகுணா தைசதமென விரித்துரைக்க. விருப்பு வெறுப்புக்களின்படி முயன்றதில் ஸாத்தியமாகாமையின் வைத்துண்டாம் உதாஸீனம்போலாது புத்தியாற் றரப்பட்ட விருப்பு வெறுப்புக்களி னீங்கியவழி நிற்றலோ டொத்து முன்னறியாததாய் எதிர்ப்பட்ட விஷயங்களைப் பற்றுதன்மாத்திரையே யன்றி அவற்றை நன்கு தீதெனப் பகுத்துணர்ந்து விருப்புவெறுப்புக்களை யடைவன வன்மையால் மனத்தையும் சோத்திராதிகளையும் திருந்திய சாத்துவிதகுணதைசதம் விரித்ததென்றார். புத்தி யிந்திரியமென்று விளம்பிய சோத்திராதி என்றது கண்ணுடியை உபநேத்திரமென்பது போலும் உபசாரமென்னும் பொருட்டு. உபசரித்தது கன்மேந்திரியங்களை நோக்கியேயாம். மனம் எதிர்ப்படும் விஷயங்களைச் சேய்மைத்தாக நிருவிகற்பமாகவும் அணிமைத்தாக ஸவிகற்பமாகவும் இந்திரியங்கள் வாயிலான் உணருந் தகைமைத்தாகலின் முதல் விரிந்து விளங்கியிடுமென்றார். விரித்த என்புழி துவ்விறு விகாரத்தாற்றொக்கது. விரிந்தே என்னும் ஏகாரமீற்றசை.

இராசதஞ்சேர்வைகாரி யென்றது ஸங்கற்பத்தானன்றி வாய் முதலிய பொறிகள் திறத்தல் முதலிய விகாரப்படுவ னவன்றாகலின். கோளில் பொறியிற் பிரித்துணர்த்துவாராய் முதல் விரிந்து விளங்கியிடுஞ் சோத்திராதி என்ற வாறே ஊமை முதலிய குற்றங்களிற் பிரித் துணர்த்துவார் மன்னிய வாக்காதி யென்றார். மன்னுதல்—அவ்வத்தொழிற்குரிய ஆற்றலுடைத்தாதல்.

பூதாதி யகங்காரத்தாற் றரப்பட்ட தன் மாத்திரைக ளாற் பூதங்களிடமாகத் தோன்றும் சப்தாதி விஷயங்க ளைப்பற்றி வியாபரிக்குங்கால் அறியாமை காரிய ரூபமாய் வளர்தலின் தாமதமிகு பின்னென்றார். தாமதம்—அறியா மை. பின்னென்றது தைசத வைகாரிகங்களின் பின்னர்த் தோன்றிய பூதாதிக மென்னுங் குறிப்பாகுபெயர். மாத்தி ரை—தலைக்குறை.

விருப்பு வெறுப்புக்கள் தம்மின் ஒன்றற்கொன்றேதுவா யினும் விருப்புமட்டு நிகழின் அது சிறிது போழ்திறுதல் சிறிது நாட்களிறுதல் தானே நழுவிப்போம். அவ்வாறன்றி விரும்பி யதனை யடைதற்குத் தடையா யவற்றின்மேல் வெறுப்புண்டாயின் அது விருப்புத்தடித்து வேண்டும்ஸா தனங்களையீட்டி விரும்பி யதனையனுபவித்துத்தொலைக்கும் படி அளவிறந்த பிறவிகளை யுண்டுபண்ணலானும் அவ்வெ றுப்பிற்கேது அறியாமையே யாகலானும் தாமதகுணம் காரியத்தால் வெறுப்பெனவும் காரணத்தால் அறியாமை எனவும் இருபெய ருடைத்தாகும். அவற்றுள் அறியாமை யென்னும் பெயரே ஈண்டைக்கியை புடைத்து.

இதனின் ஜாதியொருமை. முன்னென்றது பூதங்களுண் முந்தியவானின் மேற்று. வெளியொடு நின்ற ஆதி—சப்த மென்பதனோடுஞ் சென்றியையும். இருமை—சப்தமும் இரந்திரமு மென்னும் இவ்வடைவே வரும். முறையினுறு தல்—முந்திய வற்றோடு பிந்திய இருமையும் உறுதல். வான முதலிய பூதங்களது வடிவங்கள் குறிகள் பீஜங்கள் இவற் றை வழிநூலாற்காண்க.

முன்னே யுன்னுதல்—திரோதான முதலிய நான்கும் முறையே மஹேசுவரர் முதலிய காரணேசுவரரால் ஸங் கற்ப மாத்திரையானே அவ்வவ் வான்மாக்களின் வினைப் பகுதிகட்கியைய நிகழ்வதாகவென அனுக்கிரஹ ரூபமாய் ஸங்கற்பித்தல். ஒடுக்கமும் உதிப்பும் ஓதியதனால் இடைப் பட்ட நிலை தானேபோதரும். ஆண்டாண்டு வேண்டப்ப

டும் உண்மைகள் வருவித்துரைக்க. அப்புவிற்கு இயற்கை வெப்பமும் உளதாதல் "நீருறு தீயே" என உவமித்தரு ளிய திருவாக்காற் றெருளுக.

கலைமுதலிய பஞ்ச தத்துவங்களும் பெத்த திசையிற் றொழில்புரிந்தும் முத்தித்திசையிற் றொழி லொழிந்தும் நிற்பனவாகலான் அவ்விரண்டற்கும் பொதுப்பட மாயை தனிலாகுமெனவும் பிரகிருதிமுதலிய தத்துவங்கள் முத்தித் திசையினும் வாயுரு ரூபமாய்த் தொழில் புரிவதாகலான் அவற்றின் வேறாகப் பிரித்துக் கலையதனிற் பிரகிருதி குணங்களுளவாகு மெனவும் விளம்பினாராயினும் கலை முத லிய பஞ்ச தத்துவங்களும் முன்னர்ப்பெற்ந்த திசைக்கே உபயோகப் படுதலின் வைத்து அவை மல கன்மங்க ளோடு விரவிய மாயாகாரிய மெனப்படுமாகலின் அசுத்த மாயையிற் றோற்றிய வென்ப.

சுத்த மாயையின் அதோ பாகமே அசுத்த மாயையாக லாற் சுத்த மாயை காரியப் பட்டவாறே அதனோடு அசுத்த மாயையும் பராசக்தியாற் காரியப்படுமென்பதற் கையமின் றாகலானும், அது "விந்துவின் மாயையாகி" என்னும் வழி நூற் செய்யுளா னினிது விளங்கக் கிடத்தலானும், லய சிவாதிகளைப்போல அனந்தர் ஸ்ரீகண்டருத்திரர் என்னும் இவர்கட்குத்தோற்றங் கூறுமையானும், திருவடிப்பேற்றைச் சாசுவதமாகப்பெற்று அதன்கண்ணே அருத்தி மிகுதலான் அனந்தரும் திருவடிப்பேறு சாசுவதமாகும் பொருட்டுஅரு த்தி மிகுதலான் ஸ்ரீகண்ட ருத்திரரும் ஸதா நிஷ்டராய் வாழ்வோராகலின் அவ்வாழ்க்கையினு மிக்கதொன் றுள தெனவெண்ணி நிஷ்டையிற் பிரிந்து அசுத்தமாயையைக் காரியப்படுத்தப் புகுவோரல்ல ராகலானும் நூற்பொருள் கேட்குமாணுக்கர்க்குச் சுருதியுக்தி யனுபவங்களாற்றெரு ட்டவேண்டுதலை உத்தேசித்து எந்த விஷயத்தை எந்தப்பிர மாணத்தால் எவ்வளவு விசேஷமாக விளக்க ஸாத்தியப்ப டுமோ அவ்வளவும் விளக்கிக்காட்டல் ஆசிரியன்மாரது

கருணைக் கியல்பாகலானும், சுத்த மாயா காரியங்களில் நஷ்ப அறிவினர்க்கு ஒருவாறு விளங்குவதாகிய வைசந்தி வாக்கின் மேற்பட்டவை ஞான ஸாதகர்க்கன்றி விளங்காவாகலானும், அசுத்த மாயா காரியங்களின் றோற்றத்தை அனுபவத்தானுங் காணக் கடவதாகவெனக் கருதி ஒடுங்கிய அடைவே உதிப்பதாகிய முறைமையின் வைத்து உட்புறம்பென்னும் சரீடத்துங் கருவிகள் ஒடுங்கப்பெற்று நிற்போருட் பிறரானுணர்த்தப் படுங்காற் சிவஸங்கற்பமுமொத்தவழி ஜாக்கிரத்தே யதீதத்தைப் பிரியாது நிற்போராகிய அனந்தர்பால் கலை முதலிய பஞ்சதத்துவங்களும் ஜாக்கிரத்தே சுழுத்தியைப் பிரியாது நிற்போராகிய ஸ்ரீகண்டருத்திரர்பால் அப்பஞ்ச தத்துவங்களேயன்றிப் பிரகிருதி முதல் பிருதுவி யீறாகிய இருபத்து நான்கு தத்துவங்களும் தோன்றி விளங்குதலைக் காணப்பெறலாமெனக் காட்டுவதாக அனந்தரான் மாயைதனி லாகுமெனவும் உருத்திரராற் கலைபதனிலுள வாகுமெனவும் ஓதியதேயாம். அவ்வாறன்றி மேற் கூறியவாறே ஒரோ வழி அசுத்த மாயா தத்துவங்களையும் கூடித் தொழிற் படுவோராகிய அவர் அத்தத்துவங்களைச் சிருஷ்டிப்ப ரென்பது தகவுடைத்தாகாமையான் அனந்தரால் உருத்திரரால் என்பவற்றை உருபுமயக்கமாக் கொண்டு பொருள்கோடலே உரிமையாமென்பர். (கச-கரு)

நண்ணியிடு முருவதனுக் கேது வாகி
  நாலுபோ கங்களாய் நாசோற் பத்தி
பண்ணிவரு மாதலா லனாதி யாகிப்
  பலவாகி யணுக்கடொறும் படர்வ தாகி
யெண்ணிவரு மனவாச கன்மத்தா லியற்று
  மியல்பினதாய் மதிகதமா யிருபயனும் பாவ
புண்ணியமாய்ப் புலர்காலை மாயை மேவிப்
  பொருந்துமிது கன்மமலம் புகலுமாறே.

(இ—ள்.) கன்ம மலமாவது பசுக்க ளெவரும் ஒரு தன்மைத்தாயன்றித் தேவர் முதற் ருவரமீறுகிய எழுவகைப்பட்ட வுடம்புகளை எடுத்தற்குக் காரணமாய், எடுத்த வுடம்புகள் யாண்டும் நிலையுதலாகா வண்ணம் அழிந்து மீட்டு மீட்டும் உண்டாகும்படி செய்தலான் அநாதியாவதாய், அவ்வுடம்புகளை எடுத்த மாத்திரையானே அன்னபானாதிகளைக் கொள்ளுதல் மல மூத்திராதிகளை விடுதல் என்னு மிவை இன்றியமையாதனவாய் நிகழும்படி பசுக்கடோறும் விபாபித்து நிற்பதாய், அன்ன பானாதிகளை யீட்டற் பொருட்டு வேண்டப்படும் உழவு தொழவு வாணிகம் எழுத்துச்சிற்பம் பரதமென்னும் அறுவகையுள் ஒவ்வொன்றும் அனேகமாக விரிவதாய், அவைபற்றிவரும் பலவகைப்பட்ட அனுபவங்களாய், அவ் வனுபவத்தின் வைத்துண்டாம் விருப்பு வெறுப்புக்கள் காரணமாக மனத்தாற் சங்கற்பித்து வருதலையும் அச்சங்கற்பத்தின் வழியே வாக்குங்காயமும் நிகழ்த்தும் வசனத்தானும் தொழிலானும் ஈட்டப்படுதலையும் இயல்பாகவுடைய அன்னதானம் வித்தியாதான முதலிய நல்வினைகளும் கொலை களவு முதலிய தீவினைகளுமாய் இன்னவற்றைச்செய்தேம் செய்கின்றேம் செய்வேமெனப் புத்தி தத்துவம் பற்றுக்கோடாகச் சார்ந்து கிடப்பதாய், அதனால் இன்பத் துன்பங்களை யளிக்கும்புண்ணிய பாவங்களாய், பிரளய காலத்து ஆணவமலத்தோட பேதமாகிய மாயாமலத்தி னடங்கிக்கிடந்து பயனளிக்குமாறு சிருஷ்டிகாலத்துப் பசுக்களைத் தொடர்ந்து கூடுவதாகும். இத்தன்மையுடைத்தெனச் சிவாகமங்கள் செப்பு மென்பதாம்.

கன்மமலம் நண்ணி யிடுமுருவதனுக்கேதுவாகி நாசோற்பத்திபண்ணிவரு மாதலா லநாதியாகி யணுக்கடொறும் படர்வதாகிப் பலவாகி நானுபோகங்களாய் மனம் எண்ணி வருவாச கன்மத்தா லியற்று மியல்பினதாய் மதிகதமாயிருபயனும் புண்ணிய பாவமாய்ப் புலர்காலை மாயை மேவிப்பொருந்தும் இதுபுகலுமாறே எனக்கொண்டு கூட்டுக.

பஞ்ச சரீரங்களையும் எடுத்தற்கு அநாதிகன்மமே காரணமாயினும் அருவ சரீரங்களைப்போல வீடடையு மளவும் நிலைபெறாது அடிக்கடி தோன்றி நின்றழியும் உருவசரீரத்திற்குச் சிறப்புவகையாற் காரணமாதல்பற்றி 'நண்ணி யிடு முருவதனுக் கேதுவாகி' என்றார். நாசோற்பத்தி என்றது புனருற்பவமுள வாதலை அயராமைப்பொருட்டு. பலவாதல்— உழவாதியவாய் விரிதல். உழவு—பிறர்பாற்கைம்மாறு கருதாதுசெய்யு முயற்சி ஆதாயத்தில் ஆறிலொன்று கடமையெனப்படுங் கைம்மாறு கருதிச்செய்யும் அரசாட்சியும் தொழிலினடங்கும், பற்றின்றிச் செய்யும் சிவஞானிகளது கர்மங்கள் செய்தார்க்குப் பயனளிக்கும் புண்ணிய பாவங்களாகாமையின் ஏனையோரை நோக்கி மனமெண்ணி வருவாசகன்மத்தாலியற்றும் என்றார். எண்ணுதல்—ஸங்கற்பித்தல். வாச கன்மமெனக் காரியங்களைக் காரணமாக வுபசரித்தார். வாசவென்றது வடமொழி மதம். அத்தாலென்பது வாச என்றதனோடுஞ் சென்றியையும்.

புலர்காலைமாயை மேவிப்பொருந்து மென்றது புண்ணிய பாவங்கள் மாயாகாரியமாகிய கருவிக் குழாங்களின் றொழிலொழிந்த சுழுத்தி முதலிய அவஸ்தைகளாகிய நித்தியப் பிரளயத்து மாயையினடங்கிக் கிடந்து மீளக்கருவிக் குழாங்கள் தொழிற்படுவதாகிய சொப்பனமுதலிய அவஸ்தைகளினும் கற்பாந்தப் பிரளயமுதலிய மஹா பிரளயங்களில் அவ்வாறே யடங்கிக்கிடந்து மீளச் சிருஷ்டிக்காலங்களினும் இன்பத்துன்பங்களாய்வந்து கூடுதலை யுணர்த்தும். புலர்தல்—நீங்குதலென்னும் பொருட்டாய்ப் பிரளயத்தை யுணர்த்திற்று. இது—இத்தன்மை யுடைத்து. புகுதற்கு வினைமுதல் அவாய் நிலையான் வந்தது. (௧௬)

கன்மநெறி திரிவிதநற் சாதியாயுட் போகக்
 கடனதென வருமூன்று முயிரொன்றிற் கலத்த
லுன்மையதா மல்லதுணை யாகா தானுந்
 தொடங்கடைவி னடையாதே தோன்று மாறித்

தன்மைதரு தெய்விகமுற் பௌதிக மான்மிகமாந்
 தகையிலுறு மசேதனசே தனத்தாலுஞ் சாரு
நன்மையொடு தீமைதரு சேதனனுக் கிவணா
 ணடிலதனூழ்வினையா நணுகுந் தானே.

(இ—ள்.) அக்கன்மமலமும் பிராரப்தம் ஆகாமியம் லஞ்சிதமென மூவகைப்படும். அவற்றுட் பிராரப்தமாவதி யாதெனஆராயுங்கால் முற்பிறவிகளிற்செய்தவினைப்பயன் வரையறுத்தகாலநியதிகளின் படியேயன்றிப் பிற்பிறவிகளிற் பசுக்கட்கு அனுபவமாய்வாராதென்னும் ஆகமப்பிரமாணத் தானும் பிற்பிறவிகளிற் செய்யுமுயற்சியோடு பயன்முரணுக வுந்தோன்றுதலின்வைத்து அனுமானப் பிரமாணத்தானும் முயற்சியும் பயனும் தெய்விக முதலிய ஐந்துவாயில்களான் அனுபவமாய்வரும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தானும், பசுக்கடோறும் அபேதமாய்த்தோன்றுந் துறவு முதலிய ஆச்சிரமங்கட் குரிமையுடைத்தாகிய அந்தணர் முதலியவருணம் பருவம் போகம் என்னு மூன்றற்கும் இன்றியமையாச் சிறப்பிற்றாய் வேண்டப்படுவதெனக்கருதிப்புண்ணியபாவங்களைச் செய்தலையும் இன்பத்துன்பங்களை யனுபவித்தலையும் உடையபசுக்கள் இப்பிறவியிற்செய்யு முயற்சிகளும் அவற்றொடு முரணியும் முரணாதும் அவர்க்கு வரும்பயன்களும் ஆகிய வனைத்துமாமெனத் தெளியப்படு மென்பதாம்.

கன்மநெறி திரிவிதம் நாடில் ஊழல்லதுணைவாகாதானும் தொடங்கவினையாதே மாறித்தோன்றும் தன்மைதருதெய்விக முற்பௌதிகமான்மிகமாந் தகையிலுறுமசேதன சேதனத்தாலுஞ்சாரும் உயிரொன்றிற் கலத்தல் வருநற்சாதியா யுட்போக மூன்றும் கடனெதன இவண்தரு நன்மையொடு தீமை தொன்மையுறு சேதனனுக்கு நணுகும் அதன் ஊழ்வினையாந்தானே எனக்கொண்டு கூட்டியும், தோன்றுதலானும் உறுதலானும் சாருதலானும் என விரித்தும் உரைக்க.

தெளிதற்குப் பிரமாணமாக் கொண்டவற்றுள் நடுநின்றதற் கேதுவாயதே ஆராய்தற்கும் ஏதுவாயதென்க. மாறித் தோன்றும் என்றது உம்மைத்தொகை. ஒன்றில்—ஒவ்வொன்றில். கலத்தல்—அபேதமாதல். நற்சாதி என அரசின் மேல்வைத்து அந்தணர் முதலிய வருணபேதங்களைக் கூறினமைபால் அவ்வருணங்கட்குரிய துறவு முதலிய ஆச்சிரம தர்மங்களும் அடங்கும். ஆயுள்—வாழ்நாளென்னும்பொருட்டாய் அதன் பகுதியவாகிய பாலகௌமார வார்த்திகமென்னும்பருவங்கண்மேற்று. போகம்—அருந்தல் பொருந்தல்கள். மூன்றுமென்புழிகுவ்வுருபு தொக்கின்றது. கடனெனல்—இன்றியமையாச்சிறப்பிற்றெனக்கருதல். நன்மையொடு, தீமைஎன்றவை முயற்சியினோடும் பயனோடும் தனித்தனி சென்றியையவ. சேதனனுக்கென்றெடுத்தவர் அஃறிணைப் பசுக்களையுந் தழுவற்பொருட்டு அதன் ஊழ்வினையாமென முடித்தார். தொன்மையது என முயற்சியினும் ஊழ் எனப் பயனினும் தனித்தனி கிளந்துரைத்தது ஐயமுண்டாகாமைப்பொருட்டு. பிராரப்தம், தொன்மை, ஊழ் என்பன ஒருபொருட்கிளவி. சேதனன், அதன், என்பவை ஜாதியொருமைகள். தானே என்றது தேற்றத்தின்கண் வந்தது.

தன்மைதரு தெய்விகம்—முன்னிலை யின்றியே வந்து கூடும் முயற்சியும் பயனும், முற்பௌதிகம்—முன்னிலைப்பட்ட உயர்திணைப் பசுக்களான் வந்துகூடும் முயற்சியும் பயனும், ஆன்மிகம்—பசுக்களதறிவின் கண்ணே தோன்றி நின்றழிவதாகிய மனோராஜ்ய முதலியவற்றான் வந்து கூடும் முயற்சியும் பயனும், சேதனத்தாற் சார்தல்—முன்னிலைப்பட்ட மிருகம் பக்ஷி முதலிய அஃறிணைப் பசுக்களான் வந்துகூடும் முயற்சியும் பயனும், அசேதனத்தாற் சார்தல்—பஞ்ச பூதங்களுளப்பட்ட ஜட பதார்த்தங்கள் வாயிலாக வந்துகூடும் முயற்சியும் பயனுமாம்.

ஆந்தகையி னுறுதல்—முன் வினைக்குத் தக்க பயனாய் வந்து பொருந்துதல். அதனை ஐவகையினுஞ் சேறற்பொருட்டு நடுவண் வைத்தார்.

உயர்திணைப் பசுக்கட்குப் பூதர்களெனப் பெயர் உண்மையானும்; உயர்திணைப் பசுக்களைப்போல உயர் விழிவுகளை யுணர்தல், உபசார அபசாரங்களை யுணர்த்தல், ஒவ்வாவிடத்தும் மன வாக்குக் காயங்கள் ஒத்துச் செய்வதாக நடித்தல், இவை முதலியவற்றிற்கு அஃறிணைப் பசுக்கட்கு ஆற்றலின்மையின் வைத்தும்; அப்பசுக்களை அசேதனத்தோ டொருங்குவைத்து வேறெடுத் தோதினர்.

தவமாதல் அவமாதல் மிகுத்தூழி தெய்வம் முன்னிலைப் பட்டுவந்துகூடும் முயற்சியும் பயனும் சிறப்பியல்பாகலான் அவற்றை இப்பொது வியல்பிற்கு வேறாகக் காண்க. (கஎ)

மேலைக்கு வருவினையே தென்னி னங்கண்
விருப்பு வெறுப்பென வறியவ் வினையுமெல்லா
மூலத்த வினைப்பயில்வா மென்னி னுமேன்
முற்றியதன் பயனுனக்கு முளைக்குமென்பர்
ஞாலத்து வினைகளிரு திறனுகும் புந்தி [றிரண்டா
நண்ணுத வினைநணுதும் வினையெனவொன்
மேலத்தா னிதமகித மாமிதனுல் வழுவா
தெய்தியிடும் புண்ணிய பாவங்க ளென்றே.

(இ—ள்.) ஆகாமியமாவது மறு பிறப்பிற் கேதுவாய் இப்பிறப்பி லீட்டப்பட்டுத் தொடர்ந்து கூடும் புண்ணிய பாவங்களாம். இப்பிறப்பிற் செய்வது முற்பிறப்பிற்செய்த வினைப் பயனுயின் மறுபிறப்பிற் கேதுவா யீட்டப்படுவ தென்பதியாதெனின் இப்பிறப்பில் வினை செய்தற்கண்ணும் இன்பத்துன்பங்களை யனுபவித்தற்கண்ணும் உண்டாம் விருப்பு வெறுப்புக்களேயாம். அவ்விருப்பு வெறுப்புக்களும் விரும்பியவை கைவரற் பொருட்டும் வெறுத்தவை ஒழியுமாறும் செய்யுமுயற்சிகளும் பிராரப்த வினைப்பயனேயா மென்னின் அஃதொக்கும். அற்றேல் அம்முயற்சிவாயிலாக வரும் பயன் ஸங்கற்பத்தோ டொக்கின் மகிழ்ச்சியும் முரணின் வாட்டமும் அடையலாகா.

அடையிற் பிராரப்த மென்பதை மறந்து முயற்சியை யெமதென்ப் பாராட்டிக்கொண்டு நாமென்னும்போத முனை த்தெழுந்ததாகும். அவ்வாறாகு மேற்பிராரப்தப் பயனென் றுரைத்த நினது முயற்சி நின்றால் நூதனமாகச் செய்ய ப்பட்டதாகவே யுற்பவிக்கும். அன்றியும் அவ்விருப்பு வெறுப்புக்கள் விரும்பப்பட்டதும் வெறுக்கப் பட்டது மாகிய வினைக்கும் போகத்திற்கும் முன்னிலை யாயினார்மா ட்டுச் சென்று கூடுவதனால் அவர்க்குக் கைம்மாறாகப் புத்தி பூர்வமாச் செய்வதேயன்றி அபுத்தி பூர்வமாச் செய் வதாயினும் அஃது அவர்க்கனுபவமாகுங்கால் இன்பத் துன் பங்களாய் முடியுமாகலான், இவ்விருவகைச் செயல்களோடு மேற்கூறிய வாற்றானுய நூதனச் செயலும் புண்ணியபா வங்களாகி இன்பத் துன்பங்களை யளிக்கு மாறு தொடர் ந்து கூடுதலொருதலையாகுமென மேலோர் விளம்புவ ரென் பதாம்.

அங்கண்—இப்பிறப்பிற்றொழில் புரிதலும் போகங்களை யனுபவித்தலும் செய்தற்கண்ணென மேலைச்செய்யுளிற் கூறியவற்றை யுணர்த்திற்று. விருப்பு வெறுப்புக்கள் அந் தக்கரண வியாபாரமாகலான் மானவசிக வினையெனப்படும். எல்லாமென்றது மானவசிக வினைகாரணமாயுண்டாம் வாசிக காயிக வினைகளையுந் தழுவிவந்தது. மூலத்த வினைப் பயில்வு—முற்பிறப்பிற்செய்தவினைப்பயனானிகழுந்தொழில். நாமென்னும் பன்மை, தன்மையி னிகழும் ஒருமையின் மேற்று. அவ்வினையு மெல்லா மூலத்தவினைப் பயில்வா மென்றனைநோக்கி நாமேன்முற்றியதன்பயனுனக்கு முளைக் குமென்றது உடன்பட்டு மறுத்ததாகலான் உடன்பாட்டுச் சொல் வருவிக்கப்பட்டது. உனக்கு முளைக்குமென முன் னிலைமேல் வைத்தோதினாராயினும் அங்ஙன முளைத்தல் நாமென்பாரெவர்க்கும் நழுவாதென்பது கருத்தென்க. முற்றியது—அனுபவித்து முடிந்ததெனவும், போதமுனைப் பாற் புதியவாச் செய்ததாயதெனவும், இருபொருள் பயக்

கும். பயனுனக்கு முளைக்குமென்றது அனுபவிக்க வேண்டும் இன்பத்துன்பங்களாய் நியதி செய்யப்படுமெனத் தேற்றத்தாற் செப்பியது. ஞாலத்து—முன்னிலையாயினோர் மாட்டு. உறுதிப்பொருள் பகைவர்வாயினும் கெடுபொருள் நட்டார்வாயினும் அவரதறியாமையான் ஒரோவழிக் கேட்கப்படுதல் போலச் செயலினுங் காணப்படுவ துண்மையிற் கைம்மாறுத் தொடங்கிய வழியும் புத்திபூர்வமாகவேயன்றி அபுத்தி பூர்வமாகவும் இருவினைக ளியற்றப்படுமென்பார் புந்தி நண்ணுதவினை நணுகும் வினையென வொன்றிரண்டாம் என்றார். வினைகளிருதிறனுகுமென்றது தொகையும், ஒன்றிரண்டாமென்றது வகையுமாம். ஏலத்தானென்பது ஏன்றுகொள்ளவே யென்னும்பொருட்டாய் அனுபவமாகுங்காலென வுணர்த்திற்று. வழுவாமை—ஒருதலே. புண்ணியபாவங்களென்றே எய்தியிடுமெனமாறுக. எய்துதல்—தொடர்ந்து கூடுதல். என்பரென்றதனை விடைகடோறும் பொருந்துமாறு இறுதிக்கண் வைத்துரைக்க.

மகிழ்ச்சி வாட்டங்கட்கேது விருப்பு வெறுப்புக்களேயாகலான் எவ்வாறுகூறினுங் கருத்தொன்றேயாம். விருப்பு வெறுப்புக்களுள்ளும் வெறுப்பிற்கேது விருப்பேயாகலான் ஆசையே ஆகாமியமென்பது அந்தரங்கம். அதுபற்றியன்றே "அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றுந் தவாஅப்பிறப்பீனும் வித்து" என்றார் தெய்வப்புலவர். நாமென்னும் போதமுனைப் பொழிந்தாலன்றிச் செய்வன வெல்லாம் பிராரப்தச்செயலென நினைத்தன் மாத்திரையானேமுற்றியதன்பயன் மேலைக்கு வித்தாய் முளையாது போகாதென்பர் மூதறிஞர். (கஅ)

உற்ற தொழினினை வுரையினிருவினையு முளவா
மொன்றென்று லழியாதா ளொழியா துன்னின்
மற்றவற்றி னிருவினைக்கோர் வினையால்வீடு
வைதிகசைவம் பகரு மரபிலாற்றப்

பற்றியது கழியுமிது விலையா லேற்கும்
பான்மையுமாம் பண்ணுது பலிக்கு முன்னஞ்
சொற்றருநூல் வழியின்வரின் மிகுதி சேருஞ்
சோராதங் கதுமேலைத் தொடர்ச்சியாமே.

(இ—ள்.) ஸஞ்சிதமாவது நினைவி னெழும் ஸங்கற்பமாகிய மானஸிக மாகவும் அச்சங்கற்பத்தின் வழியே நிகழும் வாசிககாயிகங்க ளாகவும் செய்யப்பட்டுப் பயனளித்தற்கண் ஒன்றற்கொன் றேற்றமாவதாய், மேற்கூறியவாறே ஆகாமிய மாகவும் கைம்மாறு கருதியாதல் இரக்க மிகுதி நட்பு மிகுதி புகழ்மேல் வைத்த இச்சை மிகுதி இவற்றாற் கைம்மாறு கருதாதேயாதல் ஈவோர்பா லேற்கப் பட்டும் வரும் புண்ணிய பாவங்களிற் புண்ணியம் நிராசையானும் பாவம் வேதாகமங்களின் விதித்தவாறே செய்யும் பிராயச்சித்தத்தானும் புண்ணிய பாவங்க ளிரண்டும் ஏற்போர் பாலீயப் படுதலானும் கெடுமென்பதே யன்றி ஓர் பாவத்திற்கு எத்துணைப் புண்ணியம் பரிஹாரமாக வேண்டப்படுமோ அத்துணையும் அவ்வாறேயாருகவெனப்பின் ஸங்கற்பிக்கினும் அது பரிஹாரமாகிப் பாவமொழிதலும் எத்துணைப் பாவ மிருக்கினும் அதனால் எட்டுணைப் புண்ணியமேனுங் கெடுதலுமாவ தன்மையின் புண்ணியப் பயனோடு பாவப் பயனும் அனுபவித்தே தீரும் ஆகலான் நிராசையானும் பிராயச் சித்தத்தானும் ஏற்போர்பா லீயப்பட்டும் ஒழிந்தவை போக எஞ்சுவதாய்ப் பிறவிகடோறுஞ் சேர்வதாகும். அவ்வாறே இப்பிறவியிற் சேரும் ஸஞ்சிதம் ஞானநூ லுணர்ச்சியாற் காண்டல் கருதல்களின்வைத்து முப்பொருட்க ளியல்பினையும் யாண்டும் நாடி நாடி முதல்வனை நோக்கி, ஸ்வதந்திரம் பாராட்டிவந்த தமது குற்றத்தை மன்னித்தருள வேண்டுமெனக் குறையிரப்பார்பால் வலி யழிந்து நின்று ஞானசாரியரால் செய்யப்படு நிருவாண தீக்ஷையான் முற்பிறவிகாறுஞ் சேர்ந்த ஸஞ்சிதத்தோடு கெட்டொழியும். குறையிரப்பிற் படாமையான்

வலி யழியாத ஸஞ்சிதம் தீக்ஷையாற்கெடாததுபற்றி அப்பிறவியிற்றனே வீட்டையாதாரை மறு பிறவியிற் செலுத்தி அவர்க்கனுபவமாமாறும்வீட்டைந்தார்க்குத்திருமேனி பரிணமிக்கச்செய்து அதுவாயிலாக அனுபவமாகும்படியும் சென்று கூடுவதாகுமென்பதாம்.

ஆகலான் நிராசையானும்—சேர்வதாகும் என்பது குறிப்பெச்சம்.

உற்றநினைவுரை தொழிலினிரு வினையுமுளவாம் இதுவிலையாலேற்கும் பான்மையுமாம் பண்ணுதுபலிக்கும் அவற்றினொரு வினைக்கோர் வினையால் வீடுவைதிக சைவம்பகருமரபிலாற்றப்பற்றியது கழியும் உன்னின் ஒன்றுமற்றொன்றுலழியாதூ னொழியாது முன்னஞ் சொற்றருநூல் வழியின்வரின் மிகுதிசோரும் அங்குச் சோராதது மேலைத்தொடர்ச்சியாமே யெனக்கொண்டு கூட்டுக.

உற்றநினைவுரை தொழிலினிருவினையு முளவாமென்றதனுவாதம். உற்றது—பொருந்திய தென்னும்பொருட்டாய் ஸங்கற்பத்தின் மேற்று. உன்னினுமெனச் சிறப்பும்மைவருவித்துரைக்க. விலையென்றது பாவத்தோடேற்றற் பொருட்டையும் பொருண்மேற்செல்லுங்காற்கைம்மாறெனப்பொதுப்பெயர்பெறும். தான் செய்யாதும் கைம்மாறின்றியும்வரும் வினை பயனளிக்குமோவென்னும் ஐயமுண்டாகாமைப்பொருட்டு எவ்வினையையாயினும் ஈதலாதல் ஏற்றலாதல் மனப்பூர்வமாகச் செய்வரேற் பயனுதல் ஒருதலை யென்பார் 'பண்ணுதுபலிக்கும்' என்றார். சொற்ற அருநூல் சொற்றருநூலென மரீஇயிற்று.

'ஒரு வினைக்கோர் வினையால் வீடுவைதிக சைவம்பகருமரபிலாற்றப் பற்றியதுகழியும்' எனவே அது பிராயச்சித்தம் விதிக்கும் கர்மகாண்டமென்பது: போதருதலான் 'முன்னஞ் சொற்றருநூல்' என்றது ஞானகாண்டத்தின் மேலும், குறையிரத்தற்குரிய அறிவுதித்தற்கு முந்தியபிறவிகளிற்சேர்ந்த ஸஞ்சிதம் வலியழிதற்குரிய வுபாயம் இரு

வினையொப்புண்டாதற்கேதுவாகிய நெறியினடங்குதலான். "வழியின்வரின்' என்றது குறையிரப்பின்மேலும், அச்சஞ்சிதம் பிந்தியபிறவியிற் குறையிரத்தன் மாத்திரையானே வலியழிவதன்றாகலான் 'மிகுதி சோரும்' என்றது இப்பிறவியில் எஞ்சிநின்ற ஸஞ்சிதம் வலியழி தன்மேலுமாம். வரினென்றது அருமைநோக்கி.

புண்ணியத்தைக் கைம்மாறுகருதிஈதற்கேதுவறுமையாகலாறும் கைம்மாறுகருதாதே ஈதற்கேது இரக்கமிகுதி நட்புமிகுதி புகழ்மேல்வைத்த இச்சை மிகுதிகளாகலாறும் அவ்வேதுக்களே பாவத்தை ஏற்போருளராதற்கும் ஏதுக்களாமென்பது பகராமலே இனிது விளங்கும்.

இறுதியா யெடுத்த பிறவியில் குறையிரப்பிற் படாமையான் வலியழியாது நின்ற ஸஞ்சிதம் அப்பிறவியிற்றானே வீடடையாதாரை மறுபிறவியிற் செலுத்தி அவர்க்கனுபவமாம் படிகூடுமென்பதற்கு, நங்குல தெய்வமாகிய ஆளுடையநம்பியார் தமிழுலகஞ் செய்தமாதவத்தாற் றிருவவதாரஞ் செய்தருளிச் சார்ந்தாரைக் காத்தருளும்வண்ணம் தம்பிரானரைத் தோழமையாகப்பெற்றுச் சங்கிலியிற்றொடக்குண்டுபரவையுட்படிந்ததனையும்; வீடடைந்தார்க்குப் பிராரப்தந்தீர்ந்தவழி திருமேனி பரிணமிக்கச்செய்து அதுவாயிலாக அனுபவமாம்படி பொருந்துமென்பதற்கு "மத்தயானையருள்புரிந்து—ஊனுயிர் வேறுசெய்தான்" "துஞ்சுதன் மாற்றுவித்து—யானைதந்தான்நொடித்தான் மலையுத்தமன்" என்பன முதலியவாயருளிச்செய்த வாறே திருக்கைலாயத்தையடைந்து திருத்தொண்டுசெய்து கொண்டிருப்பதனையும் சாற்றும் பன்னிரண்டாந் திருமுறையே சான்று.

ஊன்வேறு செய்தலாவது கடவுட் டிருமேனியாகப் பரிணமிப்பித்தல். உயிர்வேறு செய்தலாவது அத்திருமேனிக்குரிய போகங்களின் உடன்படுமாறு இச்சாஞானக் கிரியைகளைப் பரிணமிப்பித்தல். (கக)

மோகமிக வுயிர்களொடு முடனாய் நிற்கு
மூலவா ணவமொன்று முயங்கிநின்று
பாகமிக வுதவு திரோ தாயியொன்று
பகர்மாயை யொன்றுபடர் கன்மமொன்று
தேகமுறு கரணமொடு புவன போகச்
செயலாரு மாமாயைத் திரட்சியொன்றென்
ருகமல மைந் தென்ப ரைந்துமாறு
தருளென்ப தரிதென்ப ரறிந்து ளோரே.

(இ—ள்.) பாசப்பகுதியவாகிய ஆணவமுதலிய மலங்கள் அனுபவத்தான் ஒவ்வொன்றே சிரண்டோவென ஐயுறத் தோன்றினும் ஒவ்வொன்றே யாகலான் வகையான் ஐந்தே யாமெனவும் அவ்வைந்தும் நீங்கினாலன்றிப் பசுக்கள் அருளெனப்படும் பதியினது திருவடியைப் பெற்றய்யொணு தெனவும் அறிஞருரைப்ப ரென்பதாம்.

மேலைச் செய்யுட்களாற் கூறிப்போந்த அடைவுபற்றி மாயையொன்று மாமாயைத் திரட்சியொன்று படர்கன்ம மொன்று எனக்கொண்டு கூட்டுக.

ஒன்று ஒன்றெனக்கூறி ஐந்தெனத்தொகைப்படுத்தியது அனுபவத்தால் ஒவ்வொன்றே சிரண்டோவென ஐயுறு மைப்பொருட்டு.

ஐயுறுமாறு—ஆணவ மலமானது பசுக்களோ டபேத மாய் நின்று தான் பரிபாகப்படுதற்கு முன் தனுகரண புவனபோகங்களைத் தாமாகப்பாவித்து விதிவிலக்குக்களை இழக்கும்படியும், பரிபாகப்பட்டுழி வாஸனு ரூபமாய்த் தோன்றும் அத்தனுகரணுதிகளை ஒழித்தற்குரிய வுபாய த்தை மறந்து அவற்றான் முன்போலத் துன்பம் வருமே எனநடுங்கும்படியும், மயக்கத்தைமிகுவித்தலின் இருதிறப் படுதலானும்; திரோதை மலமானது அவ்வாணவமலம் பரி பாகமுறும்பொருட்டு அம்மலத்தொடுங் கலந்து நின்று எனதென்பதை நிகழ்வித்து உண்மையில் இன்பத்தை

யாதல் துன்பத்தையாதல்நல்கும் ஆற்றலுடையன வல்லாத சப்தாதியவிஷயங்களை அம்மலம் பரிபாகப்படுவதற்குமுன் இன்பாகாரமாகவும், பரிபாகப்பட்டுழித் துன்பாகாரமாக வும், அனுபவிக்கச் செய்தலின் இருதிறப்படுதலானும்; மாயாமலமானது மலகன்மங்களோடு விரவிநின்று அசுத்த மாகித் தனது காரியங்களை உள்ள வாறுணரவொட்டாது மயக்குவதும், பசுக்கள் ஆசிரியரதனுக்கிரஹத்தைப் பெற் றுழி அவ்விரவலிற் பிரிந்து சுத்தமாகித் தமது காரியங் களை உள்ளவாறுணரும்படி மயக்காது நிற்பதும், ஆக விரு திறப்படுதலானும்; மாயேயமலமானது வினைப்பயனுய்வந்து கூடுந் தனுவிற்கியையத் திரிந்துடனாய் நிற்குங் கரணமும் அத்தனுகரணங்கட் குரிமைப்பாடுடைய புவனபோகங்களு மாகிப் பலபேதங்களாய்த்தோன்றிச் சலனத்தை யடையும் வழி அசுத்தமாயா தனுகரணாதிகளெனவும், அச்சலனத்தி னீங்கிய வழிச் சுத்த மாயா தனுகரணாதிகளெனவும், இரு திறப்படுதலானும்; கன்மமலமானதுபிராரப்தபோகம் அனு பவமாகுங்கால் விருப்பு வெறுப்புக்க ணிகழ்தற்கேதுவாகிய யானென்பது தோன்றும் வழி மேலைக்குவித்தாமாறு விரித லும், தோன்றாவழி அம்மட்டி லறுதியாதலும், ஆக விரு திறப்படுதலானும் ஆம்.

உண்மையில் இன்பத்தையாதல் துன்பத்தை யாதல் நல் கும் ஆற்றல் விஷயங்கட் கின்றென்பது சுட்டிறந்துழித் தோன்றும்.

முப்பொருட்களுள் நீங்கவேண்டுவது பாசமும் கூட வேண்டுவது பதியினதுஅருளுமாகவே நீங்கிக்கூடு முரிமை யுடையது பசுவெனப் பாரிசேஷ வளவையின்வைத் துணர்த்தியவாறு. (உ௰)

அவஸ்தையியல்பு.

ஓங்கிவரும் பலவுயிர்கண் மூன்றவத்தைபற்றி
யுற்றிடுங்கே வலசகல சுத்தமெனவுணர்க

வீங்குவருங்கலாதியொடுகுறியுருவமொன்று[ல்பா
மின்றிமல மன்றியொன்று மில்லையெனு மிய
யாங்கறிவை யறிவரிய னறிகருவி யணையா
தாதலினு லிருண்மருவு மலர்விழிபோ லதுவாய்
நீங்கும்வகை யின்றிநித்த வியாபகமா யங்க
ணிற்பதுகே வலமென்று நிகழ்த்துநூலே.

(இ—ள்.)நீங்கற்குரிய பாசத்தையும் கூடற்குரிய அருளை
யும் பசுக்கள் கூடுவதெவ்வாற்ருனென்னிற் பலதிறத்தனவா
கிய எழுவகைத்தோற்றத்தினையுடைய எண்ணிறந்த பசுக்
களும் அவரை வியாபித்தெழாநின்ற மூன்றவஸ்தைகளிற்
கேவல ஸகலமென்னும் ஈரவஸ்தைகளாற் பாசத்தையும்
சுத்தாவஸ்தையான் அருளெனப்படும் பதியினது திருவ
டியையுங் கூடுவரென்றறிக. அவ்வாறுகூட்டும் அவஸ்தைக
ளுட்கேவலாவஸ்தையும் அநாதிகேவலம்ஆதிகேவலம்சுத்த
கேவலமென மூவகைப்படும். அநாதிகேவலமாவது கண்
குற்றமற்றதாய் விழித்திருப்பினும் இருளான் வியாபிக்கப்
பட்டவழி ஆதலையொப்பப் பசுக்கள் இச்சா ஞானக்கிரியை
களை யிழவாதிருப்பினும் ஆணவமலத்தான் வியாபிக்கப்பட்
டதனுல் அம்மலவிருளே வடிவாகி அதினின்றும் ஸ்வதந்தி
ரமாய் நீங்கும் வலியின்மையான் மற்றென்றையும் அறியாத
னவாய் அவ்வறியாமைகாரணமாக அழிவதுமல்லாதனவாய்
அவ்விருண் முழுவதினும் வலிப்பைப்பற்றிய வியாபகமு
டையனவாய் அவ்விருட்கண்ணே நிற்பதாகும். ஆதிகே
வலமாவது இம்மைக்கட்டோன்றும் பஞ்சசரீரங்களினென்
றையுமறியாது அநாதிகேவலத்தை யொப்ப மலவிருளை
யன்றி மற்றென்றுமில்லை யென்னும்படி துரியாதீதத்தும்
அந்நிலையினின்றும் அடைவேகருவிப் பெருக்கொடுகூடி
னும் ஞானேந்திரியங்களைப் பெருமையான் ஜாக்கிரத்தினிக
ழும் உண்மையை யுணராதனவாய்ச் சொப்பனத்தும் நிற்ப
தாகுமெனச் சிவாகமங்கள் செப்புமென்பதாம்.

பலவுயிர்கள் ஓங்கிவருங் கேவலசகல சுத்தமென மூன்ற வத்தைபற்றியுற்றிடும் உணர்க இருண்மருவு மலர்விழி போலதுவாய் நீங்கும் வகையின்றி நித்தவியாபகமாய் அங் கண் ஈங்குவருங் கலாதியொடு குறியுருவமொன்றுமின்றி மலமன்றி யொன்றுமில்லையெனு மியல்பாய் ஆங்கறி கருவி யணையாதாதலினு லறிவை யறிவரியன்நிற்பது கேவலமெ ன்று நிகழ்த்துநூலே எனக்கொண்டு கூட்டுக.

மற்றொன்றையு மறியாதனவா யென்பது குறிப்பெச்சம். நிற்பதென்பது மேலுஞ் சென்றியையும்.

ஓங்கி வருதல்—வியாபித்தெழுதல். உறுதற் கிடங்கள் மேலைச்செய்யுளினின்றும் போந்தன. மலர்விழி—குற்றமின் றித்திறந்தவிழி. வகை—வலியின் மேற்று. ஈங்கு—இம்மைக் கண். இந்திரியங்களாற் றரப்பட்ட விஷயங்களை இத்தன் மைபவெனக் குறித்தலாற் சூக்குமசரீரமும், குறித்த அவ் விஷயங்களைக் கொள்ளற்பாலன வென்றுதல் தள்ளற்பால னவென்றுதல் குறித்து விருப்பு வெறுப்புக்க ளடைதலாற் குணசரீரமும், ஜாதி யொருமை பற்றித்தொழிலாகு பெய ராற் குறியெனப்பட்டன. ஒன்றுமென்றது எஞ்சியகாரண சரீரத்தின் மேற்று. இன்றி என்றது —தோற்றுமையையும், ஒன்றுமில்லைஎன்றது—பெருமையையும்,இயல்புஎன்றது— ஆதிகேவலத்தையும் உணர்த்திற்று. ஆங்கென்றது ஈண்டுச் சொப்பனத்திற்குக் குறிப்பாகு பெயராய் நின்றது. ஆதிகே வலம் கலைபாதி மண்ணந்தமாயுள்ள தத்துவங்களோடு தாந் துவிகங்களுங் கூடப்பெற்ற ஆண் பெண் அலிஎனு முத்தி றத்தார்க்கும்அனுபவமாவதென்பதுதோன்ற அக்கருவிகட் கிறைமை காட்டுபு நிற்றலாற் பெறப்படும் புருஷநாமத்தின் மேல்வைத்து ஆங்கறிவை யறிவரியனென ஒருமையாக வோதினார் சொற்பல்காமைப் பொருட்டு.

அறியாமை எத்துணை நிகழும் அத்துணையுங் கேவலத் தோடொருங்குவைத் தெண்ணப்படுமாகலாற் சொப்பனு வஸ்தையும் ஈண்டுக் கேவலமெனப்பட்டது.

அங்கண் ஈங்கு ஆங்கு என இடங்கள் வகுக்கப் பட்டமைக் கேற்பக் கேவலாவஸ்தையி னியல்புகள் வகுக்கப் பட்டன.

கீழாலவஸ்தை மேலாலவஸ்தை மத்தியா லவஸ்தை சுத்தாலவஸ்தை என நான்காகவும் அவற்றுள் ஒவ்வொன்றையும் துரியாதீதம் துரியம் சுழுத்தி சொப்பனம் ஜாக்கிரம் என ஐயைந்தாய்ப்பிரித்து இருபதாகவும் இயம்புமவையெல்லாம் அவஸ்தைகட்கிடமாகிய மாயாகாரியங்கள் மலகன்மங்களோடு விரவிப் போக்குவரவு செய்யுங்காற் கேவலஸகலங்களெனவும் விரவாது நிற்புழிச் சுத்த மெனவும் விளம்புமவற்றுள் அடங்குவனவேயாமெனத் தெருளுமாறு மூன்றவத்தைபற்றி யுற்றிடுமென்று தொகையும் உடன் கூறினர்.

சுத்த கேவலத்தி னியல்பு முன்னர்ப் பெறப்படும். (உக)

இன்மைமலமாயை கன்மமென் றிரண்டேயிறைதா
 னிலங்குபல வுயிர்களுமுன்புரிந்தவிருவினையின்
றன்மைகளா லெவர்களுக்குந் தனுகரண புவனந்
 தந்திடுமிங் கதனாலே யிருபயனுஞ் சார்ந்து
கன்மமெலா நேராகநேராதன் மருவக்
 கடவுளரு ளாலெவையுங் கழித்திடுவ னதனாற்
பின்மலமா னவையணுகா பெருகொளி முன்பு
 பெற்றிடுமென் றித்திறமென் பேசுமாறே.[ளதே

(இ—ள்.) கேவலாவஸ்தையை விளக்கு முகத்தானே ஆணவமல முளதெனக்கேட்டு அதனை யுடன்படாளுகி மாயை கன்மங்கண் மாத்திரையே உள்ளனவெனவும் இருவினையொப்பும் சக்தி நிபாதமுமெய்தவே முக்திகூடுவரெனவும் எதிர்வாதஞ்செய்தானைநோக்கிக்குறிப்பான் இகழ்ந்ததென்பதாம்.

மலமின்மை என்றதற்கியைய இலங்குபலவுயிரென்றான். பின்மலமானவை என்றது மா[illegible]கன்மங்கண்மேற்று. (உஉ)

மாயைமுதலெனவினையின்பான்மைமுதலெனவே
மன்னுபனை விதைமரபின் மயங்குமலஞ் சுத்தற்
கேயுநெறி மயன்கொலத னியல்பாயின் முத்தி
யென்பதென்மற்றிவை நிற்கவிருங்கலாதியுணர்
மேயபின்றன் னுருவம்விளங்காமைவிளங்கு[வாய்
மிகுமுலகந்தனிலென்னி லிவைவிடுங்காலுணர்வுட்
டோயுநெறியிலதாத லறியாமை யெனநீ
சொல்லியது மலமென்பர் துணிந்துளோரே.

(இ—ள்-) பிறவிக் கேதுவாவது கன்மமல மாயா மலங்களேயன்றி ஆணவமலமென்ப தொன்றில்லையெனில் தனுகரணாதிகளானன்றிக் கன்மமும் கன்மத்தானன்றித்தனுகரணாதிகளுந் தோன்றுமாறின்றாகலான் இவற்றுண் முந்தியது எதுவோ வென்னத்தாலபீஜ நியாயத்தின் வைத்தாதலையொப்பமயங்குமன்றோ. அன்றியும் பரிசுத்தராயுள்ள பசுக்களைக் கன்மமல மாயாமலங்கள் பற்றுதற் கேதுவென்னை இயல்பெனின் முக்திபெற்றபின்னும் பற்றுமெனவேண்டா. பற்றுமாயின் முக்தியென்ப தொன்றில்லையாய் முடியும் இவைநிற்க. கலைமுதலிய தத்துவங்கள் பொருந்தி அறிவு விளங்கிய சொப்பனவவஸ்தையில் ஜாக்கிரத்தினிகழுந் தனது ஸ்தூலவுடம்பி னுண்மையை யறியாததென்னை ஞானேந்திரிய கன்மேந்திரியங்களும் பொருந்திய ஜாக்கிரத்திலறியுமென்னில் இத்தத்துவங்களை நீங்குங்கால் உணர்த்தினும் உணராது கிடப்பதென்னை அறியாமையாலென்னின் அவ்வறியாமையே ஆணவமலமாவதெனத் தெளிந்தோர் செப்புவரென்பதாம்.

வினையின் பான்மை—வினையின்பா லுளவாகும் பயன். வேர்தூரினும் விதை தலையினுந்தோன்றுதல் விருக்ஷங்கட்கியல்பாயினும் விதையானது விருக்ஷம் தளிர்த்துப் பூத்துக் காய்த்துப் பழமாயவழி அதனோடன்றித் தோன்றுமையும் பழங்கழிந்தவழி நில்லாமையும் ஒருதலையாதல் போலாது

பனங்கிழங்கு தலையில்விதைமாத்திரமாய்க் காட்சிப்படுதலின்வைத்து விதையிற் கிழங்குதோன்றிற்றோ அன்றிக் கிழங்கின்விதை தோன்றிற்றோ வென மயங்கற்கேதுவாதலையொப்ப வினைப்பயனுத்தோன்று மாயாகாரியமாகிய தனுகரண புவனபோகங்களின்றலையிற் கன்மந்தோன்றுவதான் முந்தியது எதுவோவென மயங்கச் செய்யுமென்பார் மன்னுபனைவிதைமரபின் மயங்கும் என்றார். மன்னுதல்—விதை பொருந்தியிருத்தல். மரபு—தோன்றுமுறைமை. இன்— உவமவுருபு. மற்று—அசை. இருங்கலாதி—தாத்துவிகங்களோடொருங்குவைத்துத் தொண்ணூற்றாறென வெண்ணப்படினுந் தாத்துவிகங்களைப்போலாது அறிவு விளங்கற்குவாயிலாகிய பெருமை யுடைக்கலாதி. ஆதியென்றதே யன்றி அந்தங்கூறாமையான் அவை, ஜாக்கிரமாதற்கு வேண்டப்படுங் கருவிகளை ஒழித்தொழிந்தவை மேற்றாம்.

விளங்காமை, இலதாதல், என்பனவினைக் கூற்றுக்கள். மிகுமுலகம்—ஞானேந்திரிய கன்மேந்திரியங்களுஞ்சேர்ந்து கருவிகண்மிகுத்த ஜாக்கிரம். நெறி என்பவற்றுண் முன்னையது ஏதுவின்மேலும், பின்னையது தன்மையின்மேலுமாம்: மலமென்பவற்றுண் முன்னையது ஜாதியொருமை.

இவைநிற்கவென்றது காறும் கருதலளவை, ஏனையவும் முன்வருவனவும் காண்டலளவைகள்.

இஃது ஆணவமலமுளதெனப் பெத்ததிசையின் வைத்துணர்த்தியவாறு. (உஙு)

அன்னியமா னவையுணர்த்தி யனன்னியமாய் நிவறிவறியாமையிஞனுமருணிலவுங்காலந்[றைந்த
தன்னிலவனேயாவு மாய்நின்ற தொன்மை
தாமுணர்தலானுமுயிர்தானெனவொன்றிலதாய்
மன்னியிடு மலமாயை கன்மங்கண் மாறி
வந்திடுமிங் கிதுவழுவா தாதலினுன் மனத்தா

லுன்னரிய திருவருளை யொழிய மலமுளதென்
றுணர்வரிதாலதனுண்மைதெரிவரிதாமுனக்கே.

(இ—ள்.) தொழின்மிகுதியான் மறந்தேனெனல் தொல் லுலக வழக்காகலின் அவ்வறியாமையும் கன்மமலத்தின் காரியமேயன்றி ஆணவமலமென வேறோர்முதலாயுளதென் றல்பொருந்தாதெனிற் கன்மமலமாயாமலங்களோடு ஆணவ மலமும் பசுவிற் கன்னிய மென்பதைச் சுருதி யுக்தி யனு பவங்களா னறிவித்து அவை யொழிந்தவென்னும்படி பசு வோ டிரண்டறக் கலந்துநின்ற பூரணவறிவாகிய திருவருளை மறதியாற் பின்னும் இரண்டுபடக்கண்டு அடைவே பகிர் முகப்பட்டுமீட்டும் மலமாயாகன்மவடிவாய்மயங்குதலானும் அம்மயக்கத்தாற் பசுவிற்குண்டாம் பரிதாபத்திற் கிரங்கித் திருவருள் விளங்கியவழி ஸ்வானுபவமாகவரும் சிவபெரு மானே சராசரங்க ளனைத்துமாய் நிலைபெற்றிருக்கும் பண் டைப்பரிசைப்பசுக்கள் ஸ்வானுபூதியாகப் பெறுதலானும், ஆணவமலமானது பசுவெனத்தானெனப் பிரித்தறியாவண் ணம் பசுக்களோடத்துவிதமாகி நிற்பதெனஅறிதற்பாற்று. ஏனையவற்றுட் கன்மத்துக் கியைந்த தனுகரணாதிகளாய் மாயையும் அம்மாயைக் கியைந்ததாய்க் கன்மமுமாக மாறி மாறிவரும் அவற்றையொப்பப் பெத்த திசைக்கண்ணே ஆணவமலம் சலனப்படுவ தன்மையான் வாக்கு மனாதீத மாகிய திருவருள் கோசரமானாலன்றி ஆணவமலமுளதென வறிதல் அரிதாகலின் நீ அம்மலமுளதென வறியா யென் பதாம்.

அறிவித்து நிற்றலான் அறிவெனவும், இரங்கி விளங்க லான்அருளெனவும்,திருவருளையேசெப்பியதென்க. அறிவு இரண்டாம் வேற்றுமைத் தொகை. அருள்மீட்டும் விளங் கப்பெறுதல் எளிதன்றாகலின் நிலவுங் காலமென்றார். தன் னிலவன்—தன்மாட்டு விளங்கிய அவனெனக் குறிப்பாகு பெயராய்ச் சிவபெருமானை யுணர்த்திற்று. வீடுபேறானது

. உயிர்கடோறுந் தனித்தனி வியாபித்திப்பதென்பது தோன்றத் தன்னிலவனே என வியஷ்டியாகவும், அங்ஙனம் வியாபித்தல்பக்குவத்தால் எல்லா வுயிர்கட்கும் இயல்பாமென்பது தோன்றத்தா முணர்தலானுமென ஸமஷ்டியாகவும் சாற்றியருளினர். மலம் உயிர்தானெனவொன்றிலதாய் மன்னியிடுமென மாறுக. எனவென்றது உயிரென்பதனோடுஞ்சென்றியையும். ஒன்று—ஏற்புழிக்கோடலான் வேற்றுமை யென்னும்பொருட்டு. இங்கென்றது பெத்த திசையின் மேற்று. மனத்தானுன்னரியவெனவே அறிவானுன்னவுரிய தென்பதாயிற்று. அறிவானுன்னுதல் ஆசாரியமுகேன அறிதற்பாற்று.

இஃது ஆணவமலம் தொழிலறுதியினுந் தோன்றுதலாற் கன்மமலகாரிய மாகாவென முக்தித்திசையின்வைத்து வலியுறுத்தியவாறு. (உச)

புகலுமலமொழித்தற்குக் கலாதிமுதன் மாயை
பொருந்தியிடு மரனருளாற் போதந் தீபஞ்
சகலமெலாமுடனுய வாறு போலத்
தருமருளே மலமுயிர்கள் சாராமன் மறைக்கு
மிகலிவரு மிவையுணரி னிருள்வெளியாந் தன்மை
யெய்துமிவை தன்செய்தி யிலங்கும் விந்து
பகர்வரிய வுணர்வாகி யொளியா யுள்ளப்
பான்மையினு லொருநாதம் படருந் தானே.

(இ—ள்.) அன்னியமானவை யுணர்த்தி அனன்னியமாய் நிறைந்த அறிவை யறியாமைக் கேதுவாவது கன்மத்திறிகையைத் தனுகரணபுவனபோகங்களாய்விரிந்த மாயாமல காரியமேயாக அதனை வேறோர்முதலாக்கொண்டு ஆணவ மலமென அறைகுவதென்னையோ வெனின் மஹாஸம்ஹார க்கடவுளாகிய சிவபெருமானது காருண்யத்தால் விளக்கொளியைப்போலத் திரிபதார்த்தங்களையுங்காட்டிக் காணுமுபகாரம் புரிவதாகிய திருவருளோடு பசுக்களைக்கூட்டும்

பொருட்டு வேதசிவாகமங்களானு மொழியப்படுகின்ற ஆணவமலம் ஒழியும்படி மாயாகாரியமாகிய கலைமுதலிய தத்துவங்கள் சுத்தமாகி ஞானநெறியிற் பயில்விப்பதாகும்; ஆணவமலமானது அந்நெறியிற்பயிலவொட்டாது ஆண்டாண்டுக் கேவலமாய்வந்துகூடித் தடுப்பதாகும்; ஆகலான்ஒளியையும்இருளையும்போல ஒன்றோடொன்று முரணுவதாகிய இம்மாயையும் மலமும் வெவ்வேறு முதல்களேயாம்; இவற்றின்காரியங்களை விந்துதத்துவமானது விளங்கக்காட்டிநிற்கும். இனி ஸகலாவஸ்தையும் அநாதிகேவலத்தினின்றுந் தோன்றுவதொன்று ஆதிகேவலத்தினின்றுந் தோன்றுவதொன்று சுத்தகேவலத்தினின்றுந் தோன்றுவதொன்று என மூவகைப்படும். அவற்றுட் சுத்தகேவலத்தினின்றுந் தோன்றுவதும் விந்துதத்துவமானது விளங்கக்காட்டி நிற்கும் ஆணவமாயைகளின் காரியங்களும் ஆகிய ஸகலாவஸ்தையாவது ஆன்மா சுத்தாவஸ்தையையடைந்து துரியாதீதத்தே அநுபவாதீதமாய் நிற்பினும் ஜோதிர்மயமாகிய ஒப்பற்ற நாதமானது கலாதிபஞ்சக ஸமஷ்டியாகிய உள்ளத்தின்கண்ணே உள்ளபடியே யுணரு மாறுநிகழ்ந்து கொண்டிருக்குமாகலான் அதனைப் பிறரது பிறேரக மில்லாவிடத்தும் ஆணவமலங் காரணமாக அவ்விந்துவாகிய சாந்தியதீத கலை விளக்கச் சுட்டறிவாய்விளங்கிய ஆன்மஞானத்தால் நிருவிகற்பமா யுணரும். உணரவே அவ்வாறுணரப்பட்ட ஓரே நாதமும் துரியத்திற் சாந்திகலையானே விளங்கிய ஆன்ம ஞானத்தாற் சூக்குமஸவிகற்பமா யுணருமாறு பலபடவிரிந்து சூக்குமை வாக்கெனப் பெயர்பெற்றோங்குமென்பதாம்.

ஆகலானென்பது சொல்லெச்சம்.

அர னருளாற் றீபம் சகலமெலா முடையவாறுபோல போதந்தரும் அருளை புகலு மலமொழித்தற்குக் கலாதி முதன்மாயை பொருந்தியிடும் மலம் உயிர்கள் சாராமன் மறைக்கும் எனவும் ஒளியா யொரு நாதம் உள்ளப் பான்

மையினால் தானே பகர்வரிய வுணர்வாகிப் படருமெனவுங் கொண்டு கூட்டிச் சாராம லென்னும் எதிர்மறைபற்றி அருளாச்சாரவென்னும் உடம்பாடும் விந்துவையிரட்டித்து அகரச் சுட்டும் வருவித்துரைத்துக்கொள்க.

அவயவப் பொருளென்னும் பொருட்டாய சகளம் வடமொழியின் அபேத வழக்குப்பற்றிச் சகலமெனத் திரிந்தது. மேற்கூறிய அனுமானப் பிரத்தியக்ஷங்களே யன்றி ஆகமப் பிரமாணமும் உளதென்பார் புகலு மல மென்றார். இலங்கும்—இலங்குவிக்கும்.

உள்ளப்பான்மை—உள்ளத்தின் பாலுடைமை. நாதத்தை யுள்ளபடியே யுணர்தலாவது கடத்தை மண் எனவும் படத்தைத் தந்து எனவும் உணர்ந்த பின் அக்கடபடங்களை யுணர்வதுபோல மாயாகாரியமத் துணையே யென மதியா தொழிதல். பகர்வரிய வுணர்வு—பொருளைப் பகுத்துணராத நிருவிகற்ப வுணர்வு. படரும் என்றதற்கேற்பச் சூக்குமை ஸவிகற்பவுணர் வென்றது வருவிக்கப்பட்டது. சூக்குமை வாக்கென்னும் பெயர் அனுவாத முகத்தாற் பெற்றும் இவ்வாக்கு நிகழ்தற்கிடம் உள்ளத்தினது ஸ்தூலமெனவும், பஞ்சமை சூக்குமைகள் தருவும் கிளையும்போலாகலான் ஒளி யுடைத்தாதல் சூக்குமைக்கும் ஒக்குமெனவும் உணர்க.

நிருவிகற்பமா யுணரும்படி எழுந்த சுட்டுணர்விற் கேதுவாகிய அறியாமையே சுத்த கேவல மெனப்படு மென்றறிக. (உரு)

வந்தடைந்து பின்னமாய் வன்னங்க டோற்றம்
வருமடைவு படவொடுக்கி மயிலண்டசலநேர்
சிந்தைதனி லுணர்வாகும் பைசந்தியுயிரிற் [த்து
சேர்ந்துவரு மவைமருவு முருவெவையுந் தெரி
முந்தியிடுஞ் செவியிலுறா துள்ளுணர்வா யோசை
முழங்கியிடு மத்திமைதான் வைகரியுலு தானன்

பந்தமுறு முயிரணைந்து வந்தமொழி செவியின்
பாலணைய நினைந்த பொருள் பகருந்தானே.

(இ—ள்) ஓங்கிய சூக்குமை வாக்கானது அங்கு நின்றுஞ் சுழுத்தியை யெய்தி ஒன்ருய்த் திரண்டு மேல் விளங்கித்தோன்றும் பஞ்சவன்னங்களையுங் காட்டுகின்ற மயின் முட்டையி னீரை யொப்பச் சொப்பன ஸ்தானத்துப் பலவாகப் பிரிந்து தோன்றும் பஞ்சாக்ஷரங்களது விளக்கத்தைச் சூக்கும ரூபமாய்க் காட்டி நிற்பதாகிப் பைசந்தி வாக்கெனப் பெயர் பெற்றுச் சிந்தை யெனப்படு மூலப்பிரகிருதியின் கண்ணே வித்தியாகலையானே விளக்கப் பட்ட ஆன்மஞானத்தாற் றாலஸவிகற்பமா யுணரப்படும் அவ் வுணர்ச்சியாற் பைசந்தி வாக்கானது அங்கு நின்றும் உதான வாயுவினுற் சொப்பனத்தை யெய்தி அந்தக் கரணத்தின் கண்ணே பிரதிஷ்டா கலையானே விளக்கப் பட்ட ஆன்ம ஞானத்தாற் றாலதரஸவிகற்பமா யுணருமாறு மேற் பிராண வாயுவோடுங் கூடி ஜாக்கிரத்திற் செல்லுங்காற் பலவாகப் பிரிந்து தோன்றும். அக்ஷரங்களுடைய ஸ்வரூபங்களனைத்தையும் விளங்கக் காட்டிக் கொண்டு செவிக்குக் கேட்கப்படாது கண்டத்தி னுள்ளே முழங்குகின்ற மெல்லோசையாகி மத்திமை வாக்கெனப் பெயர் பெற்ருேங்கும். ஓங்கிய மத்திமை வாக்கானது அங்கு நின்றும் உதானவாயு கூடிய பிராண வாயுவினுல் ஜாக்கிரத்தையெய்தி நினைந்த பொருளைத் தன் செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கும் வண்ணம் நிகழ்த்துஞ் சொல்லாகி வைகரி வாக்கெனப் பெயர் பெற்று அந்தக் கரணத்தின் கண்ணே நிவிர்த்திகலையானே விளக்கப்பட்ட ஆன்ம ஞானத்தாற் றாலதமஸவிகற்பமா யுணரப்படுமென்பதாம்.

வந்தடைந்து மயிலண்ட சலநேர் பின்னமாய் வரும் வன்னங்க டோற்றம் அடைவுபட வொடுக்கி பைசந்தி சிந்தைதனி லுணர்வாகும் உயிரிற் சேர்ந்துவரு மவை மருவு

முரு வெவையுந் தெரித்து செவியினுரு துள்ளுணர்வா யோசை முழங்கியிடு மத்திமைதான் முந்தி யிடும் உதானன் பந்தமுறு முயிரணைந்து வந்த மொழி நினைந்த பொருள் செவியின்பா லணையவைகரிபகரு மெனக்கொண்டு கூட்டுக.

ஒளியாமொரு நாதம் உள்ளப்பான்மையினுற்றுனேவிந்து பகர்வரிய வுணர்வாகிப் படரும் வந்தடைந்து வைசந் திசிந்தைதனி லுணர்வாகு மென்றமையான் ஏனைய வாக்குக்களை யுணர்தற் கிடங்களாகிய அந்தக் கரணங்களும் ஒன்றுனொன்று பல்குவதாகி யுணரு முறைமைகளும், உணர்த்தும் கருவிகளாகிய கலைகளும் உணரு நெறிக்கட்படும் ஆன்ம ஞானத்தி னியல்புகளும் அவற்றாற் பெறப்படும் அவஸ்தா நாமங்களும் வருவிக்கப்பட்டன.

ஒழுங்கா யமைத லென்னும் பொருட்டாய அடைவுபடுதல்—உவமானத்திற் குரிய உவமேயமாய் காரண ரூபமாகிய பஞ்சாக்ஷரங்களாம் தன்மையை யுணர்த்திற்று.

நினைவு வந்து ஐயந்தருவதாய் மனமொழிய வகுப்பொருததாயுள்ள சிந்தையை ஈண்டுக் கூறுதற்கோரியை பின்மையானும் அதீதத்தும் ஆன்மாவோடுட னிற்பனவாகிய கஞ்சுகங்களுட் கலையிற்றோன்றி அணுக்க முடையதாய்ச் சுழுத்தி யவஸ்தையின் விளங்குவதாகலானும் விருப்பு வெறுப்புதாஸீனங்களாய் வியக்தமாகிச் சலியாது காரிய ஸித்தியின் பொருட்டு வேண்டப்படும் ஸகள நிஷ்களத் தியானங்கட் குரியவாகி ஒற்றுமைப்பட்டுக் குவிந்து நிற்பதாகலானும் அதுபற்றியே "சித்தத்தைச் சிவன்பாலேவைத்தார்க்கு மடியேன்" "சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவேதவமாக்கு மத்தன்" என்பனமுதலியனவாய்ச் சிறந்தெடுத்தருளிச்செய்யப்பட்டமையயானும் ஏற்பழிக் கோடலானும் ஈண்டுச் சிந்தையென்றது மூலப்பிரகிருதியின்மேற்றேயாம்.

உயிர் பிராண வாயு. அவை யென்னுஞ் சுட்டு—அப்பஞ்சாக்ஷரங்கண்மேற்று. முந்தியிடல்—ஓங்குதல்.

உதானன் பந்தமுறுமுயிரணைந்துவந்த மொழிவைகரியெனவே உயிரணையாதே மத்திமைமுந்தியிடுமென்பதாயிற்று. சுத்தாவஸ்தையினின்று மீள்வார்க்கு ஜாக்கிராவஸ்தையினன்றிப் பிராணவாயு வியங்காதாகலிற் "பந்தமுறு முயிர்" எனச் சொப்பனாவஸ்தையின் வைத்தார். பகர்தல்—பொருள்பிரிந்து தோன்றுதலென்னும் பொருட்டாய் உணர்தன் மேற்று. (உசு)

இத்தகைமை யிறையருளா லுயிரறியு மறிவுக்
 கீடாகவாடாதே யீரிரண்டி லுரைத்த
வித்தைமுத லைவரான் விளங்கு ஞான
 மேவியிடு மெனவுரைப்ப ரசுத்தமாயை
வைத்தகலை தான்மூல மலஞ்சிறிதே நீக்கி
 மருவும்வகைதெரிவிக்கும் வாயில்களின்பயனைப்
புத்திதர வித்தையிடை நின்றறிவை யுயிர்க்குப்
 பொருந்தியிடும் வகைபுணரும் புனிதசத்திபுண
 [ர்ந்தே.

(இ—ள்) சுத்த வித்தியாதத்துவாதி பதியாகிய உருத்திரர்முதற் சிவதத்து வாதிபதியாகிய லயசிவரீறுனோரால் அடைவே நிவிர்த்திகலை முதலிய பஞ்சகலைகள்வாயிலாக ஆன்மஞானத்தின்கண்ணே விளங்கிய மெய்ஞ்ஞானமானது மேற்கூறியவாறே சூக்குமைமுதல் வைகரியீறாகிய வாக்குக்களாலுண்டாம்ஸகலாவஸ்தைபற்றிப் பிரளயாகலர் முதலாயினார்க்குப்போல அலிகிதமாது கடலின்கண்ணின்று மீண்டுசென்றுமலையேறினும் அம்மலையினின்றவாறே கடலை நோக்குந்தீர்க்கதரிசிகளாயினார்க்கு இடைப்பட்டகாடும் நாடுங்காணப்படுவதோடு அக்கடலும்ஒருங்கேகாணப்படுவதை யொப்ப இறைவனது காருண்யத்தான் விஞ்ஞானகலராயினார்க்குவைகரிமுதல் சூக்குமையீறாகிய வாக்குக்களும் பஞ்சமையும்விளங்குவதோடுமெய்ஞ்ஞானமும்ஒருங்கே விளங்குமெனவ்ஸ்வானுபூதிமான்க ளுரைப்பர். இனி ஆதிகேவலத்தி

னின்றுந்தோன்றும் ஸகலாவஸ்தையாவது அசுத்தமாயையில்திருவருள் கலந்ததனால்அம்மாயாகாரியங்களுட்கலாதத்துவமானது ஆணவமலமாகிய அறியாமையைச் சற்றகற்றி இந்திரியங்கள் விஷயங்களைக்கவரவும் கவர்ந்தவற்றைமனம் ஈயவும் ஈய்ந்தவற்றைப் பசுநிருவிகற்பமாக்காணவும் செய்யும்படிமனத்திற்கும் பசுவிற்கும் இடைப்பட்டுப் பசுவினது கிரியாசக்தியை விளக்கி நிற்கும். வித்தை என்னுந் தத்துவமானது பசுநிருவிகற்பமாக்கண்ட விஷயங்களை இத்தன்மையவெனவும் அதனன்வரும்பயன் இன்பம் அல்லதுதுன்பமெனவும் நிச்சயித்துப் புத்திதத்துவங்காட்ட அவ்வாறே பசுஸவிகற்பமாக்கண் டனுபவிக்கும்படி புத்திக்கும் பசுவிற்கும் இடைப்பட்டுப் பசுவினது ஞானசக்தியோடு கலவாநிற்குமென்பதாம்.

வித்தைமுதலைவரான் விளங்குஞானம் ஈரிரண்டிஆரைத்த இத்தகைமை உயிரறியு மறிவுக்கிடாக வாடாதே இறையருளான்மேவி யிடுமென வுரைப்பர் அசுத்தவைத்த மாயை புனிதசத்திபுணர்ந்தே கலைதான் மூலமலஞ்சிறிதே நீக்கிடவும் வகைதெரிவிக்கும் வாயில்களின்பயனைபுத்திதர உயிர்க்குப் பொருந்தியிடும்வகை வித்தையிடைநின்று அறிவைப் புணருமெனக்கொண்டு கூட்டுக.

உருத்திரர் முதலாயினோர் அடைவே நிவிர்த்தி முதலிய கலைகளாற் சுத்தாவஸ்தையை நிகழ்வித்தலின் அதனாற்பெறப்படுஞானம் வித்தைமுதலைவரான் விளங்குவதென்றாயிற்று. மூன்றும் வேற்றுமைத் தொகைபாய் நின்ற இத்தகைமை யென்னுஞ் சுட்டு மேலைச் செய்யுட்களிற் கூறிப்போந்த சூக்குமை முதலிய வாக்குக்களான் வந்து கூடும் ஸகலாவஸ்தையை உணர்த்தும். உயிரறியு மறிவுக்கிடாக வாடாதே மேவியிடுமென்றமையால் அது ஜீவன் முக்தராகிய விஞ்ஞானகலர்க்கே உரித்தாகலின் அவ்வாறு வருவிக்கப்பட்டது. உயிரறியு மறிவென்பது ஆன்மா தான்பெற்ற

சிவானுபவத்தை எதிரிட்டறியுமாறு இடைநிலைப் படுத்துந் திருவருண் மேற்று. ௬௫ உவமவுருபு.

வித்தைமுதலைவரான் ஞானம் விளங்குமுறைமையாவது-பக்குவான்மாக்களது இச்சாஞானக்கிரியைகள் சிறப்புவகையான் விளங்கும்படி சுத்தவித்தியா தத்துவாதிபதியாகிய ருத்திரர் தனது சக்தியாகிய ரௌத்திரிவாயிலாக நிவிர்த்திகலையைப் பரிசுத்தப்படுத்தி "அன்னிய மின்மையின் அரன் கழல் செல்லும்வண்ணம் ஐம்புலவேடரினயர்ந்தனை வளர்ந் தெனத் தம்முதல்குருவுமாய்த்தவத்தினி லுணர்த்தவிட்டு" என்றருளியவாறே விஷயவியாபாரமாகிய கிரியை குறையுமாறு சரியை கிரியாயோகங்களின் மேனின்ற ஞானஸாதக நெறியிற் பயில்விப்பதாகிய அபரஞானத்தை மிகுவிப்பர். ஈசுவர தத்துவாதிபதியாகிய மஹேசுவரர் மஹேசுவரிவாயிலாகப் பிரதிஷ்டாகலையைப் பரிசுத்தப்படுத்தி "பதிதண்ணிழலாம் வண்ணம் உராத்துனைத் தேர்த்தெனப்பாசமொருவ ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி" என்றருளிய வாறே பகிர்முகத்துத் திரிபுடி வலியழியாது நிகழ்வதாகிய அபர ஞானங் குறையுமாறு சிவானுபவத்தை விடாது பயில்வதாகிய பரகிரியையை மிகுவிப்பர். ஸாதாக்கிய தத்துவாதிபதியாகிய ஸதாசிவர் மனோன்மனி வாயிலாக வித்தியா கலையைப் பரிசுத்தப் படுத்தி "மலமாயை தன்னொடு வல்வினையின்றாம்வண்ணம் அவனேதானேயாகிய வந்நெறியேகனாகி யிறைபணிநிற்க" வென்றருளியவாறே சராசரமனைத்தினும் சிவம் உடனாகி நிற்றலைக்காணும் பரஞானமும் அவ்வாறே தன்னுணிற்றலையுங் காணும் பரகிரியையும் ஒப்பாகச் செய்வர். விந்து தத்துவாதிபதியாகிய லயசக்தி தனதுசக்திவாயிலாகச் சாந்திகலையைப்பரிசுத்தப்படுத்தி "அரன் கழல் செல்லுதல் அயராவன்பின்" என்றருளியவாறே அக்காட்சிகளுங் கழலுமாறு பரகிரியையினழுந்தச் செய்வர். நாததத்துவாதிபதியாகிய லயசிவர் லயசக்திவாயிலாகச் சாந்தியதீத கலையைப்பரிசுத்தப்படுத்திஅரன்கழல்சென்று மீளாவாழ்வு

பெறும் வண்ணம் பரஞானமே வடிவாகச் செய்வர். இத் தன்மையவாம்.

இவருள் ருத்திரர் மஹேசுவரர் இருவரும் பெத்தநிலைக் கண்ணதாகிய ஐந்தொழிற்களான் மலபரிபாகப்பட்ட ஆன்மாக்களை ஸர்வஸங்கபரித்தியாகஞ் செய்வித்துச் சிவானுபவத்தை ஸ்வானுபவமாகப் பெறுதற்குரிய ஞானஸாதகராக்கி மோக்ஷாதிகாரப் படுத்தலான் அதிகாரசிவரெனவும், ஸதாசிவர் சிவபோகத்தை யளித்து ஜீவன் முக்தராக்கலாற் போக சிவரெனவும், லய சக்தி லய சிவம் இருவரும் பரமசிவனால் லயிப்பிக்கப்படும் சாந்தியதீதகலையையொழித் தொழிந்தகலைகளை அடைவே லயிப்பித்துச் சிவபோகத்தினின்றும் மீளா வாழ்வளித்துப் பரமுக்தராக்கலான் லய சிவரெனவும் பெயர் பெறுவர். இலயம் போகம் அதிகாரமென்னும் இம்மூன்றும் முத்தொழிலெனப் படுமாகலான் அதனைச் செய்வோர் மூவரெனப்படுவர். இவை ஸன்னிதி மாத்திரையாய் நிகழ வாளாகண்டிருப்பன் பரமசிவனென்ப. அதுபற்றியன்றே "பூவண்ணம் பூவின் மணம்போல மெய்ப்போத வின்பமாவண்ண மெய்கொண்டவன்றன் வலியாணைதாங்கி மூவண்ணறன் சன்னிதி முத்தொழில் செய்ய வாளா மேவண்ணலன்னான் விளையாட்டின் வினையை வெல்வாம்" என்றருளினார் மேலோரும். இதனாற் சிவப்பன்மை கொள்ளற்க. என்னை, ஆன்மாக்களையுய்விக்கும்பொருட்டுப் பரம சிவன் ஒருவனே தனது பராசக்திக்குப் பல பெயர் நிறீஇ அவற்றிற் கியையத் தானும் பல பெயர் புனைந்து நின்று பண்டைப் பரிசை யளித்தருளுவனாகலின்.

பிரவிர்த்தி யொழிதல் நிவிர்த்தி. நிவிர்த்தியாற் பெற்றதை நிலை பெறுவிப்பது பிரதிஷ்டை. அந்நிலை பேற்றான் உண்மையை யுணர்தல் வித்தை. அவ்வுணர்ச்சியாற் பதைப்பொழிதல் சாந்தி. அவ் வொழிவு இயல்பாதல் சாந்திய தீதம்.

இக்கலைகளை அத்துவாக்களினொன்றாக வைத்துச் சுத்தி செய்ய விதித்தலான் விஷயபோக நுகர்ச்சிக்கும் ஸாத

ணமாய்ப் பொது வகையினிற்ப தென்பது போதருதலின் அப்போகநுகர்ச்சியின்பொருட்டு இக்கலைகளது வியாபாரம் எத்திறத்தவாநிகழுமோவெனின்நிவிர்த்திகலையானது விஷய ஞானத்தை மிகுவித்து அபர ஞானத்தானிகழும் சரியை முதல் ஞான ஸாதக மீருகியகிரியையைக் குறைவிக்கும். பிரதிஷ்டாகலையானது விஷய ஞானத்தா னிகழும் கிரியை யைமிகுவித்து அபர ஞானத்தைக்குறைவிக்கும். வித்தியா கலையானது விஷய ஞானமுங் கிரியையும் ஒப்பாகச் செய் யும். சாந்திகலையானது விஷயானுபவக் கிரியையி னழுந்தச் செய்யும். சாந்தியதீத கலையானது விஷயானுபவ ஞானமே வடிவாகச் செய்யு மென்க. இவ்வனுபவம் காமக் கிழத்தி யர் கலவிக்கண்ணுற் றுணரவல்லார்க்கு இனிது விளங்கும்.

கடன் மலைகளோடு இடைப்பட்ட வற்றையும் உவமித் தது — மூலாதாரத்தே துரியாதீதத்தினின்றும் ஸ்வாதிஷ் டான வழியே மணிபூரக முதலிய ஸ்தானங்களைப்பற்றித் துரிய முதலிய அவஸ்தைகள் வாயிலாக மேனோக்கி வந்து ஆஜ்ஞாஸ்தானத்தை யடைந்து ஜாக்கிராவஸ்தைப் பட்டு நிற்கு முறைமையின் வைத்து ஆஜ்ஞாஸ்தானம்— மலையும், மூலாதாரம்—கடலுமாம். ஆகவே, இடைப்பட்ட விசுத்தி—பாலையும், அநாகதம்—முல்லையும், மணிபூரகம்— மருதமும், ஸ்வாதிஷ்டானம்—நெய்தலுமாக உவமித்து அவ ற்றுள் அசுத்தமாயாகலாதிகளின் வியாபாரங்களையுமுடைய அநாகத மீறிய ஸ்தானங்களைக் காடாகவும், ஏனைய மணிபூரக ஸ்வாதிஷ்டானங்களை நாடாகவும் பிரித் துணர் ந்து கொள்க. கடற்கரையே நெய்தனில மாவதுபோல மூலாதாரத்தின் வரம்பே ஸ்வாதிஷ்டான மாகலின் அவ் விரண்டற்கும் வேற்றுமை சிறு பான்மையே கொள்வர். அது ஸ்வாதிஷ்டானமென்னும் வாக்கியார்த்தத்தாற்றானே விளங்கும்.

செய்யுணடைப்பற்றி அசுத்தமாயைவைத்தவென முன் பின்னாக வந்தமையான் அசுத்தம் என்புழி மகர ஒற்றுக்

கெட்டு நின்றது. அசுத்த மென்றது மல கன்மங்கண் மேற்று. வைத்த மாயை என்றது அம்மல கன்மங்களை ஒழிக்கும் வழி அவை ஒழிபத்தக்கதாக அவற்றைத் தம்பால் வைத்த மாயை என்னும் பொருட்டாய் அவற்றொடு விரவி நிற்றலை யுணர்த்தும். உன்னலரும் பரசிவன்ற னருளாலே நாத முதிக்குமெனத் தத்துவத் தோற்ற முற்றிலுஞ் சென்றியையுமாறு முதற் கண்ணே வைத்த ஆசிரியர் தத்துவங்கள் தோற்றுதன் மாத்திரைக்கே யன்றித் தொழிற் படுதற்கும் அவ்வருள் இன்றியமையாச் சிறப்பிற் றென்பது தோன்றுமாறு புனிதசத்தி புணர்ந்தே என ஈண்டும் வைத்தார். புனிதமென்றது அசுத்தமாயைக்குள்ளீடாகியும் அதனோடு தோய்வின்றி நிற்றலையும், சத்திபுணர்ந்தே என்புழி நின்ற ஏகாரம் புணர்தல் இன்றியமையாச் சிறப்பிற் றென்பதனையும் உணர்த்தின.

உயிரென்றது மேலும் சென்றியையும். புத்திதர என்றதனால் மனந்தருதலும் வித்தை இடை நின்றென்றதனாற் கலை இடை நிற்றலும் அறிவை என ஞான சத்தியைக்கூறினமையாற் கிரியா சத்தியும் வருவிக்கப்பட்டன.

கலைபசுவினது கிரியா சத்தியை விளக்காவிடின் மனமும் மனத்தால் இந்திரியங்களுந் தொழிற்படுவன வன்மையால் அவை விஷயங்களைக் கவர்தற்கும் கவர்ந்தவற்றைப் பசுவிற்கனுபவமாகச் செய்தற்கும் காரணமாகக் கிரியா சத்தியை விளக்குமெனப் பொருள் கோடலே அமைவுடைத்தென்க. அவ்வாறன்றி வாயில்களின்பயனை மருவுவித்தன் மாத்திரைக்கே கூறியது சொற்பல்காமைப் பொருட்டு.

அசுத்தமாயா கலையானது மூலமலஞ்சிறிதே நீக்கி வாயில்களின் பயனை மருவும் வகை தெரிவித்தலாவது—மூலமலத்தின் றடிப்பாற் பஞ்சமை சூக்குமைகளைச் சற்று முணராது நின்ற ஸெகலர்மாட்டு வலிந்த மண்ணைப்பெயர்த்தற்குக் கொட்டுடன் குந்தாலியும் இன்றியமையாச் சிறப்பிற்றுய் வேண்டப்படுவதை யொப்ப வித்தை முதலிய கலை

களோ டுடனாய் நின்று பைசந்தி முதலிய வாக்குக்களைத் தோற்றுவித்தன் மாத்திரையே யன்றிச் சொப்பன ஜாக்கிரங்களில் நிகழ்வனவாகிய ஏனைய விஷயங்களையும் காட்டி நிற்றலாம்.

சொப்பனாவஸ்தையில் வாயில்களின்பயனை மருவுவித்தலாவது வினைப்பயனுக்குத் தக்கதாக ஆண்டைக் குறித்தாமாறு சூக்கும சரீரத்திற்றோன்றி நின்றோடுங்கும் தூலசரீரத்தைப் பொருந்துகின்ற வாயில்களால் ஜாக்கிரத்தோடு வேற்றுமையின்றாம் வண்ணம் விஷயங்களைக் காட்டி நிற்றலாம். (உள)

பேசரிய வராகந்தன் கன்மத்துக் கீடாப்
பெற்றதனி லாசைதனைப் பெருகுவிக்கு நியதி
தேசமிகு மரசர்தரு மாணை செய்தி
செய்தவரைத் துய்ப்பிக்குஞ் செய்கைபோல
நேசமுறுந் தங்கன்ம நிச்சயித்து நிறுத்து
நிகழ்காலங் கழிகால மெதிர்காலமென்றே
ஓசைதர வருங்கால மெல்லைபலம் புதுமை
யுறுவிக்கு மிறைசத்தி யுடனாய் நின்றே.

(இ—ள்.) அராகதத்துவமானது பசுவிற் கனுபவமாக வரும் இன்பத்தைப் பிராரப்தப் பயனென்றுணர்ந்து அவ்வளவி னமையவொட்டாது மேன்மேலும் அநுபவிக்க வேண்டுமெனக் கருதி வாக்கு தம்பிக்குமாறெழுகின்ற பேராசையைப் பெருகச் செய்யும். நியதி தத்துவமானது அவ்வாசைப் பெருக்கின் வழியே பசுக்கண் முயலினும் சக்கரவர்த்தியினதாணையின் செயலையொப்ப அம்முயற்சிவாயிலாக முற்பிறவிகளிற் செய்யப்பட்டதாய்ச் சேமித்திருக்கும் ஸஞ்சிதத்தினின்றும் போந்த பிராரப்தப் பயனாகிய வின்பத்தையேயன்றித் துன்பத்தையும் ஊட்டி யொழித்தலும், அவரவர் பற்றோடுசெய்த அம்முயற்சிக்குத் தக்க பயனுவதித்தன்மைத்தென நிச்சயித்து அதனை அவரவரே யனுப

விக்குமாறு மேலைக்குவந்து கூடும்படி சேமித்துக் காத்த றுஞ் செய்யும் பைசந்தி வாக்கி னிகழ்ச்சிக்குக் காரண மாகவந்து கூடுங் காலதத்துவமானது தனக்குள்ளீடாநிற் குங் கலையித்திரிசக்தியான் மூவகைப்பட்டு நியதியானூட் டப்படும் அப்பயன்களிற் றொலைந்ததும் நிகழ்வதும் தோன் றுவதும் இத்துணைத்தென அளவு படுத்திக் காட்டு மென் பதாம்.

அராகந்தன் கன்மத்துக் கீடாப் பெற்றதனிற் பேசரிய வாசைதனைப் பெருகுவிக்குநியதி தேசமிகுமரசர்தருமாணை செய்கைபோல செய்தவரை செய்தி துய்ப்பிக்கும் நேச முறுந் தங்கன்மநிச்சயித்துநிறுத்தும் ஓசைதரவருங்காலம் இறைசத்தியுடனாய் நின்று கழிகால நிகழ்கால மெதிர்கால மென்று எல்லை பலம் புதுமை யுறுவிக்கு மெனக்கொண்டு கூட்டுக. ஏகாரம் இரண்டும் அசை.

செய்திப் பயனெனவும், கன்மப் பய னெனவும் விரித்து ரைக்க. பற்றின்றிச்செய்த வினை பயனுதவாமையின் 'நேச முறும்' எனவும், ஒருவர் செய்த வினைப்பயன் மற்றொரு வரைத் தொடராவாகலின் 'தங்கன்மம்' எனவும் சாற்றினார் 'துய்ப்பிக்கும்' என்றமையான் முற்பிறவியின் முயற்சிப் பயன் பிற்பிறவியின் முயற்சி வாயிலாகவும், 'நிச்சயித்து நிறுத்தும்' என்றமையாற் பிற்பிறவியின் முயற்சிப்பயன் வரும் பிறவியின் முயற்சி வாயிலாகவும், வந்து கூடும்படி செய்வதனைத்தும் தெய்விகமே யாயினும் அவற்றுட் சிற் சில ராஜீகத்தை வாயிலாகக்கொண்டும் வருதலின் வைத்து ராஜீகத்தை உவமை காட்டி உலகர்க் கறிவுறுத்துவாராயி னார். முயற்சியும் பயனும் அவ்வாறுதல் முயற்சியோடு முரா ணுதலேயன்றி முயற்சியி னளவின் மிகுந்துங் குறைந்தும் பயனுதலின் வைத்தும் அறியக் கிடப்ப.

அனுதி கன்மத்தின் வைத்துண்டாய நியதியின் வழியே அக் கன்மப்பயனை யனுபவித்துத்தொலைக்கும் பொருட்டுப்

பசுவிற்கு அறிவு விளங்கும்படி கலைவாயிலாகப் பைசந்தி வாக்கு அனுபவமாகும் வண்ணம் வந்து கூடுவதாகிய காலதத்துவ மென்பார். 'ஓசைதர வருங்காலம்' என்றார். பஞ்சமை சூக்குமைகள் காலதத்துவத்திற் கப்பாற்பட்டன வாகலானும், மயின் முட்டையினீர்போல நிற்கும் பஞ்சாக்ஷரங்கள் ஸகலர்க்கு சூக்குமமா யனுபவமாதல் உண்மையாகலானும், ஓசை யென்னும் பொதுக் கூற்று வாய்பாட்டாற் பைசந்தி மேற்றாயிற்று.

பிராரப்தகன்மப்பயன் அனுபவமாம்படி அதன்கட்பற்றுச் செய்தற்பொருட்டுத் தோன்றிய அராக தத்துவமானது, அவ்வளவினமைய வொட்டாது அவ்வுண்மையை மறப்பித்துப்பேசரிய ஆசைகளைப் பெருகுவித்தலான் அவ்வாசைப் பயன் நியதிப்படுதலும் அப்பயனு முளப்பட ஸஞ்சித பிராப்தங்களது அனுபவத்தைப்பற்றிய அளவையைக் காலதத்துவங் காட்டி நிற்றலும், ஆகிய முறைமை தோன்ற நியதியும்காலமும் ஈண்டுப் பின் வைக்கப்பட்டன. அனுபவமின்றிஎல்லைபலம் புதுமையும், அவஸ்தைகளையின்றி அனுபவமும், வாக்குக்களையின்றி அவஸ்தைகளும், கலைகளையின்றி வாக்குக்களும், கலையித்திரியை யின்றிக்கலைகளும் நிகழாவாகலின், இறைசத்தி யுடனாய் நின்று உறுவிக்கு மென்றார். புனித சத்தி புணர்ந்தே என்றது எல்லாத் தத்துவங்களின் றொழிற் பாட்டிற்கும் பொதுவகையான் இயையுமாயினும் காலதத்துவமானது ஒன்றொடொன்றொவ்வாத எண்ணிறந்த பசுக்க டோறும் எண்ணிறந்தனவாய் விரிந்து கிடக்கும் வினைப் பயன்களில் ஒவ்வொன்றற்கும் அவ்வப் பசுக்களினது வாழ்நாளின் வைத்து எல்லைபலம் புதுமை யுறுவித்தற்குச் சிறப்பு வகையானும் வேண்டப்படு மென்பார். 'இறைசத்தி யுடனாய் நின்றே' என்றார்.

எல்லை—அறுதி என்னும் பொருட்டாய் அனுபவித்துத் தொலைந்ததனையும், பலம்—அனுபவ மென்னும் பொருட்டாய் நிகழ்வதனையும், புதுமை—அனுபவித் தறியாதவென்னும் பொருட்டாய்வரக்கடவதனையும், உணர்த்துவனவாம்.

(உ௪)

ஐவகையா லுறுபயன்க ளுகரவருங்கால, மது
புருட தத்துவமென் றறைந்திடுவ ரறிந்தோர்
மெய்வகைய கலாசுத்தி தனினிதற் குஞ்சுத்தி, மே
வியிடும் வகைதானும் விரும்பியநூல் விளம்புஞ்,
செய்வகையின் றொடர்ச்சி யிங்குத் தோன்றுவிக்
கும் குணத்தின், சேர்வுபுரி பிரகிருதி திரிகுணமா
மவைதா, னிவ்வகையிற் சாத்துவித ராசததா
மதமா, யியம்புவர்க ளொன்றிரண்டு குணமேற்க
வுடைத்தே.

அலகில்குணம்பிரகாசம் லகுதைவியாவிருதி [வே
யடர்ச்சிமிகுங் கௌரவமந் நியமமிவை யடை
நிலவியிடு மும்மூன்று முயிரொன்றிற் கலந்தே
நிற்குமிவை நிறைபுலனின் பயனெவையுங் கவ
குலவிவரு போகங்கொ ளிடமா மாருக் [ருங்
குறைவிலொளியாமலகில்புலனிடத்தினொருமை
பலவகையு முடையதாய்ப் பரனருளாற் புந்தி
பஞ்சாசற் பாவகமும் பண்ணுவிக்குந் தானே.

(இ—ள்.) சிவாகமங்களில் வித்தியாகலா சோதனையின்
வைத்துச் சுத்திகரிக்கு முறைமையை விதித்தலினுன்
மேலோர் விளம்பியபடி ஏனைய தத்துவங்களோ டொருங்கு
வைத்தெண்ணப்பாலதாகிய புருஷதத்துவமானது—கலை
முதலியபஞ்சதத்துவங்களாலும் பொருந்துகின்ற இன்பத்
துன்பங்கள் அனுபவமாகும் வண்ணம் எதிர்ப்படும்போது
அவற்றின்மாட்டுப் பசுவிற்குண்டாம் விருப்பு வெறுப்புக்
களே வடிவாக நிற்கும். முற்பவத்திற் செய்துவந்த தவத்
தின் அல்லது அவத்தினதாய் விட்டகுறைகளே வாஸனு
ரூபமாய்ப் பிறபவத்திற் றோற்றுவிப்பதாகிய புத்தி தத்து
வத்தைச் சார்ந்து நிகழும் பிரகிருதி தத்துவமானது—
காலநியதிகள் பிராரப்தத்தின் வழியேயன்றி இன்பத்தை

நல்கலும் பிராரப்தத்தின் வழியே துன்பத்தை நல்காதொ ழிதலுஞ் செய்யாமை ஒருதலையாதலை யுற்றுணர்ந்து இன் பத் துன்பங்கள் இரண்டன்பாலும் உதாஸீனமாக வேண் டுதலைவிட்டு அனுபவமாய் வந்தும் விளங்கி நில்லாதொழி கின்ற இன்பத்துன்பங்கண்மாட்டே உதாஸீனமாதலும் விளக்கமாகவருகின்ற இன்பத்தின்மாட்டு விருப்புறுதலும் துன்பத்தின் மாட்டு வெறுப்படைதலுமாகிய ஸத்துவம் ரஜஸ¬ தமஸ¬என்னு முக்குணங்களாகி அம்மூன்ற னுள் ஒவ்வொன்றும் ஏனைய விருகுணங்களையும் இயல்பா கவே யுடையதாய் அவ்வாறே சாகோபசாகைகள்போல எண்ணிறந்தனவாய்ச் சூக்குமமாய் நிகழும். சூக்குமமாய் நிகழும் அம்முக்குணங்களுள் ஸாத்துவிதம் விரும்பிய தனையாதல் வெறுத்ததனையாதல் ஸவிகற்பமா யுணர்தலா னும், ராஜஸம் அவ்வுணர்ச்சி பற்றிக் கொள்ளுதலாதல் தள்ளுதலாதல் செய்யுட்பொருட்டு மிகுந்த தீரத்தோடு முயற்சித்தலானும், தாமஸம் அம்முயற்சியின் வைத்து விதிவிலக்குக்களை யிழத்தலானும், ஸ்தூலமாய் விளங்குவ தாகிப் பசுக்கடோறும் அபேதமாய் நிற்குங் குணதத்துவ மானது—திருப்தியின் பயனாகிய அன்பு பொறுமை அடக் கம் இரக்கம் சாந்தி ஸந்தோஷ முதலிய நன்மைகளனை த்தையுஞ் சூறையாடுப. மேற்கூறியவாறே வாயில்களின் பயனைத் தருதல் செய்வகையின் றொடர்ச்சியிங்குத் தோன் றுவித்தல் இவற்றொடு குணதத்துவத்தினது பிரவிர்த்திக ளான் மிகுத்து வருகின்ற இன்பத் துன்பங்கட்குக் கொள் கலனுமாகிய புத்தி தத்துவமானது—அப்பிரவிர்த்திகளில் இவை தன்மாதிகள் இவை அதன்மாதிகள் எனப்பகுத்து நிச்சயித்து அவற்றுட்டன்மாதிகளால் ஸித்தி முதலியவும் அதன்மாதிகளால் அஸித்தி முதலியவும் பயனுகப் பெறு வித்து அப்பேற்றின் முதிர்ச்சியால் அவ்விருதிறத்தைம்பது வகைகளையும் பசுக்கள் தானுகவுந் தனதாகவும் பாவித்துச் சுழலுமாறு செலுத்துதலும் அச்சுழற்சியானொந்து திரு வருளை நாடியவழி இறைவனது காருண்யத்தால் நித் தியமும் பூரணமும் ஸ்வயம்பிரகாசமுமாகிய திருவருளில்

வியாப்பியமாகிப் பெறப்படுவதும் எல்லையற்றதுமாய் விளங்கும் ஆன்மஞானத்தோடுதானாகவே ஒற்றுமைப்பட்ட ஓரேயுணர்வாகி நிற்றலுஞ் செய்யு மென்பதாம்.

நூல் மெய்வகைய கலாசுத்தி தனினிதற்குஞ்சுத்தி மேவியிடும்வகை தானும் விளம்பும் புருடதத்துவம் அறிந்தோரறைந்திடுவர் ஐவகையா லுறுபயன்க ளுகரவருங் காலம் விரும்பிய அதுஎன்று எனவும் இயம்புவர்கள் செய்வகையின் றொடர்ச்சி யிங்குத் தோன்றுவிக்கும் குணத்தின் சேர்வு புரி பிரகிருதி திரிகுணமாம் அவைதான் சாத்துவிக ராசததாமதம் இவ்வகையின் ஒன்றிரண்டு குணமேற்கவுடைத்தே அலகில் குணம் பிரகாசம் லகுதை எனவும் குலவிவரு போகங்கொளிடம்புந்தி பலவகையாய்ப் பஞ்சாசற்பாவகமும் பண்ணுவிக்கும்பரனருளான் மாறுக்குறைவிலொளியா மலகில் புலனிடத்திற்றனே ஒருமையுமுடையதாம் எனவுங் கொண்டு கூட்டி அறிந்தோரென்றதனை இயம்புவர்களென்பதனோடும் இயைத்து உரைத்துக்கொள்க.

ஏனைய தத்துவங்களோ டொருங்குவைத் தெண்ணற்பாலதென்பது குறிப்பெச்சம்.

விருப்புள்வழி வெறுப்பும் உளதாதலுண்மையான் விரும்பியவது வென்றொழிந்தார். பற்றுச்செய்வது பசுவேயன்றிப் பிறிதன்மையால் விரும்பியவதுவெனவும், அவ்விருப்பம் பசுவாகாமையால் அதனைத் தத்துவமெனவும், அத்தத்துவம் பசுவோடபேதமாயன்றித்தனித்து நிற்பதன்மையாற் புருஷதத்துவமெனவும் புகலப்பட்டது.

மெய்வகை யகலை—மெய்களை வியாப்பியமாக வுடைய கலைகள். அவையாவன—அத்துவசுத்தி செய்யும் பொருட்டு ஏனைய நான்கத்துவாக்களோடு தத்துவாத்துவாவையும்பிரித்துக் கலாத்துவாவில்நிவிர்த்தி பிரதிஷ்டை வித்தை என்னு முக்கலைகளினும் பிரிதுவி முதற்கலையீறாகிய முப்பத்தொரு தத்துவங்களையும், சாந்தி சாந்தியதீத மென்னும் இருகலைகளினும் சுத்தவித்தைமுதல் சிவமீறாகிய ஐந்து தத்

துவங்களையும், அடக்கிக் கூறுகின்றவாறே பஞ்சசரீரங்களை யும் வியாபித்து நிற்கின்ற நிவிர்த்தி பிரதிஷ்டை வித்தை யென்னு முக்கலைகளாம்.

செய்வகையின்றொடர்ச்சியிங்குத் தோன்றுவிக்குங்குண த்தினையுடைய புத்தியைக்குணமென ஆகுபெயராற்கூறி னார். அக்குணத்தின் சேர்வுபுரிதலாவது புத்திதத்துவத் தைச்சார்ந்து உள்ளீடாய் நிகழ்தல். அதுபற்றியன்றே பிர கிருதியை அவ்வியக்தமென்பதும். பிரகிருதி யென்பது கலைவித்தையராகங்களைப்போலாது பெத்தப்பயனை அனுப வித்தன் மாத்திரைக்கே உபகாரமாகத் தொழில்புரியுங் கரு விக் குழாங்களுண் முந்தியதாகலிற் பூரணத் தொழிலை யுடையதென்னும் பொருட்டு. ஒன்று இரண்டு குணமேற்க வுடைத் தாதலேயன்றி அவை அலகிலவாமெனவும் அருளி யது புத்தி முதலிய தத்துவங்களனைத்தும் அத்தத்துவங்க ளாற்போக நுகருமிடமெங்கணும் பசுவுங்குணவடிவேயாய் நிற்கும்படி விரிவனவாகலின். இவ்வியல்புகண் மேற்றால மாய்க் காணத்தக்கதாக அங்குரத்தை யொப்பச் சூக்கும மாய் நிகழுமென்பார் 'பிரகாசம் லகுதை' என்றார்.

வியாவிருதி—மறைவின்மையென்னும் பொருட்டாய் அறிவின் விளக்கத்தையும், அடர்ச்சி—திண்ணமென்னும் பொருட்டாய்த் தீரத்தையும், கௌரவம்—வியாபாரமென் னும்பொருட்டாய் முயற்சியையும், அநியமம்—ஏற்பாடல் லாததென்னும் பொருட்டாய் விதிவிலக்குகளை யிழத்தலை யும்உணர்த்தின. குணதத்துவமென்னும்பெயர் வியாவிருதி முதலியவாய் அடைவே நிலவியிடும் வழிப்பெறப்படுவதாக லான் அதனைக்கிளந் துரைத்திலர். உயிரொன்றி னென் பதை ஒவ்வொன்றி னென விரித்தும் உம்மை வருவித்தும் உரைத்துக் கொள்க. இவை என்னும் பன்மைச் சுட்டுக்க ளிற் பின்வந்தது மும்மூன்றாய் நிகழும் குணதத்துவத்தின் விரியின்மேற்று. நிறைபுலன்—சலனமற்ற அறி வென்னும் பொருட்டாய்த் திருப்தியை யுணர்த்தும்

மும்மூன்றாய் அடைவே நிலவியிடுதலாவது நூல் வழி யான் வீடுபெற விரும்பும் வைநயிகர் "வாராதெலாமொ ழியவருவன வெலா மெய்த" என நிற்கும் ஸாத்துவிதத் தில் முக்தி விருப்பாகிய ராஜஸமும் பந்த வெறுப்பாகிய தாமஸமும் உடனிகழ்தல்.

விருப்பின்படியே முக்தி ஸித்திக்கும் பொருட்டுச் சரியை கிரியா யோகங்களை ஆர்ஜிப்பதாகிய ராஜஸத் திற் பயனை விரும்பா திருத்தலும் அவாந்தரப் பயனாய் நேரிடும் ஸாலோக்கியாதி பத முக்திகளை வெறுப்பின்றி யனுபவித்தலுமாகிய உதாஸீன மெனப்படும் ஸாத்து விதமும் காமக் குரோதாதிகளை வெறுத்தலாகிய தாமஸ மும் உடனிகழ்தல்.

சரியை கிரியா யோகங்களை ஆர்ஜிக்கு நெறியினேரிடும் இடையூற்றிற்கு வாயிலாயினோர் மாட்டுண்டாம் வெறுப்பா கியதாமஸத்தில் அவர்க்குக்கைம்மாறாய் அஹிதஞ் செய்ய வேண்டுமென்னும் விருப்பாகிய ராஜஸமும் அவ்விருப்பை நெகிழ விடுதலும் அக்கைம்மாறு பிறரான் அவர்க்கு நேரி டும் வழி தடுக்கா தொழிதலுமாகிய உதாஸீன மெனப்ப டும் ஸாத்துவிதமும் உடனிகழ்தல்.

வீடுபெறத்தக்க ஆற்றலும் அறிவுங் காதலு மில்லாத பிராகிருதர் வரைவின் மகளிரை முயற்சி யின்றியே காண் டலாகிய ஸாத்துவிதத்தில் மேலோர் இகழ்வரென்பதையு மறந்து அம் மகளிரது வனப்பினை ஸவிகற்பமா யுணர் தல் ராஜஸமும் அவ்வுணர்ச்சியான்மயங்கி "தந்நலம் பாரி ப்பார் தோயார் தகை செருக்கிப் புன்னலம் பாரிப்பார் தோள்" எனனும் விலக்கினையு மீறிக் கலவியை விழைத லும் கலவிக்குரித்தாய் விதிக்கப்பட்ட தேச காலாதிகளைச் சிந்தியாது விழைந்தவாறே அக்கணமேபெறத் துணிதலு மாகிய தாமஸமும் உடனிகழ்தல்.

அத்துணிபாலியற்று முயற்சியாகிய ராஜஸத்திற் பாவத் திற் கஞ்சாது குலாசார ஸமயாசாரங்களை யிழத்தலும்

புலாலருந்தல் இழிநருவுண்டன் முதலிய துராசாரங்களைக் கைப்பற்றலுமாகிய தாமஸமும் அக்கூடா வொழுக்கத்தி னழுந்துவதனால் இல்வாழ்க்கையைப் பேணுதொழிதலும் கைவிடாதிருத்தலுமாகிய ஸாத்துவிதமும் உடனிகழ்தல்.

இவ்வனுசாரத்தாற் பதிதனுய்ச் சரிப்பதாகிய தாமஸத்தில் அருந்தல் பொருந்தல்கட்கு வேண்டப்படும் உயர் பொருளோடொப்ப இழிபொருளையும் உலகறிய ஆர்ஜித்தலாகிய ராஜஸமும் அதனால் உலகம் வஞ்சித்துப் புகழினும் அன்றியிகழினும் ஒல்காமையாகிய ஸாத்துவிதமும் உடனிகழ்தல்.

இவ்விருதிறத்த வுடனிகழ்ச்சிகள் எஞ்சாவாறு அவ்வவ் வரசின்மேல் வைத்துக் காட்டியவாகலாற் பலதாரதம்மியப் பட நிகழக் காண்டலின்வைத்து ஐயுருதொழிக.

ஏகதேசமாய்வரப்படுகின்ற இன்பத்துன்பங்களை மறந்து போதலுண்மையாற் குலவிவரு போகங்கொளிடமென்றூர். பலவகையுமுடையதாதல் தன்மாதிகணன்கும் அதன்மாதிகணன்குமாகிய எட்டினையும் பகுத்துணர்தல். பஞ்சாசத்தென்பது ஐம்பதென்னும் வடமொழி. அஃதுஈண்டுப்பஞ்சாசற்றெனத் திரிந்தது. பாவகம்—தானுகவுந் தனதாகவும் சிந்தித்தல்.

குண தத்துவத்தினது பிரவிர்த்திகளிற் றன்மாதிகளெட்டும் தன்மாதிகளிற்பஞ்சாசற்பாவகமுந்தோன்று முறைமையாவது—ஸாத்துவிதத்தில் தன்மம் ஞானம் வைராக்கியம் ஐசுவரியம் என்னு நான்கும், ராஜஸத்தில் அவைராக்கியம் ஒன்றும். தாமஸத்தில் அதன்மம் அஞ்ஞானம் அனைசுவரியம் என்னு மூன்றுந் தோன்றுவனவாம். இவற்றுட்டன் மாதிகணன்கானும் ஸித்திகள்எட்டும் துஷ்டிகள்ஒன்பதும் அதன்மாதிகணன்கானும் அஸித்திகள் இருபத்தெட்டும் புத்திமாற்றங்கள் ஐந்துந் தோன்றுவனவாம். இவற்றின் பெயரும் இலக்கணமும் மதங்க பாரமேசுவராதிகளிற் கண்டு கொள்க.

அலகிலவாய் விரியுங் குணதத்துவத்திற்றோன்றிய புத்தித்துவமும் அலகிலவாய் விரியும் பாவகங்களைப் பண்ணுவிப்பதாயினும் அப்பாவகங்களனைத்தையுந் தன்னுளடக்கி நிற்குஞ் சிறப்புடைமைபற்றி வகையாகிய ஐம்பது பாவகங்கண் மாத்திரையே ஈண்டெடுத்துக் கொண்டார். பாவகம் அலகிலவாய் விரியுமென்பது "அளவிலாப்பாவகத்தா லமுக்குண்டிங் கறிவின்றி வினையொன்று மறியாதே வெறுவியனுய்க்கிடப்பேனுக் களவிலாவானந்த மளித்தென்னை யாண்டானைக் களவிலா வானவருந் தொழுந்தில்லைகண்டேனே." என்றருளிய திருவாக்கா னினிது விளங்கும்.

புத்தி தத்துவத்திற்குக்குலைவிவரு போகங்கொள்ளிடமாதல்குணமும், பலவகைவாய்ப்பஞ்சாசற்பாவகமும் பண்ணுவித்தல்தொழிலுமாகலான், ஏனைய தத்துவங்கட் கியம்புமவற்றையும் அவ்வடைவே கொள்க. (உகூ—ருஸ)

ஆனதனு வதனிலுறு மநிலனையு மியக்கி
யாங்கார நீங்காத வகந்தைக்கு வித்தா
யானலது பிறரொருவ ரெனையொப்பார் புவியி
னில்லையெனு மியல்பினதா மிந்திரியம் புலன்க
டானுகரு மளவிலதின் முந்தியுறு மிச்சை
தானுருவாய்ச் சங்கற்ப சதாகதியுந் தந்து
மானதமா னதுநிற்குஞ் சிந்தைநினை வையம்
வந்துதரு மனமொழிய வகுப்பொணுதே.

(இ—ள்.) புத்திதத்துவம் வாயிலாகப்பெற்ற ஸித்திகள் துஷ்டிகள் இவற்றின்மேல்வைத்த இச்சையான் ஔஷதங்களாறுதல் அமிர்தபானத்தாறுதல் புருஷாயுளைக் கடந்த காயஸித்தியைப் பெற்றிருப்பினுந் தனக்கு நேரிடும் இதாஹிதங்களைப் பிராரப்தப் பயனென்றுணர்ந் தடங்காது அவற்றிற்கு வாயிலாயினுர் மாட்டுவிழைவு வெகுளிகளையெழுப்பிக் காயஸித்தியாண்டு நிலையுதலாம்வண்ணம் யோகநெறியாற் பந்திக்கப்பட்டிருக்கும் பிராணவாயுவையும்நிலைகுலை

விப்பதாகிய அகங்காரதத்துவமானது—அவ்விழைவுவெகுளிகள் காரணமாக ஈசத்துவத்தாற் பிறர்க்கு இன்பத் துன்பங்களை யூட்டுவித்து அதனால் எமக்கொப்பார் உலகத்தெவருமில்லையென யாண்டுஞ் செருக்குற்று நின்று மேன்மேலும் இறப்பும் பிறப்பு மெய்துவிப்பதாகும். மனோதத்துவமானது—மேற்கூறியவாறே ஞானேந்திரியங்களானாகும் பிரயோஜனமாகிய சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்களைப் பசுவிற்கனுபவமாகும் வண்ணங்காட்டி நிற்றன்மாத்திரையேயன்றி அவ்விந்திரியங்களுள் ஒவ்வொன்றும் பஞ்சவிஷயங்களையுங் கவரத் தொடங்குங்கால் அவற்றின் முன்னர்த்தாய்ச்செல்லும் இச்சையே வடிவாதலும் கவரப்பட்ட விஷயங்களை மாயாகாரியமெனக்கண்டொழியாது பலபடச் சுட்டியறிந்து அவற்றைக் கொள்ளுதல் தள்ளுதல் அது பற்றிச் செய்தல் தவிர்தல் இவைகளைக்குறித்து இடைவிடாது சலித்தலும் உடையதாய் நிற்கும். மனத்தினது பாகுபாடாய் அதனால் வேறாகவைத் தெண்ணப்படத்தக்கதல்லாததாய் நிகழுஞ் சித்ததத்துவமானது—யாண்டுஞ் செயற்பா லவற்றுள்ளும் எதனையேனு மறந்ததை மீட்டு நினைத்தறிதலும் அறிந்துழி அதனைச் செய்தேமோ செய்திலமோவென ஐயுறுதலும் உடைத்தா மென்பதாம்.

ஆங்காரம் யானலது பிறரொருவரெனையொப்பார் புவியினில்லையெனு மியல்பினதாய் நீங்காத வகந்தைக்குவித்தாம் மானதமானது இந்திரியம் புலன்கடா னுகருமளவி லதின் முந்தியுறு மிச்சைதா னுருவாய்ச் சங்கற்ப சதாகதியுந் தந்துநிற்கும். மனமொழிய வகுப்பொணுதே சிந்தைநினைவு வந்து ஐயந்தருமெனக் கொண்டு கூட்டுக.

இயக்கி—பெயரெச்சம். இயக்கி என்றதனால் உறுதல் யோகநெறியாற் பந்திக்க பட்டிருத்தன்மேற்று. அநிலனையுமென்னும் உம்மைசிறப்பு. யானலது பிறரொருவரெனை யொப்பார் புவியினில்லையெனு மியல்பினதாயது நீங்காத வகந்தையாகிய உடம்பினை யெடுத்தற்குவித்தாயதுபோல

அந்ிலயையு மியக்குவது எடுத்தவுடம்பினை வீழ்த்தற்கு வித்தாயவாறுகாண்க. பற்றுக்கோடாயுள்ள எல்லாவற்றையு நீக்கினார்க்கும் உடம்பை எனதென்றலை நீக்குதலரிதாகலின் நீங்காதவகந்தை என்றது ஈண்டு உடம்பின்மேற்றாயிற்று. தான் இரண்டும் அசைகள். இச்சையும் ஸங்கற்பமும் உயிரும் உடம்பும்போல அபேதமாம். சதாகதி—ஓயாமை

ஞானேந்திரியங்களுள் ஒவ்வொன்றும் ஐம்புலன்களையு நுகருந் தன்மைவருஞ் செய்யுளின்வைத்துக்காட்டுதும். ()

சொன்னமுறை செவி துவக்கு நோக்கு நாக்குத்
துண்டமிவை யைந்திற்குந் தொகுவிடயமாக
மன்னிய சத்தப்பரிச ரூபரசகந்த
மருவியிடு மிவையடைவே வாக்குப் பாதம்
பின்னர்வரு பாணிமிகு பாயுவினோடு பத்தம்
பேசலுறுமைந்திற்கும் பிறங்கொலிகொள்வசன
முன்னரிய கமனதான விசர்க்கானந்த
முற்றதொழில் பெற்றிடுவ துண்மையாமே.

(இ—ள்.) தன்மாத்திரையென்னுந் தத்துவங்களானவை வேதாகமங்களின் விளம்பியவாறே சுரோத்திர முதலிய இந்திரியங்களைந்திற்கும் அடைவே சப்த முதலிய விஷயங்களைந்தும் தனித்தனி யனுபவமாமாறு ஒவ்வோரிந்திரியத்திற் கொவ்வொன்றாகவும் அவ் விந்திரியங்களுள் ஒவ்வொன்றற்கும் விஷயங்களைந்தும் அனுபவமாமாறு ஒவ்வோரிந்திரியத்தும் ஐந்தும் ஒருங்கே கூடியும் நிற்பனவாம். ஞானேந்திரியமென்னுந்தத்துவங்களானவை—மேற் கூறியவாறே தன்மாத்திரைகளால் சப்தாதியவிஷயங்களைக் கவர்வனவாம். கன்மேந்திரிய மென்னுந் தத்துவங்களானவை தன்மாத்திரைகளால் ஞானேந்திரியங்கள் சப்தாதிய விஷயங்களைக் கவர்தலின்வைத்து வசனித்தன்முதலிய தத்தந் தொழிலைத் தலைப்படுவனவா மென்பதாம்.

மன்னிய சத்தப் பரிசரூப ரசகந்தம் சொன்ன முறை செவிதுவக்கு நோக்கு நாக்குத் துண்ட மிவையைந்திற்குந் தொகு விடயமாக மருவியிடும் வாக்குப் பாதம் பின்னர் வருபாணி மிகுபாயுவினோடு பத்தமைந்திற்கும் பேசலுறும் இவையடைவே பிறங்கொலிகொள்வசன முன்னரிய கமனநாள விசர்க்கானந்த முற்றதொழில் பெற்றிடுவ துண்மை யாமே எனக்கொண்டு கூட்டுக.

விஷய சப்தாதிகளைப்போலப் பிரிந்து கூடுதலும் தோன்றி நின்றழிதலு மின்றி யாண்டும் அந்தக் கரணங்களோ டொற்றித்து நிற்குந் தன்மாத்திரைகளென்பார் மன்னிய சத்தப்பரிச ரூபரச கந்தமென்றார்.

தொகுவிடய மாகவுமென விரித்துரைக்க. ஐந்திற்குந் தொகுவிடயமாக வென்றதனால் ஒவ்வோ ரிந்திரியத்திற்கும் விஷயங்களைந்தும் அனுபவமாகு மென்பதாயிற்று. ஆயின் இந்திரியங்களுள் ஒன்றேயமையும். ஏனையநான்கும் வேண்டப்படுவனவன்று. வேண்டப்படுகையாற்றொகுவிடயமாதல் அவ்வவ் விந்திரியத்திற்குரிய விஷயம் அனுபவமாதலின் வைத்து ஏனையநான்கு விஷயங்களையுஞ் சார்பாகக் கவரு மென்பதேயாம். ஆகவே தத்தமக்குரிய விஷயத்தைக் கவர்தல் பொதுவும் அதனோடு ஏனையவிஷயங்களையுங் கவர்தல் சிறப்புமாக ஒவ்வோ ரிந்திரியமும் ஈரியல்புகளை யுடையதா மாறு தன்மாத்திரைகள் மருவியிடு மென்பது கருத்து.

பின்னர் வருபாணி—கால்முன்னேறும் பொருட்டுக் கையைப் பின்னேற்றுவிக்குங் கருவி. மிகுபாயு—பாதபாணிகளின் றொழில்பற்றி ஆற்றலேறும் பாயு. பாணி பின்னேறப்பாத முன்னேறலும் அவ்வாற்றாற்பாயு மிகுத்தலும் இயல்பாம். அவ்வாறு நிகழ மாட்டாமேல் அவ்வவ் விந்திரியங்கண்மாட்டுக் கமனாதிகட்குரியவாகிய ஆற்றல் பிறழ்ந்தனவாகும். சுரோத்திராதி வாக்காதிகளை எட்டெட்டென மயங்காமைப் பொருட்டு ஐந்தைந்தென ஆண்டாண்டுத்

தொகைப்படுத்திய தென்க. பிறங்கொலி கொள் வசனம்—வைகரிவாக்கு. உன்னரிய கமனமென்றது—நிலத்தைவிட்டு இருகால்களும் ஒருங்கே கிளம்பாது செல்லுத லென்னும் பொருட்டாய் கமனகுளிகை முதலியவற்றானிகழும் ஆகாய நெறியிற் செல்லுதலிற் பிரித்துணர்த்திற்று. பாணியின் றொழில் ஏற்றன் முதலிய பற்பல வுளவாயினும் அவை எல்லாவற்றினு மேலாய்ச் சிறந்தமை நோக்கி ஈதலின்மேல் வைத்துத் தானமெனச் சாற்றினர். விசர்க்கம்—மலஜலங் களினீக்கம். செய்யுணடைபற்றி விசர்க்கமென்புழி அம்முக் கெட்டு விசர்க்கானந்தமுற்ற தொழிலென மரீஇ யிற்று. ஆனந்தமுற்ற தொழில்—புளகம்.

ஞானேந்திரியங்களுள் ஒவ்வோ ரிந்திரியமும் விஷயங்க ளைந்தையுங் கவரு முறைமையும் அக்கவர்ச்சியின் வைத் துக் கன்மேந்திரியங்கள் தொழிற்படுமாறுங் காட்டுதும்—திருக்கைலாய முதலியவற்றை யனுபவித் தறியாதிருந்தும் புராணாதிகளான் இருந்தாங்கிருந்து ஒருவகையான் அனு பவமாக வறிதன் மாத்திரையேயன்றித் தம்மலானுபவிக்கப் பட்டு மறைவிடத்து நிற்கும் யுவதியின் கிளவி வாயிலாக அவண்மாட்டுள்ள ரூபமுதலிய ஏனைய நான்கு விஷயங்க ளும் விடர்க்கு ஒருங்கே யனுபவமாதலொப்பவெவர்க்கும் ஒவ்வோரிந்திரியத்தின் வைத்து அதனதுரங்கிய விஷயம் பற்றி ஏனைய நான்குவிஷயங்களும் ஒருங்கே யனுபவமாத லானும் இந்திரியங்களின் வழியாயன்றி அந்தக்கரணங்கள் ஒன்றையும் விஷயிக்க மாட்டாமையான் அந்தக்கரண வாஸனையென்பது இந்திரியங்களோடுள்ள பழக்கமேயாக லானும் பன்னகத்தைக் கட்செவியென்பதின் வைத்துக் கருதக் கிடத்தலானுங் காண்க. சுரோத்திராதிகள் சப் தாதிகளைக்கவரவே வாக்காதிகள் வசனாதிகளை நிகழ்த்து மென்பது பிறவிச்செவிடே மூகைக்கேதுவாதன் முதலிய எதிர்மறைபற்றி யுண்மையாதல் பெறப்படுதலிற் சுரோத்தி ராதிகளொவ்வொன்றும் சப்தாதிகளைந்தையுங் கவருங்கால்

வாக்காதிகளைந்தனுள் ஒவ்வொன்றும் வசனாதிக ளைந்தையு நிகழ்த்து மென்பது போதருதல் காண்க.

தொகுவிடயமாக வெனவும் இவை யடையவே பெற் றிடு மெனவுங் கூறியவை முற்றிலும் வ்வானுபவத்தால் விளங்கப் பெறுவிடினும் யுக்தியாலேனுந் தெருளாதார்க்கு ஐயமுண்டாகாமைப் பொருட்டுச் சொன்ன முறை யென வும் பேசலுறு மெனவும் சுருதிப் பிரமாணத்தை தனித் தனி எடுத்துக் காட்டிப் பெற்றிடுவ தண்மையாமேயென அனுபவத்தை வலியுறுத்துவா ராயினர்.

ஐந்திற்குந் தொகுவிடயமாக மன்னிய சத்தப் பரிசரூப ரசகந்த மருவியிடு மெனவே செவி முதலிய அவ்வைந்தும் மன்னிய சப்தாதிகளால் விஷயசப்தாதிகளைக் கவரு மென் பது தானே போதரும். (ஙஉ)

முந்தியவைம் பூதங்கள் வாளுதியாக
முயங்கியநற் செவிநாசி கண்ணுமெய் முறையா
லிந்தவயி னின்றுவரு மைம்புலனு முயிர்தா [தும்
மெய்தும்வகை தம்முருவி னிலங்கியிடும் புறத்
வந்தடைய விடங்கொடுக்கு மிரந்தரமாய் வானம்
வாயுமிகச் சலித்தெவையுந் திரட்டு தீவெம்மை
தந்தவைசுட் டொன்றுவிக்கு நீர்குளிர்ந்துபதமே
தருமுரத்துத் தரிக்குமிகு தரணிதானே.

(இ—ள்.) தன்மை யினிகழும் ஏனைய தத்துவங்களைப் போலாது அண்டபிண்டங்களாகி முன்னிலைப்பட்டு விளங் கும் ஆகாயமுதலிய தத்துவங்களானவை—மனத்தானுமே சிக்கப்பட்டதும் செவிடுமுதலிய குற்றங்களிற் றீர்ந்ததுமா கிய ஞானேந்திரியங்களிடமாக நின்று பசுக்கள் அனுவிக்கு மாறு தன் மாத்திரைகளிற் சூக்குமமாய்த்தோன்றும் சப்த முதலியவிஷயங்களைந்தினையும் அடைவேதத்தம் வடிவங்க ளில் அகத்தும் புறத்தும் விளங்கக் காட்டி நிற்றலோடு

அவ்வாறே வெளியாதிய குணங்களால் இடங் கொடுத்தன் முதலிய தொழில்களும் இயற்றுவனவாகுமென்பதாம்.

வானுதியாகமுந்திய வைம்பூதங்கள் முயங்கிய நற்செவி மெய்கண்ணுநாசி யிந்தவயினின்று உயிர்தாமெய்தும்வகை வரு மைம்புலனு முறையால் தம்முருவி னிலங்கி யிடும் புறத்தும் வந்தடைய வானம் இரந்தரமா யிடங்கொடுக்கு மெனவும் மிகுதரணி உரத்துத் தரிக்குமெனவுங் கொண்டு கூட்டுக.

முந்துதல்—முன்னிலைப்பட்டுவிளங்குதல். முயங்குதல்—புணர்த லென்னும் பொருட்டாய் ஆவேசித்தன்மேற்று. முயங்கற்கு வினை முதல் அவாய் நிலையான் வந்தது. நன்மை—செவிடு முதலிய குற்றங்களிற் றீர்ந்தமை. முறையாலிலங்குதல்—ஆகாயாதிகளில் சப்தாதிகளாய் அடைவுபட விளங்குதல். ஆகவே வருமென்றது தன் மாத்திரைகளிற் சூக்குமமாய்த் தோன்று மென்பதாயிற்று. புறத்து மென்பது நடுநிலைத் தீபம். அவ்வும்மையால் அகத்துமென்பது வருவிக்கப்பட்டது.

விஷயங்களைக் கவர்தற்கேலாவாறு குற்றமுடைய இந்திரியங்களாயினும் அவற்றினிடத்தும் மனம் ஆவேசித்தலும் பயன்படாதோய்தலும் இயல்பாகலின் முயங்குதலை முன்னும் குற்றத்திற் றீர்ந்து நன்மையுடையவாயிருக்கவேண்டுதலைப் பின்னும் வைத்தார்.

தன்மாத்திரைகளி னின்றும் விஷயங்கள்தோன்றி அவற்றைப் பசுக்களனுபவிக்குமாறு பூதங்கள் தத்தம் வடிவிற் காட்டுதலாவது—பருக்கைக்கற்களை மறைத்துநின்ற கோடைகாலத்து உச்சிப்பகலொளியானது பஞ்சவன்னங்கள் தனித்தனி அபேதமாய்க்கலந்து நின்ற உபநேத்திரத்தாற் றடுக்கப்பட்டவழி அப்பருக்கைக் கற்களும் அவற்றின் மயமாய்ப் பஞ்சவன்னங்க ளெதிரிட்டும் காசநீராணுய குற்றமுற்று நீங்கிய கண்ணொளிக்குத் தோன்றுதலையொப்ப

அண்டபிண்டங்களை மறைத்துநின்ற சித்பிரகாசமானது சப்தாதிய தன் மாத்திரைகள் தனித்தனி அபேதமாய்க்கலந்துநின்ற ஞானேந்திரியத்தாற் றடுக்கப்பட்டவழி அவ்வண்டபிண்டங்களும் அவற்றின்மயமாய்ச் சப்தாதிய விஷயங்களை திரிட்டும் ஆணவமலத்தாலாய மறைப்பு முற்றுநீங்கிய ஆன்மஞானத்திற்குத் தோன்றுவனவாம்.

காச நீராலாய குற்றமுற்று நீங்காத கண்ணொளியைப்போல ஆணவமலத்தாலாயமறைப்பு முற்று நீங்காத ஆன்மஞானத்திற்கு எதிரிட்டுத் தடித்துத் தோன்றுவனவாம். தடித்துத் தோன்றுமுறைமையாவது—சூன்முகில், சலனம், அரணிகடைதன் முதலியவை, பானம், ஆக்கிராணம், இவை வாயிலாக அடைவே ஆகாயாதிகளிற் சப்தாதிகள் புறத்து நிகழ்வனவாம். அகத்து நிகழ்தல் யோகபாதவனுஷ்டானத்தா னறிதற்பாற்று.

வந்தடையவானம் இரந்தரமா யிடங்கொடுத்தலாவது—விதைமுளைத்துத் தடித்து நீண்டுவெளிப்படுமாறு நிலத்தைப் பிளத்தல் புறத்தும், பிண்டவர்த்தனத்திற்கு உதரத்தையும் அது பிறத்தற்கு யோனித்துவாரத்தையும்பெருக்கி நிற்றல் அகத்துமாம். வாயு மிகச்சலித்து எவையுந்திரட்டுதலாவது—சூறையாகி எழுநாவை ஒருநாவெனச் சாய்த்தல் புனலைத்தரங்கமாக்கல் மணலைப் புளினமாக்கல் இவை புறத்தும், அளவினதிகமாய் நாடிகள் வழியே இயங்கி உடம்பின்கண்ணே ஒவ்வோரிடத்து வெப்பத்தையும் ஒவ்வோரிடத்துத் தட்பத்தையுமிகுவித்தல், உதிரத்தைப் பிண்டமாக்கல் தசையை உந்தச்செய்தல் இவை அகத்துமாம். தீ வெம்மைதந்து அவை சுட்டொன்றுவித்தலாவது—சமிதை முதலியவற்றைப்பற்றி நின்றுமிகுத்து அவற்றொடு ஆகுதிசெய்யும் குளகிரத பாயஸாதி அவிஸ-முதலியவற்றைத்தஹிப்பித்து விபூதியைப் பேதமறக்காட்டுதல் புறத்தும், பசியாகிநின்று உண்ணுகின்ற அன்ன முதலியவற்றைதஹிப்பித்து மலத்தைப் பகுப்பறச்செய்தல் அகத்து

மாம். நீர்குளிர்ந்து பதமேதருதலாவது—சூன்முகிலாற்பொழியப்பட்டுப் பூமியைநனைத்துக் குளிர்வித்துப் பைங்கூழ்ப்பொருட்டு உழவு முதலியவற்றிற் கிணங்குமாறு நயப்பித்தல் புறத்தும், கபாலத்தின்கணுள்ள அமிர்தகலசத்தினின்றுங் கசிந்தொழுகி உடம்பெங்கணு நிரம்பித்தட்பமாகி நயப்பித்தல் அகத்துமாம். மிருதரணியுரத்துத் தரித்தலாவது—பூமியாகித்தடித்து வலியுடைத்தாகி சராசரங்களனைத்தையுந் தாங்குதல்புறத்தும், கபால ஓடுமுதலிய என்பாதிகளாய்த்தடித்து வலியுடைத்தாகிக் கிரீடம் ஆரகேயூரம் பீதாம்பரம் சுகந்தமாலிகை முதலியவற்றைத் தாங்குதல் அகத்துமாம்.

பூதகாரியமாகிய அண்டத்தின் கண்ணது புறநிகழ்ச்சியும் அண்டத்தின் உட்பட்டமைபற்றிப் பிண்டத்தின்கண்ணது அகநிகழ்ச்சியுமாக் கொள்ளப்படுவன.

வாயு எவையுந்திரட்டுமென்றது ஏனையமூன்று பூதகாரியங்களையுந்திரட்டு மென்னும்பொருட்டு. நீர் குளிர்ந்து பதமேதருமென்புழி ஏகாரம் தேற்றத்தின்கண்வந்ததாய் வாயுவைப்போல வெப்பத்தைத் தட்பமாக்கலும் தட்பத்தைவெப்பமாக்கலும் வன்னியைப்போல வெயர்வையான் எதிர்மறைக்குணங்காட்டுதலு மின்றி யாண்டும் நயத்தலாகிய ஒருதன்மைத்தாய் நிகழுமென்பதுணர்த்திற்று. விருக்ஷமுதலியவற்றை வீழ்த்தும் இடிகரை முதலியவற்றிற் பிரித்துணர்த்துவார் மிருதரணி என்றார்.

தன்மாத்திரைகளிற் சூக்குமமாய்த்தோன்றும்விஷயசப்தாதிகள் தன்மாத்திரைகளிற் றோன்றிய பூதங்களிடமாக வன்றி விளங்காமையைநோக்கிப் பூதங்களில் சப்தமுதலியவை ஆகுமென உபக்கிரமத்தோதியதேயாமாகலிற் றம்மின் முரணாமை "சத்த முன்னாச்சாற்றிய பஞ்சதன்மாத்திரைகளிற்றோற்றும்வான்வளி தீநீர்மண்டொடக்கியே யொன்றுக் கொன்றங்கேற்ற மாமோசையாதி யிருங்குணமியைந்து நிற்கும்" என்றருளிய வழிநூலானும் இனிது விளங்கும்.

மேலைச்செய்யுளில் ஐந்திற்குந்தொகுவிடயமாக மன்னிய சத்தப்பரிச ரூபரசகந்தம்மருவியிடும் என்றது விஷயங்க ளனுபவமாகும்வண்ணம் அவற்றை யெதிரிட்டறிதற்கும் இச்செய்யுளில் வருமைம் புலனுமென்றது எதிரிட்டறியும் படி விஷயங்கள் தோன்றுதற்கும் தன்மாத்திரைகளே கார ணமாதலை உணர்த்தியவாறு.

இடங்கொடுத்தன் முதலியதொழில்கட்கு இன்றியமை யாச் சிறப்பிற்றாய் வேண்டப்படும் இரந்தரமாதிகளை அனு வதித்து ஈண்டும் இயம்பினர். (ஙங)

இந்திரையி னைந்துசுத்த மேழுசுத்தா சுத்த
 மெண்மூன்று மசுத்தமெனு மிவைமுப்பத்தாறு
மன்னியதத்வங்களிடை மயங்கிநெடுந் துயர்தா
 மருவுமுரு நிலையழிய வரும்பொழுது வரியார்
பன்னகமண் டசங்கனவு படர்வகையே முன்னம்
 பகரவருங் கலாதி நிலை பரவியசூக் குமாந்
தன்னுருவி னணைந்துபய னருந்தியர னருளாற்
 றரையினிடை வருமென்று சாற்று நூலே.

(இ-ள்.) இத்தத்துவக்குழாத்துண் முன்னையவைந்தும் மலகன் மங்களோடு விரவாதுநிற்றலாற் சுத்தமெனவும் நடுவண்ணேழும் மலகன்மங்களோடு விரவலிற்பிரிந்தும் கூடியும் மாறிமாறி வருதலாற் சுத்தாசுத்தமெனவும் பின் னைய இருபத்துநான்கும் மலகன்மங்களோடு விரவலிற் பிரி யாதுநின்று விருப்பு வெறுப்பு உதாஸீனங்களாய் விஷயங் களை ஈட்டல் காத்தல் இழத்தலாதிய தூலகன்மங்கட்கேது வாதல்பற்றி அசுத்தமெனவும் சொல்லப்பட்டிருக்கும் இம் முப்பத்தாறு தத்துவங்களையும்பசுவாகியஆன்மாதானாகவும் தனதாகவுமயங்கி மேன்மேலுந் துன்பத்தையே அனுபவிக் குங்கால் நியதியான் எதிர்ப்பட்ட காலம்பற்றிச் சட்டை கழற்றிய வழியு முன்னைய ரேகைகளிற் பிறழ்வின்றி விளங் கும் ஸர்ப்பத்தைப்போலத் தூல சரீரத்தி னீங்கிய வழி

நீங்காத சூக்கும சரீரத்தின்கண்ணே அத்தூலசரீரத்தைப் போலவே தோன்றிய மற்றொரு தூல சரீரத்தைப்பெற்று முட்டையி னீங்கிய சக்கரவாகத்தை யொப்ப அச்சரீரத்தோடே ஆகாய நெறியாற்சென்று ஸ்வர்க்கானுபவத்திற்குரிய பூதவுடார சரீரத்தையாதல் நரகானு பவத்திற்குரிய யாதனா சரீரத்தை யாதல் பொருந்தி ஜாக்கிராவஸ்தையினீங்கிச்சொப்பனாவஸ்தையையடைந்தாரையொப்ப அறிவு பிறழ்ந்து பிறழ்ந்து தோன்ற ஆண்டாண்டுள்ள போகங்களை யனுபவித்துத் தீர்த்து இறைவனது காருண்யத்தான் மலபரிபாக முறுதற்பொருட்டு மீட்டுங் கருப்ப கோளகையை யடைந்து பூமியிற்பிறக்குமென வேதசிவாகமங்கள் விளட்டு மென்பதாம்.

முன்னம்பகர நிலேஆம் கலாதி பரவியசூக்குமம் வரும் தன்னுருவி னணைந்து எனவும் நூல் சாற்று மெனவுங் கொண்டு கூட்டுக.

விஷய விருப்பு வெறுப்புக்களே புருஷதத்துவமெனப் பட்டு ஏனையதத்துவங்களோ டொருங்குவைத் தெண்ணற் பாலதாகவே அவ்விருப்பு வெறுப்புக்களை விளைக்குமாயையும் ஓர்தத்துவமாக வைத்தெண்ணற்பாற் றென்பதுதானே போதருமெனக்கொண்டு அஃதும் உளப்பட வித்தியாதத்துவம் ஏழெனவும், பிரகிருதி தத்துவ குணதத்துவங்களது தொழில் கட்குத் தம்முள் வேற்றுமை தூல சூக்கும மென்னுஞ் சிறுபான்மையே யாகலின் அவ்விரண்டையும் ஒன்றாக வைத் தெண்ணி ஆன்மதத்துவம் எண்மூன் றெனவும், இத் தத்துவ சப்தம் தாத்துவிகத்திற் செல்லாமைப் பொருட்டு இவை முப்பத்தாறு மன்னிய தத்துவங்களெனத் தொகையும் வழங்கியதென்க.

பசுஎன்றது தோன்றா எழுவாய். அறவுஞ் சிறிதாய் அநித்தியமா யொழியும் இன்பத்தை மிகவும் பெரிதாய் நித்தி

யமா யெண்ணி அதன் பொருட்டு விஷயங்களை ஈட்டல் காத்தல் இழத்தல்களின் வழித்தாய் அளவிறந்த துன்பங்களை அனுபவித்த லுண்மையான் நெடுந்துயர்தா மருவு மென்றார்.

உடம்பி னீங்கிய மாத்திரையே ஆகாய நெறிச்சேறற் குவமை யாக்கோடலால் அண்டஜ மென்றது ஈண்டு சக்கரவாகத்திற்கே சாலும்.

படர்தலென்றது—தோல் முட்டை நனவு என்னு முன்னயவற்றிற் பிரிந்து செல்லுதன் மேற்று. முன்ன மென்றது—முதற் கட்காட்சிப்படுவதாகிய தூல சரீரத்திற்குக் குறிப்பாகு பெயர். கலாதிபரவிய சூக்குமம்—கலை முதலிய தத்துவங்களாய் விரிந்ததும் அருவமா யிருப்பதுமாம். சூக்குமமென்புழிக் கண்ணுருபு விரித்துரைக்க. அண்டஜ வுவமையை முட்டையானது மற்றொரு பறவையாற் கொத்தப்பட்டுப் பார்ப்பிற் பிரிதலை யொப்பத் தூல சரீரமானது கூற்றுவனாற் பிரிக்கப்பட்டு ஆன்மாவிற் பிரிதற் குவமையாகவுங் கொண்டு முதற்கண் வைத்துரைத்தலுமாம். பயனருந்தித் தரையினிடை வருமென்றமையால் பயனருந்தற்குரிய விடங்கள் வருவிக்கப்பட்டன.

வினைச் சேடத்திற்கிசைய ஈரேழுலகத்துஞ்சென்று பிறத்தல் இயல்பாயினும் பிறந்தோர் மீட்டும் பிறவாமைபெற்றுய்தற்கு இன்றியமையாத் தவமியற்றற்குரிய சிறப்புடைத்தானமாகும் அரசின்மேல் வைத்துத் தரையினிடைவருமெனவும், அங்ஙனம் வருதல் ஏனைய உலகங்களி னின்று முயன்ற முன்னைத்தவப்பயனுநிகழும் இறைவனது காருண்யத்தா னன்றிப் பெறப்படாவாகலான் அரனருளா லெனவும், உருநிலை யழியவரும் பொழுதிற்கும் மீட்டுத் தரையினிடை வருதற்கும் இடைப்பட்டவை அனுமானப்பிரத்தியக்ஷங்களால் விளங்குவவன்றாகலின் வேத சிவாகமங்கண்மேல் வைத்து நூல் சாற்றுமெனவும், அருளினார். (ௗசு)

தோற்றியிடு மண்டசங்கள் சுவேதசங்கள் பாரிற்
றுதைந்துவரு முற்பீசஞ் சராயுசங்க ளென்கி
னூற்றமிகு தாபரங்கள் பத்தொன்ப தென்று
மூர்வபதி னொந்தமரர் பதினொன்றே டிலவா
மாற்றருநீ ருறைவனநற் பறவைக ணாற்காலி
மன்னியிடும்பப்பத்து மானுடரோன் பதின்ம
ரேற்றியொருதொகையதனி லியம்புவர்கள்யோனி
யெண்பத்து நான்குநூ றாயிரமென் றெடுத்தே.

இனையபல பிறவிகளி னிறந்துபிறந் தருளா
லிருவினைகள் புரிந்தருந்து மிதுசகலமகலா
முனமருவு மிருபயனு மொருகாலத் தருந்த
முந்த நுகருந்து பயனந்த முறவந்த
வினையுமெதிர் வினையுமுடி வினையுதவு பயனு
நேராக நேராதன் மேவுங் கான்முற்
சினமருவு திரோதாயி கருணை யாகித்
திருந்தியசத் திநிபாதந் திகழுமன்றே.

நாடியசத் திநிபாத நாலு பாத
நண்ணும்வகை யெண்ணரிய ஞானபாதங்
கூடுமெவர் தமக்குணர்வாய் நின்ற ஞானக்
கூத்தனொரு மூர்த்திகொடு குறுகிமோக
நீடியகே வலசகல நிகழா வாறு
நிறுத்திமல மறுக்குமிது நிலையார்சுத்தங்
கேடில்புகழ் தருஞ்சரியை கிரியா யோகக்
கேண்மையரே லிவையுணர்த்தக் கிளக்குநூலே.

(இ—ள்.) இனி அநாதி கேவலத்தினின்றுந் தோன்றும் சகலாவஸ்தையாவது அண்டஜம் சுவேதஜம் உற்பீஜம் சராயுஜ மென பெயர்பெறுவனவாய் அந்நால்வகை யோனி பற்றிப் பிறப்பனவாகிய எழுவகைத் தோற்றத்து எண்ணி

றந்தனவாய் விரிந்த உயிர்த் தொகையுள் அசர உயிர்களிற் பெருமிதமாகிய தருக்கண் முதலியவை பத்தொன்பது லக்ஷமெனவும் சரவுயிர்களில் ஒவ்வோ ரிருதுக்கள் பற்றித் தோன்றி நின்றழியாது யாண்டும் நிகழ்வனவாகிய ஊர்வன பதினைந்துலக்ஷமெனவும் வேள்விப் பயன்முதலியவற்றாற்சிறிது காலம்வாழ்ந் தொழிவாரைப்போலாது கற்பாந்தகாலமளவும்நிலைபெறுவோராகியதேவர்கள்பதினொருலக்ஷமெனவும் கணப்பொழுதும் பிரிவாற்றாது நீரில் வாழ்வன பத்து லக்ஷமெனவும் சிறிதுபோதி லோயாது ஆகாயகமனமே முக்கியமாகவுடைய பறவைகள் பத்துலக்ஷமெனவும் அதிர்ச்சியா லஞ்சியோடி யகலாத மிருகங்கள் பத்து லக்ஷமெனவும் மனிதர் ஒன்பதுலக்ஷமெனவும் சிறப்புவகையாற் பிரித்து கூட்டி எண்பத்து நான்குலக்ஷ யோனிபேதமென மேலோர் ஓர் தொகை விளம்புவர். பொதுச்சிறப்பென்னும் அவ்விருவகைப் பிறவிகளுள் ஒவ்வொன்றினும் பலகாலு மாறிமாறிப் பிறந்து புண்ணிய பாவங்களை ஈட்டி அவற்றின் பயனாகிய இன்பத் துன்பங்களை சிவபெருமானதாணையால் அநுபவிப்பதாகும். இனிசுத்தாவஸ்தையும் ஸாதகசுத்தம் ஸ்வாநுபவசுத்தம் ஸ்வாநுபூதி சுத்த மென மூவகைப்படும். அவற்றுள் ஸாதகசுத்தமாவது—புண்ணிய பாவங்களென இருதிறப்பட்ட மூவகை வினைகளுள் ஸஞ்சிதம் ஸகலா வஸ்தையினிகழு முயற்சியும் பயனும் தம்மிற் பெரும்பான்மையுமுரணித் தோன்றுதலின் வைத்துத் தனது ஸ்வதந்திரமின்மையையும் தன்னை வினை வழி நடாத்தும் ஸ்வதந்திரமுடையானொருவனுளனென்பதையு நாடி அத்தலைவனதருளைப்பெறக் கருதி நிஷ்காமியச்சரியைகிரியாயோகங்களைச் செய்தலானும், பிராரப்தம் அநுபவமாய் வரும் இன்பத்தை மேன்மேலுங்கொள்ளவும் துன்பத்தை உடனே தள்ளவுங்கருதில் ஸ்வதந்திரந்தோன்றித் துன்புறுவிக்குமென அச்சுற்று அவற்றை விருப்புவெறுப்புக்களின்றித்

துய்த்தலானும், ஆகாமியம் விருப்புவெறுப்புக்களின்றித் துய்க்கினும் இன்பத்துன்பங்கடோன்றுதொழியாமையின் வைத்து வாஸனைபற்றி அவற்றையான் செய்தேன் பிறர் செய்தாரெனக்கொள்ளாது பிராரப்தவினைப்பயனுக் கருதலானும் மேலைக்குவித்தாகாவாறு வலியழிந்து தம்மின் ஒப்பாகும்; ஆகவே முன் ஒப்பாகாவண்ணம் அவற்றை விளைத்துநின்ற எனதென்னுந்துணை வலி யழிந்ததாகலான் யானென்னும் போதமும் தானேவலிபழிந்து யாண்டுந் தலைவனையேநோக்கிக் குறையிரந்து நிற்கும்; நிற்கப்பெற்றுழி அந்நிலையைக்கண்ட திரோதான சக்தியாகிய மாதாவிற்கு அங்ஙன நில்லாமையானுண்டாயிருந்த முனிவு நீங்க இரக்கமுண்டாகி மயக்கத்தை ஒழித்தருளும்; அருளவே முன் இன்பாகாரமாய்க்கண்ட பிரபஞ்சம் ஆற்றவொண்ணாத துன்பாகாரமாய்த்தோன்றும் அத்தோற்றத்தால் ஸாரூப்பியத்தின்மேலும் உவர்ப்பாகி நிருபாதிகமாகிய ஸாயுஜ்யப்பேற்றையே விழையும் விழையவே வாக்கு மனாதீத கோசரமாகிய அத்தகைய ஸாயுஜ்யத்தைப் பெறுவிக்கும் ஞானசாரிய ரெங்குளாரெனத்தேடுந் தேட்டமுண்டாம். அத்தேட்டமும் மந்ததரம் மந்தம் தீவிரம்தீவிரதரம் என நான்குவகைப்படும் அவற்றுள் எத்தன்மையதேட்டமுண்டாகப்பெற்றோராயினும் "அகத்துறுநோய்க்குள்ளினரன்றியதனைச் சகத்தவருங்காண்பாரோதான்" என்றருளியவாறே அவரதுயிராகிய உடம்பிற்கு உணர்வாகிய உயிராய் நின்று நிஷ்காமியச்சரியையாதிகண்முதலிய நல்லொழுக்கத்திற் பயில்வித்தோனாகிய இறைவனே அவரது தேட்டத்தைத் திருவுளத்தடைத்துத் தனதடியவராய்ச் சிறந்தோருள் ஒருவரைச் சிறப்புவகையாற் றிருமேனியாக்கொண்டு ஞானசாரியராய் எழுந்தருளிவந்து திருநோக்கமுதலியவற்றால் தீக்ஷிதனைச்செய்து ஸாதகநெறியையுணர்த்தி அந்நெறியிற்பயிலும் முயற்சினளவு கருவிகளை நிலைபெறுவிப்பதாகும். ஸ்வானுபவ சுத்தமாவது—இடைவிடா முயற்சி

யுடையார்க்குச் சிவானுபவம் பூரணமாகும்வண்ணம் கருவி களை நிலைபெறுவிப்பதாகும். ஸிவானுபூதி சுத்தமாவது— அங்ஙனம் மாதவத்தாற்பெற்ற சிவானுபவத்தை மறந்து வாஸனாரூபமாய்த் தோன்றும் பிரபஞ்சோபாதியால் வருந்தி மயக்கநீடிக்குமாறு கருவிகள் சலிப்பதாகிய ஸகலாவஸ்தையும் அச்சலனத்தை ஒடுக்குதலும் மீட்டு மீட்டு முதிப்பித்தலுஞ் செய்வதாகிய கேவலாவஸ்தையும் நிகழாவாறு கருவிகளை நிலைபெறுவித்து அந்நிலைகுலையாவண்ணம் அறியாமையை முற்றிலும் அழித்தருள்வதாகும். பதிபசு பாசவியல்புகளைப் பகர்வதாகிய இந்நூற்பொருளை நிஷ்காமியசரியைகிரியாயோகங்களிற் பற்றுடையார்க்கே உபதேசித்தல் தகுமெனச் சிவாகமங்கள் செப்புமென்பதாம்.

அண்டசங்கள் சுவேதசங்கள் பாரிற் றுதைந்துவரு முற்பிசஞ் சராயுசங்க ளென்கின் தோற்றியிடு மதனில் ஊற்றமிகு தாபரங்கள் பத்தொன்ப தென்று மூர்வபதி னைந்து உலவாவமரர் பதினொன்றோடு மாற்றருநீ ருறைவனநற் பறவைகண் மன்னியிடுநாற்காலிபப்பத்து மானுடரொன்பதின் மர் எடுத்து ஏற்றியோனி யெண்பத்து நான்குநூ றுயிரமென் றொருதொகை யியம்புவர்களெனவும் மூன மருவு மகலா விருபயனு மெனவும் அன்றே எண்ணரிய ஞான பாத நண்ணும்வகை நாடியசத் திபாத நாலுபாதங் கூடு மவர் தமக்கெனவும் இவை கேடில்புகழ் தருஞ்சரியை கிரியாயோகக் கேண்மையரேல்உணர்த்தநூல் கிளக்குமென வும் கொண்டு கூட்டுக.

கருதவென்பது சொல்லெச்சம். மயக்கத்தை ஒழித் தருளு மென்பது குறிப்பெச்சம்.

துதைந்துவருமென்றது சராயுசமென்றதனோடுஞ் சென் றியையும். துதைதல்—பிளவு படும்படி நெருங்குதல். தோற்றியிடு மதனி லென்னும் ஒருமை பசுவர்க்கத்தின் மேற்று. வேள்விப் பயன் முதலியவற்றாற் றேவபதவியைப் பெற்றோர் மனிதனைநோக்க அமரராயினும் தேவனைநோக்க

அஃவாறுகாமையிற் றேவர் உலவா வமரரெனச் சிறப்பிக் கப்பட்டனர். நன்மை—ஈண்டு வலிமை மேற்று. பத்துப் பத்தென்பது—பப்பத்தென மரீஇயிற்று. எடுத்தல், பிரித் தல் என்பன ஒருபொருட் கிளவி. ஏற்றுதல்—கூட்டுதல். எண்பத்து நான்கு நூறுயிர மென்னும் விரியொடு நின்ற யோனியென்பது தாவரமுதலிய எழுவகையினும் அண்டஜ முதலிய நாற்றொகையினுந் தனித்தனி சென்றியையும். விரி யொடு நின்ற நூறுயிரம் வகைகளினுந் தனித்தனி பொருந் தும். தாவரமுதலிய தோற்றங்களைச் சிறப்பொடு புணர்த் துக்காட்டி எடுத்தும் ஏற்றியும் யோனி எண்பத்து நான்கு நூறுயிரமென் றியம்பினமையாற் பொதுவகையான் எண் ணிறந்த யோனிபேதங்க ளுளவென்ப தாயிற்று. எண் ணடைவுபற்றித் திணைகள் கலந்தமைந்தன. இனையபல— சிறப்பும் பொதுவுமா யெண்ணிறந்து நின்ற. புனருற் பவ வுண்மை யுணர்த்துவார் இறந்து பிறந்தென்றுர். அருந்தற் குச் செயப்படு பொருட்கள் அவாய் நிலையாற் பெற்றும்.

முனமருவு மகலாவிரு பயனுமென்றது—முற்பிறவிகளிற் செய்துவந்த புண்ணிய பாவப்பயனைப் பசுக்களைப் பொரு ந்தியிருப்பதும் அனுபவித்தாலன்றித் தீராததுமாகிய இன் பத்துன்பங்க ளெனப்படும் ஸஞ்சிதம். முந்தநுகருந்து பயனுவது—முன்னர்த்தா யனுபவிக்கும்படி ஸஞ்சிதத்தி னின்றும் பிரிக்கப்பட்டு வந்து கூடும் இன்பத்துன்பங்க ளென்னும்பொருட்டாய்ப் பிராரப்தத்தின்மேற்றும். நுகரு மென்னும் பெயரெச்சம் நுகருந்து என நின்றது.

வந்த வினையு மெதிர் வினையு முடிவினை யுதவுபயனுக் கருதவென்றமையால் அங்ஙனங்கருதாது யான்செய்தேன் பிறர்செய்தாரெனக் கருதுதல் ஆகாமிய மென்பதாயிற்று. முடிவினை—முற்பிறவிகளிற் செய்து முடிந்த வினையெனப் பிராரப்தத்தை யுணர்த்தும். நேராக—இருவினை யொப் பாக. நேராதல்—வாயில் கண்மாட்டு விருப்பு வெறுப்புக்க ளாகாது இன்பத்துன்பங்களை யூட்டுவோன் இறைவனே

யென அவனையே நோக்கிக் குறையிரந்து நிற்றல். மேவுங் காலென்றது அருமை நோக்கி. திருந்திய சத்திநிபாதந் திகழ்தலாவது—மாலயன்பெறு பதத்தினும் மேம்பட்ட சிவ ஸாலோக்யாதி பதமுத்திகளும் அநித்தியமெனக் கண்டு நித்தியமாகிய ஸாயுஜ்யப் பேற்றினையே விழைந்து நிற்கு ஞானம் விளங்குதல். நாடிய சத்திநி பாதமாவது— விழைந்தபொருளை வேறுபாயங்களாற்பெறவொண்ணாதெனக் கருதிப் பெறுவிப்போராகிய ஞானாசாரியரைத் தேடு ஞான முண்டாதல். இவ்விருவகைச் சத்திநிபாதங்களுண்முன்னை யது பொதுவும், பின்னையது சிறப்புமாம். ஞானமென்னும் பொருட்டாயசத்திஎன்பதற்கும் பதிதலென்னும் பொருட் டாய பாதமென்பதற்கும், நடுவே நின்ற நி என்பது இடை விடாதுநிகழ்தலையுணர்த்தும்உபஸர்க்கம். தீவிரதரமாவது தலையினெருப்புப்பற்றிக் கொண்டவன் அதனை அதிசீக்கிர த்தில் அவித்தற்குரிய வெள்ளத்தையேயன்றிப் பிறிதொன் றையும் அறியானாய் வெள்ள மெங்குளதென நாடி யோடு தலையொப்ப அண்டபிண்டங்களாகிய உலகத்தானேர்படுவ தாய் ஆற்றவொண்ணாததாய் நிகழும்உபாதியைஅக்கணமே ஒழித்தருளவல்ல ஞானாசாரியரைத் தேடித் திரிதற் கேது வாகிய உணர்வின் மிகுதிப்பாடு. தீவிரமுதலிய ஏனைய மூன் றும் அடைவே தாரதம்மியப்பட்டுநிகழ்தலை இவ்வியல்பின் வைத்து ஊகித்துணர்ந்துகொள்க. கூடுமவர் தமக்கென்றது அதனருமை நோக்கி. மூர்த்திகொடு குறுகல்—சரீரியைச் சரீரமாக்கொண்டு எழுந்தருளுத லென்னும் பொருட்டு. அது, திருமேனிகொண் டெலாவுந் தனதடியவரது ஆன்மா வைத் தனக்குத்திருமேனியாகச் சிறப்புவகையாற்கொண் டெழுந்தருளுதன்மேற்று. மோக நீடுதலாவது—வருந்திப் பெற்ற சிவானுபவத்தா லொழிந்த பிரபஞ்சோபாதி மீட்டு மீட்டுமுதிக்குமாயின் அதனை மீளாதொழித்தற்குபாயமும் உளதோவென மயங்கிச் சோர்தலாம். அவ்வாறுதல் "ஈர்க் கின்ற தஞ்சொ டச்சம் வினையேனை யிருதலையே" என்றரு ளிய திருவாக்கா னினிது விளங்கும். பிறத்தற்குச் செயப்

படு பொருள் வருவிக்கப்பட்டது. இது நிலையார் சுத்த மெனவே அதற்கு முன்னர்த்தாய் நிகழு நிலையுதலிலவாகிய சுத்தங்களும் உளவென்பதுதானே போதரும்.

காமியத் தவத்தா னடையப்படும் ஸாலோக்கியாதி பத முக்திகளேயன்றி நிலைபெற்ற கீர்த்தியினையுடையஸாயுஜ்ய முக்தியைத் தந்தருளும் உண்மை ஞானத்திற்கு ஸாதன மாகிய சித்தசுத்தியையும் பயக்கு நிஷ்காமியச்சரியை கிரியா யோகங்களை இப்பிறவியிற் செய்யாதொழியினும் செய் வோர்மாட்டுப்பற்றுடையரே முற்பிறவிகளிற்செய்திளைத்து முமுக்ஷுக்களாயினரெனத் தெருளப்படுவோ ராகலின் அவர்க்கே இன்றியமையாச் சிறப்பிற்றாய் வேண்டப்படுவ தாகிய இந்நூற்பொருளை உணர்த்துவதன்றி நூற்பொரு ளைக்கேட்கவிரும்புவோர் நிருவாண தீக்ஷைபெற்றுடையரா யிருத்தன்மாத்திரையே அமையுமெனக்கொண்டு உணர்த்த லாகாவெனச் சிவாகமங்கள் செப்புமென்பார். கேடில்புகழ் தருஞ் சரியை கிரியாயோகக் கேண்மையரேல் இவை யுணர்த்தக்கிளக்குநூலென்றார். இவையென்னும் பன்மைச் சுட்டு—பொது, உண்மையென்னும் அதிகாரங்களிரண்டை யும் தழுவி நடுவண் வந்தது.

நிஷ்காமியச் சரியை கிரியா யோகங்களைச் செய்யினும் இருவினைப்பயனு யளவிறந்து கிடக்கும் ஸஞ்சிதமுழுமை யும் ஒரேகாலத்தனுபவித்துத் தீர்ந்ததாதல் யாங்ஙனங்கூடு மெனின் நிஷ்காமியத்தால் ஸாரூப்பியப் பயனையும் இச் சியாதொழிதலின் மற்றெவ்வகைப்பட்ட புண்ணியப்பயன் களினும் இச்சை யொழிந்ததாமாகலாற் புண்ணியப் பயனா கிய விஷயவின்பமும், சரியை கிரியா யோகங்களால் விசுவ ரூபியாகிய இறைவனது திருவுள்ளத்தை மகிழ்வித்தலிற் கோடைகாலத்து வெம்பிய தாரு மூலத்தின் வார்த்த தண் ணீர் சாகோபசாகைகளெங்கும் நிரம்பிக் குளிர்வித்துப் பத்திர புஷ்ப பலாதிகளாற் கவினச் செய்தலை யொப்பத் தோன்று தொட்டுச் செய்துவந்த அஹிதத்தால் வாடிய

தாயஎவ்வெப்புவனங்களினிருக்கும் எவ்வெத்திறத்தோரது உள்ளங்களேயுங் குளிர்வித்துமகிழ்வித்ததாய் வருமாகலாற் பாவப்பயனுகிய துன்பமும் ஓரேகாலத் தனுபவித்துத் தீர்ந் ததாதல் கூடுமென்க.

அவ்வாறு அனுபவித்துத் தீர்ந்ததாகுமேல் நிருவாண தீக்ஷையில் அத்துவசோதனேயாற் றீர்த்தல் எதனேயோ வெனின் ஸாரூப்பியப் பயனேயும் வேண்டா தொழிந்த இச்சை ஸாயுஜ்ய முக்தியைப் பெறுமளவும் மந்ததர பக் குவிகட்கு வாஸனாரூபமாய் ஒவ்வோரமையங்களின் மீட் டுத் தோன்றுதலும் உண்மையாம். அதனுல் அப்புண்ணி யப் பயன்களனைத்தும் பாவத்திற்குப்பரிஹாரமாகாத காமி யப் பயன்களாய்ப் பரிணமிக்கும் பரிணமிக்கவே பாவப் பயன்களுந் தோன்றி நின்று மேன்மேலும் பிறப்பிறப்புக் களே வளர்க்குமாகலான் அவ்வாருகா வண்ணம் காரணங் கெடக் காரியங்கெடுமென்னும் அனுபவமுறையின்வைத்து அவ்வத்துவாக்களிற் றங்கிய அந்தஇச்சையையே சோதித் துத் தீர்ப்பதாம். இதனுனே வாஞ்சிதப்பயன்கள் நிஷ்காமி யச் சரியை கிரியா யோகங்களால் வலியழியுமெனவும் நிரு வாண தீக்ஷையாற் கெடுமெனவுங் காண்க.

ஈண்டுக் கூறியவாற்ருற் பிறர்க்குச்செய்யும் ஹிதாஹிதங் களே புண்ணிய பாவங்களாமெனப் படுதலின் வேண்டுதல் வேண்டாமையிலானுகிய இறைவற்கும், அவனடி சேர்ந் தாராயாண்டும் இடும்பையிலராகிய மேலோர்க்கும், இயற் றும் உபசார அபசாரங்கள் புண்ணிய பாவங்களாமெனப் படுவது பொருந்தாதெனிற் பிறர் தமக்குச்செய்வதினும் தம்மா லபிமானிக்கப்பட்ட தந்தை தாய் மனேவி மக்கண் முதலாயினர்க்குச் செய்யும் உபசார அபசாரங்களான் மிக்க மகிழ்ச்சி வாட்டங்களே யடைதல் உலகியலிற்கண்டா மன்றே அவ்வாறே தம்மா லபிமானிக்கப்பட்ட இறைவற் குச்செய்யும் உபசாரஅபசாரங்கள் அடியவரதுள்ளத்தும் அடியவர்க்குச்செய்யும் உபசார அபசாரங்கள் இறைவன

துள்ளத்தும் மிக்க மகிழ்ச்சி வாட்டங்களை யடைவிக்கு மென்பது "வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும் புண்டரிகப் போதுறையும்புத்தேளிறுமாப்பு மண்டர்தொழ வாழுன்னிறுமாப்பு மாலால முண்டவனைப் பூசித்தபேறென் றுணர்ந்திலையால்." "சேட்டானை வானவரின் சென்னி செழியரிலோர் வாட்டானை வீரன் வளையாற் சிதறுகரின் கோட்டான நாற்கோட்டு வெண்ணிறத்தகுஞ்சரமுங் காட்டானை யாகவென் விட்டான் கடுஞ்சாபம்" எனவும், உருப் பொலாதவ ரிழிகுலத்தவர்நல் லொழுக்க மில்லவரொன்று நம்மளவில் விருப்பிலாதவ ரெனினு மெய்நீறு மிக்கசா தன வேடமுங் கண்டாற் றரிப்பிலாது சென்றெதி ருறவணங் கித் தக்கபோ னகமளித் தவர்க்கெளிதா விருப்பர்தா மவ ரடியவர்க் கடியா ரென்பர் யானெனதெனுஞ் செருக்கறுப் பார்." எனவும் அருளிய திருவிருத்தப் பொருட்களோடு அவ்வவற்றின் எதிர்மறைப் பொருட்களையும் உய்த்துணர வினிது விளங்கும்.

விருப்பு வெறுப்பின்றித் துய்த்திடினே மேலைக்குவித் தாகாவென்பது விரும்பியதை விரும்பியவாறே தவத்தாற் பெற்றும் வெறுத்தது ஆணைமீறிய குற்றமெனப் பட்டு சிக்ஷையைப் பயத்தலான் அதனையும் அனுபவித்துத் தீர்க் கும்பொருட்டு மீட்டும் பிறத்தற்கு அவ்விருப்பு வெறுப்புக் கள் வித்தாமாகலின்.

இன்பத்துன்பங்கட்குவாயிலாயினோர்க்குக் கைம்மாறளிக் கக்கருதி முயன்றவழி பிறகாரணங்களால் ஸாத்தியப்படா விடினும் கருத்துவகையால் ஸாத்தியப்பட்டதோ டொத் தலின் அதன்பயனாகிய இன்பத்துன்பங்களை யனுபவிக்கும் பொருட்டு அக்கருத்து மீட்டும் பிறவியை நல்குமாகலாற் கருதுதலுமாகா வென்பது.

மோக நீடுதல்—மாயா மலத்தின்றொழிலும், கேவலம்—ஆணவமலத்தின் றொழிலும், ஸகலம்—மாயேய மலத்தின் றொழிலும், அவற்றை நிகழ்வித்தல்—திரோத மலத்தின்

ரொழிலும், நிறுத்தினலன்றி நில்லாமை—கன்ம மலத்தின் ரொழிலு மாகலாற் காரியங்கெடக் காரணங் கெடுமென்னு முறைமை பற்றிக் கருவிகளை நிறுத்தி எனவும் காரணங் கெடக் காரியங் கெடுமென்னு முறைமைபற்றி மலமறுக்கு மெனவும் நிகழ்த்தினமையாற் பாசப்பகுதியவாகிய அவ் வைந்துமாறு மென்பதூஉம் இதுநிலையார் சுத்தமென்றமை யான் அவை மாறவே அருள் எளிதின்விளங்கி நிகழுமென் பதூஉம் போந்து ஐந்துமாரு தருளென்ப தரிதென்பரென் னும் எதிர்மறையை யுடன்பாட்டான் வலி யுறுத்தியவாறு மாயிற்று.

பாகமாம் வகை நின்று திரோதான சத்திபண்ணுதலான் மல மெனவும் பகர்வர், அதுபரிந்து நாகமா நதி மதியம் பொதி சடையா னடிக ணணுகும் வகை கருணை மிக நயக் குந்தானே எனவும் பாக மிகவுதவு திரோதாயி எனவும் முற்சின மருவு திரோதாயி கருணையாகி எனவும் இயம் பியவை திரோதான சக்தியின துபகாரத்தை ஆண்டா ண்டியைபு பற்றிச் சிறப்பு வகையான் எடுத்துக் காட் டியவாறு. (௫௫-௫௬-௫௭.)

## முக்தி பேதங்களதியல்பு.

அரிவையரின் புறமுத்தி கந்தமைந்து
மறமுத்தி திரிகுணமு மடங்கு முத்தி
விரிவுவினை கெடுமுத்தி மலம்போ முத்தி
விக்கிரக நித்தமுத்தி விவேக முத்தி
பரவுமுயிர் கெடுமுத்தி சித்தி முத்தி
பாடாண முத்தியிவை பழிசேர்முத்தி
திரிமலமு மகலவுயி ரருள்சேர் முத்தி
திகழ்முத்தி யிதுமுத்தித் திறத்ததாமே.

(இ-ள்.) பசுக்கட்கு அருளைப்பாலிப்பதாகிய அத்தகைய சுத்தாவஸ்தையையே யன்றிப் பலரும் பலவாகப் பகரு முக்தி

களையும் அவற்றை யடைதற் குரியவாய் அவர் கூறும் ஸாதகங்களையும் ஓர் நகர்க்குப் பலவித லக்ஷணங்களும் அந்நகரை யடைதற்குரியவாய்ப் பலவகைப்பட்ட நெறிகளும் உளவாதலை யொப்பக் கொள்வதனாற் படுமிழுக்கென்னையோவெனிற் பசுக்களது பக்குவபேதங்களை நோக்கி அவ்வவற்றிற் கியைய ஆன்றோரா னுபதேசிக்கப்பட்ட வேதாகம வாக்கியங்கட்குப் பசுக்கள் தத்தம் புல்லறிவிற் பட்டவாறே பொருளமைத்து அவற்றிற் கிணங்க உபாயங்களும் வகுத்துக் கொண்டு ஒழுகுவதாகிய ஊடல்தீர்த்தன் முதலிய ஸாதகங்களும் அச்சாதகங்களாற் பெறப்படுவனவாகிய அரிவைய ரின்புறு முக்திமுதலிய முக்திகளும் கூற்றத்தைக் கடப்பிக்கும் ஆற்ற லுடையன வன்மையால் தேஹாந்தத்துத் தம்மையும் தமக் குபதேசித்த குருக்களையும் தாமே பழிக்கும்படி செய்வனவாகலின் அவைகொள்ளற்பாலனவன்று. கல்லால நீழற்கண் வீற்றிருந்தருளிய பரமாசாரிய பரம்பரையாய் உபதேசிக்கப்பட்டு வரும் ஸாதக நெறியைக் கடைப்பிடித்துச் செய்வதாகிய அனுஷ்டானத்தாற் பஞ்ச மலங்களும் பரிணமித்து வாஸனா ரூபமாய்த் தோன்றுதலு நீங்கச் சுத்தாவஸ்தையாற் பசுக்கள் அருளோடுங் கூடுவதாகிய முத்தியே மெய்யறிவான் விளங்குமுக்தியாகலான் இஃதே மீட்டுப்பிறந்திறவாப் பேறாகிய நன்முக்தி யாவதென்பதாம்.

வேதபாஹ்யராகியஉலகாயதர் பௌத்தர் க்ஷபணரென்னும் இவரை யொழித் தொழிந்த சித்தர் முதலாயினோரை அவரதறிவின் றரதம்மிய வடைவுபற்றியன்றிப் பிறழவைத்தது செய்யுணடை நோக்கி யென்க.

ஈண்டுத் திரிமலமு மகலவென்றதற்கு, மேலே 'ஆணவமலமைந் தென்பரைந்து மாறு தருளென்ப தரிதென்ப ரறிந்துளோர்' என்றருளியதனோடு முரணாது பரிணமித்த பஞ்சமலங்களுநீங்கவெனப்பொருள்கோடலே அமைவுடைத்து.

இதே முத்தித் திறத்ததாமென விளையும். மீண்டுங் கூறி யது வலி யுறுத்தியவாறு.

வீட்டின்பத்தை நோக்க அறவுஞ் சிறிபதும் அநித்திய முமாமென அனுபூதிமான்களாகிய ஆன்றோரான் அலக்ஷி யஞ் செய்யப்பட்டதாய் நோய் வறுமை கவலை முதலியவ ற்றாற் பீடிக்கப்படாத இளமைக்கண்ணன்றி யெய்தப் பெறாததாய்ப் பெற்றாழியு நிலையுதலாகாது பசித்துண்டு பின்னும் பசிப்பானையொக்கச்செய்து யாண்டுங் குறைபாடு டையராக்கிப் பலவகைப்பட்ட துன்பங்களைப் பயப்பதாய் நிகழ்வ தென்பதனை நினையாது மயக்கத்தால் தேஹமே ஆன்மா போகமே முக்தியெனக்கொண்டு கைக்கிளைக்கா லுங் கடப்பாடுபற்றி ஒத்துறுவாரும் உளரேயாகலின் அப் பொதுமையினீக்கி "ஊட லுணர்தல் புணர்தலிவை காமங் கூடியார் பெற்ற பயன்" எனத் தெய்வப்புலமைத் திருவள் ளுவ நாயனாரும் சிறந்தெடுத் தோதினமையான் ஊடலே பந்தம் அதனை யுணர்ந்து தீர்த்தலே முக்தி கலத்தலே முக்திப் பயனென்பது வலித்தாந்தமாகும். அவ்வாறே யடைதற்குக் காமமு நாணுந் தோன்றுமையாற் கலவியின்ப மொன்றுளதெனக் கருதவறியாப் பேதையரை யொழித் தொழிந்த அறுவகைப் பருவத்தவருண் முன்னையர் மூவ கையாரும் அச்ச மிகுதியானும் பின்னைய ரிருவகையாரும் அன்பு மிகுதியானும் ஊடலைத் தலைப்படுவோரல்லர். இடை நின்ற அரிவையரே அன்பும் அச்சமும் ஒத்த அளவின ராய் ஊடலைத் தலைப்படுவர் ஆகலான் அவ்வூடலை யுபசார த்தாற் றீர்த்து அவரின்புறுமாறு நூல்விதி வழாது கலத் தலே ஆடவர்க் கமையாப் பேரின்பமாமென உலகாயதர் கூறுதலின் அரிவையரின்புறு முக்தியும்,

ஆன்மாவெனக்கொண்ட உருவ முதலிய பஞ்சகந்தங் களிற் றோன்றிய கரணவறிவு நிகழுமேல் அக்கந்தங்களும் உளவாதல் ஒருதலை யென்பதை யுணராது முக்திப்பயனை யனுபவித்தற் பொருட்டு அவ்வறிவு நிற்க அக்கந்தங்கள்

அறக்கெடுகையே முக்தியெனப் பௌத்தர் கூறுதலிற் கந்தமைந்து மறுமுக்தியும்,

நிஷ்காமியச் சரியை முதலிய தவப்பயனுய்வரும் இறைவனதருளா னன்றி முக்தியடைதல் கூடாவென்பதனை யறியாது அருகதேவனது அனந்தஞான முதலிய எண்குணங்கட்கு எதிர்மறையாயுள்ள ஞானாவர்ணியமெட்டும் பசிமுதலிய பதினெட்டும் சப்தமுதலிய ஆறுமாகிய மூவகைக் குணங்களையும்உடலைவருந்தச் செய்தன்முதலியதனதாற்றலானே கெடச் செய்யும்உபாயத்தான் முக்தி கூடுமெனக் கொண்டு க்ஷமணர்கூறுதலிற் றிரிகுணமுமடங்குமுக்தியும்,

மாயாகாரியமாய்த் தோன்றிய வுடம்பு உயர்தவப்பேற்றுற் சித்திற்கரைந்தாலன்றிக் காலநியதிகளைக்கடத்தலின்மையான் வினைப்பயனையனுபவித்துத் தீர்த்தற்பொருட்டு அப்பயனுக்கியைய மீட்டுந்தோன்றும்படி எஞ்ஞான்றாயினுங் காயம் இறுதியடைதல் ஒருதலையாமென்பதனையுணராது பிறத்தற்கேதுவாவது இறத்தலேயெனக்கொண்டு அவ்விறத்தலை அமிர்தபான முதலியவற்றாற்கடத்தலே பிறப்பொழிவதாகிய முக்திப்பேறெனச் சித்தர் கூறுகின்றவாறே காயத்தை அவாந்தரமாக நிலைபெறுவித்தலும் தான் அகப்பட்டிருக்குஞ் சிறைக்களத்தைச் சிறப்பித்துக்கொள்ளல்போல்வதேயாகலிற் காயசித்தியெனப்படும் விக்கிரக நித்தமுக்தியும்,

தற்காலத்தில் விளையாட்டாய் அதுபற்றிப் பிறர்க்குண்டாவதாகிய ஹிதாஹிதங்களாற் புண்ணியபாவங்களாகிப் பிற்காலத்திற் பெரும் பிறவிப்பௌவத்தெவ்வத்தடர்திரையாலெற்றுண்ணற்கேதுவாய் முடிதலத்துணையேயாமென்பதனை எண்ணாது இவற்றின்மிக்க பேறின்றென மயங்கி அணிமாவாதிகளுளப்பட்ட ஈசத்துவமுதலிய அஷ்டமாசித்திகளே முக்தியெனச் சித்தர் செப்புதலிற் சித்தி முக்தியும்,

அனாதியேயுள்ள ஆன்மஞானம் தவத்தான் மலமறைப்பி னீங்கி விளங்குமென்னும் வேதாகமக்கருத்தினை யறியாது தவத்தினையொழிந்துழி அபூர்வமாக ஓர் ஞானந்தோன்றி அந்த ஞானத்தானுண்டாந்தொழிலறிதியினடையப்படுவ தும் அறிவிழந்துகிடக்கச்செய்வதுமாகிய வருஞ்செயலொ ழிவே முக்தியெனப்பிரபாகரர் கூறுதலின் விரிவுவினை கெடுமுக்தியும்,

வாக்கு மனாதீதகோசரமா யுள்ளதென மறைகளானும் சிவாகமங்களானும் வழங்கிவரப்பட்ட பிரமப் பொருளை வாக்கு மனாதீதமாய் நின்றாலன்றி மருவொணா தென்பதனை யறியாது பிரமத்தைப் பிரபஞ்சமாக் காண்பது மாயாமயக் கமே யன்றிப் பிறிதன்றெனக் கரண வறிவாகிய விவேகத் தாற் காண்டலே முக்தியென மாயாவாதிகள் கூறுதலின் விவேக முக்தியும்,

ஆன்மாக்கள் பிரமத்தினேடொரேமுதலாய்ப்போம்படி முக்தியடைவரேற் பிரமம் உடம்புகளும் உயிர்களுமாய்ப் பரிணமிக்கும்வழி அவ்வான்மாக்களு முக்தியின்பத்தை யிழந்து துன்பத்திற் சுழலுமாறு மீட்டு மீட்டும் பிறப்பிருப் பிறப்புக்களையடைவது திண்ணமாகலான் அஃது முக்தி யெனப்படாவென்பதனையறியாது வேதவிதிப்படி ஸாத கஞ்செய்யின் ஸாதகனுகிய ஆன்மா ஸாதனங்களாகிய தனது ஞானக்கிரியைகளோடு பிரமத்திற்சென்றழிந்து பிர மத்தினேடொன்றாய்ப்போவதே முக்தியெனப் பாஸ்கரி யர் கூறுதலிற் பரவுமுயிர் கெடுமுக்தியும்,

கரணங்களொடுங்கிய கேவலத்திற்பட்டு மரணமடைந்த ஆன்மாக்கண் மீட்டுப் பிறத்தலும் கரணங்கள் விளங்கித் தோன்றாத மரக் கருவாகிய விதைகளி னமைந்து கிடக்கும் ஆன்மாக்கண் மரமாய் முளைத்தலும் பிரமாணத் திரையங் களானறியக் கிடத்தலின் அவர் முக்தி யடைந்தில ரென் பது இனிது விளங்குவதாகவும் அதனையறியாது கரணு பாவத்தான் ஓரனுபவமுந் தோன்றாத கல்லைப்போல

யாண்டுங் கிடத்தலே துக்க நிவர்த்தியாகிய முக்தி யெனப் பாடாணவாதிகள் கூறுதலிற்பாடாண முக்தியும்,

பசுக்களை அநாதியே பந்தித்துநின்ற ஆணவ மலமானது முக்தி பெற்ற வழியும் உடம்பு நிற்குமேல் வலி யழிந்து உடனிற்கு மென்பதே யன்றிக் கெடுவதன் றென்பதையும் ஆணவ மலத்தை வலி யழித்துநின்ற திருவருளோடு பசுக்கள் அத்துவிதமாகி நின்று சிவானுபவத்தைப் பெறுதலே முக்திப்பய னென்பதையும் உணராது இரத குளிகையாற் களிம்பு கெடத் தாம்பிரம் பொன்னாக விளங்குவதைப் போலத் திருவருளால் ஆணவமலங்கெடப் பசுக்கள் நித்திய சுத்தராக விளங்குவதே முக்தியெனப் பேத வாதிகள் கூறுதலின் மலம்போ முக்தியும், பழிசேர் முக்திகளாய வாறு.

திருவருளோடத்துவிதமெனப்படும் அபேதநிலை இன்றியமையாச் சிறப்பிற்றாய் வேண்டப்படு மென்பதை அறியாமையால் இவர் பேதவாதிகளெனப்பட்டனர்.

பௌத்தர் கூறும் பஞ்சகந்தகங்களாவன—பிருதுவி அப்பு தேயு வாயு வென்னும் பூதங்க ணான்கும், கந்தம் ரஸம் ரூபம் ஸ்பரிச மென்னும் அப்பூத குணங்க ணான்கும் ஆக எட்டுங் கூடிய உருவமும்; சுரோத்திராதிக ளைந்தும் சித்தம் ஒன்றும் ஆக ஆறுங் கூடிய குறிப்பும்; அக்கருவிகளா னுண்டாம் சப்தாதிகளைந்தும் அவற்றின் ஸமஷ்டி ஒன்றும் ஆக ஆறுங்கூடிய விஞ்ஞானமும்; அவ்வறிவுகளானுண்டாம் குசலா வேதனை யெனப்படும் ஸுகவறிவும் அகுசலாவேதனை யெனப்படும் துக்கவறிவும் குசலாகுசலா வேதனை யெனப்படுஞ் ஸுக துக்க அறிவுமாகிய மூன்றுங் கூடிய வேதனையும்; அவ்வேதனைப் பற்றி யுண்டாம் அருள் அவாவின்மை தவத்தின்கண் விருப்பம் என மனத்தானிகழு மூன்றும் இனியவைகூறல் மெய்ம்மைகூறல் பயனுளகூறல் அறமுரைத்தல் என வாக்கானிகழு

நான்கும் வணக்கம் ஈகை தவஞ் செய்தலெனக் காயத்தா னிகழு மூன்றுமாகிய புண்ணியம் பத்தும் தீயனசிந்தித்தல் ஆசை கோபமெனா மனத்தானிகழு மூன்றும் கடியன கூறல் பொய்கூறல் பயனில கூறல் கோட் சொல்லுதலென வாக்கா னிகழு நான்கும் கொலை களவு வீண்செய்கை எனக் காயத்தா னிகழு மூன்றுமாகிய தீக்குணம் பத்தும் ஆக இருபதுங் கூடிய பாவனையும் ஆம்.

க்ஷமணர் கூறுந் திரிகுணங்களாவன—அனந்த ஞான மெனப்படுங் கடையிலா வறிவுக் கெதிர்மறையாகிய ஞானா வர்ணியம் அனந்த தரிசன மெனப்படுங் கடையிலாக் காட்சிக்கெதிர் மறையாகிய தரிசனாவர்ணியம் அனந்த வீரி யமெனப்படுங் கடையிலா வீரியத்துக் கெதிர் மறையாகிய வேதநீயம் அனந்தஸுகமெனப்படுங் கடையிலா வின்பத் துக் கெதிர் மறையாகிய மோக நீயம் நிர்நாம மெனப்படு நாமமின்மைக் கெதிர்மறையாகிய ஆயுஷ்யநாமம் நிர்க்கோத் திர மெனப்படுங் கோத்திர மின்மைக் கெதிர்மறையாகிய கோத்திர நாமம் நிராயுஷியமெனப்படும் ஆயுவின்மைக்கெ திர்மறையாகிய ஆயுவந்தராயம் சம்மிதா பாவமெனப்படும் அழியா வியல்புக் கெதிர்மறையாகிய காயவந்தராயம் என எட்டுங் கூடிய குணம் ஒன்றும், பசி தாகம் பயம் செற்றம் உவகை மோகம் சிந்தனை பழித்தல் நோய் நசித்தல் வியர்வு கேதம் மதம் வேண்டல் அதிசயித்தல் புசிப்பு பிறப்பு உறக் கம் எனப் பதினெட்டுங் கூடிய குணம் ஒன்றும், சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்களும் அவற்றின் பரிணாமமும் என ஆறுங் கூடிய குணம் ஒன்றும் ஆம். இறுதிக்கண் வந்த அறுவகையை உழவு தொழவு வாணிகம் எழுத்து சிற் பம் பரதம் என அறுவகைத் தொழிலென்றனு மொன்று.

சித்தர்கூறும் அஷ்டமாசித்திகளாவன—அணிமா மகிமா லகிமா கிரிமா பிராப்தி பிராகாமியம் ஈசத்துவம்வசித்துவம் என்பனவாம்.

அவற்றி னியல்புகளாவன.

'அறவுஞ்சிறிய வுயிர்தொறுந்தான் பரமகாட்டை யணு வாய்ச்சென், றுறையுஞ்சிறுமை யணிமாவா முவரிஞால முதல்மேலென், றுறையுஞ்சிவாந்த மாறுறு முள்ளும்புறனு மகலாதே, நிறையும்பெருமை தனையன்றோ மகிமாவென்னு நிரம்பியநூல்.''

"இலகுமேரு பாரம்போ லிருக்கும் யோகிதனை யெடுத்தா, லிலகுவான தூலமென விருப்பதிலகிமாவாகு, மிலகு வானபரவணுப்போ லிருக்கும்யோகிதனையெடுத்தா, லிலகு மேரு பாரமென விருப்பதன்றோ கிரிமாவாம்."

"பிலத்திலிருந்தோ னயனுலகிற் புகுதன்மீண்டும் பில மடைதல், பலத்தின்மிகுந்த பிராத்தியாம் பரகாயத்தினண் ணுதல்வான், புலத்தினியங்க லிச்சித்தபோக மனைத்துந் தானிருக்குந், தலத்தி னினைந்தபடி வருதல் பிராகாமிய மாந் தவக்கொடியீர்''

"விண்ணிலிரவி தன்னுடம்பின் வெயிலா லனைத்தும் விளங்குதல்போன், மண்ணிலுளவாம்பொருள்பலவுங் கால மூன்றும் வானத்தின், கண்ணிலுளவாம் பொருளுந்தன் காயத்தொளியா லிருந்தறித, லெண்ணிலிதுவு மறையொரு சார் பிராகாமியமென் றியம்புமால்''

"ஈசனென முத்தொழிலுந்தன்னிச்சை வழிசெய்தெழு புரவித், தேசன்முதற்கோள்பணிகேட்பத்திகழ்வதீசத்துவ மாகும், பூசலவுணர் புள்விலங்கு பூதமனிதர் முதலுலகும், வாசவாதி யெண்மருந்தன் வசமாக் கொள்கை வசித்துவ மாம்'' என்பனவைகளே. (ரு௮)

## பொது முற்றிற்று.

ஆகப் பாயிரம் உளப்படத் திருவிருத்தம்—௫௪.

திருச்சிற்றம்பலம்.

## நிறுத்திய முறைமை.

**இங்கிவை பொதுவியம்பு மென்பர்க ளிதன்மே லான்மாத், தங்கிய வஞ்ச வத்தை தன்னுண்மை யுணர்த்துந் தன்மை, பொங்கொளி ஞானவாய்மை யதன் பயன் புனிதநாம, மங்கதி னணைந்தோர் தன்மை யறைகுவ னருளினாலே.**

(இ—ள்.) இந்நூலின்கண்ணே இதுகாறுங் கூறியவற்றைப் பதிபசு பாசங்களது தடஸ்தலக்ஷணமெனப்படும் பொதுவியல்பென மேலோர் விளம்புவர். இனி அம்முப்பொருட்களது ஸ்வரூபலக்ஷண மெனப்படும் சிறப்பியல்பாகிய உண்மையும், அவ்வுண்மையுடைப் பொருட்களிற் பசுவெனப்படும் ஆன்மாவானது பாசமெனப்படும் அவஸ்தைகளி னீங்கிப் பதியெனப்படும் சிவத்தை ஸ்வானுபவமாகப் பெறு முறைமையினை மாணாக்கரது பக்குவ பேதங் கட்கியைய உணர்த்து முறைமையும், உணர்த்து முறைமையுள் அவ்வுணர்ச்சி பற்றிச் செய்யும் ஸாதகத்தான் மேன்மேலும்வியாபகமாகும்வண்ணம் ஆன்மஞானத்தை விளக்கி நிற்பதாகிய சிவஞானத்தின துண்மையும், அவ்வுண்மை ஞானப் பேற்று னடையும் பயனும், அப்பயன் நிலைத்தற் பொருட்டு அனுஷ்டிக்கவேண்டும் ஸ்ரீ பஞ்சாக்ஷரங்களதியல்பும், அவ்வனுஷ்டானத்தான் வாஸனாமலத்தினீங்கிச் சிவானுபவத்தை ஸ்வானுபூதியாகப் பெற்றோரது பெருமையி னியல்பும் ஆகிய இவற்றைத் தம்பிரானார் காருண்யத்தினாலே எமதுள்ளத்தேநிகழும் ஸ்வானுபவம்பற்றிக் கூறுகின்றே மென்பதாம்.

இங்கியம்புமிவை பொதுவென்பர்க ளெனவும் ஒளி பொங்கு ஞானமெனவும் அதினங்கு அணைந்தோரெனவுங் கொண்டு கூட்டுக.

உண்மை என்றது மேலுந் தனித்தனியாகவும், தன்மை என்றது புனிதநாமமென்றதனோடும் சென்றியையும்.

உண்மை, தன்மை, வாய்மை, இயல்பு, என்பன ஒரு பொருட்கிளவி.

ஸ்வானுபவமா யுணருங்காற் பசுவியாபக அறிவுடைப் பொருளாகலின் ஆன்மா எனவும், பாசம் ஆன்மாவினது வியாபக அறிவை மறைத்து நிற்பதாய் ஆன்மாவாற்பயிலப் படுவதாயுள்ள பஞ்சாவஸ்தைகளாகலின் தங்கிய வஞ்ச வஸ்தை யென்வும், பதி அவ்வவஸ்தைகட்கதீதமாய் ஸர் வமுந் தன்மயமாக விளங்கும் சிவமாகலின் தன்னெனவும் சாற்றி யருளினர். தன்னெனச் சாற்றி யருளியது தற்சிவ மெனத் தெளிந்துளோர் செப்பியதைத் தமதுள்ளத்தே நிகழும் ஸ்வானுபவத்தின் வைத்து வலியுறுத்தியதூஉ மாயிற்று. அவ்வுழி தத் என்னும் மஹாவாக்கிய வட மொழி தன்னெனத் திரிந்ததாக் கொள்க.

ஒருபொருட் கிளவிகளாய் முன்பின்னாக வந்தவற்றுள் ஒளி என்றது ஆன்மஞானத்தின்மேலும், ஞானமென்றது சிவஞானத்தின் மேலுநின்றன. ஒளி இரண்டாம் வேற்று மைத்தொகை. பொங்கும்—பொங்கச் செய்யும். வாலுஞ மலத்தை யொழித்து ஆன்மாக்களைப் பரிசுத்தஞ் செய்யும் சிவமந்திரமாகலாற் புனிதநாமமெனப்பட்டது. இன்எதுப் பொருள்பட வந்தது. அங்கென்றது குறிப்புப் பொரு ளாய்ச் சிவத்தினது திருவடியை யுணர்த்தும்.

கருத்தினுறை திருவருளுங் கலந்துணைப்பனென நூன் முகத்து நுவன்ற ஆசிரியர் அருளினாலே யறைகுவனென ஈண்டும் நுதலிப்புகுந்தது மாணுக்கர்க்கு ஐயந்திரிபணுகா மைப் பொருட்டு.

காண்போனையின்றிக் காட்சியும் தடைநீங்கிய வழியன் றிப்பொருள் காட்சிப்படுதலும் இன்மையான் அதிகார வியல்புபற்றிப் பதி பசு பாச மென்னு முறையைப் பிறழ வைத்தார். (க)

நிறுத்த முறையானே முதற்கண் ஆன்மாவினது உண்மையை அருளிச் செய்கின்றார்.

செறிந்திடு முடலுண் மன்னிச் சேர்புலன் வாயில் பற்றி, யறிந்ததி லழுந்து மொன்று மறிந்திடா வறியுந் தன்மை, பிறிந்தடை யஞ்சவத்தை பெருகிய மலத்தாற் பேணி, யுறுந்தனி யதீத முண்மையுயிர்க்கென வுணர்த்து மன்றே.

(இ—ள்.) வியாபக வறிவுடைத்தாந் தன்மையை ஆணவ மல மேலீட்டினால் அனுதியேயிழந்து ஸ்தூல முதலிய பஞ்சசரீரங்களி னுள்ளாகப் பொருந்தி எதிர்ப்படும் விஷயங்களில்இந்திரியங்களுள் ஒவ்வொன்றால் ஒவ்வொன்றைக் கவர்ந்து அதிலழுந்துவதாய்ப் பிறழ்ந்து பிறழ்ந்து வருஞ் சிற்றறிவும் அறியாமையுமே தனதியல்பென மயங்குமாறு ஜாக்கிரமுதலிய பஞ்சாவஸ்தைகளில் இடைவிடாதுமாறி மாறிப் பயிலும் ஆன்மாவிற்குத் தன்னியல்பாவது அச்சிற்றறிவாகிய ஸகலத்தையும் அறியாமையாகிய கேவலத்தையு நீங்கி அவற்றிற் கிடனாகிய வுடம்புகளிற் றோய்வின்றி நின்மல துரியாதீதத்திற் றனித்து நிற்றலாமெனச் சிவாகமங்கள் செப்பு மென்பதாம்.

அறியுந் தன்மை மலத்தான் அன்றேபிறிந்து செறிந்திடு முடலுண் மன்னிச் சேர்புலன் வாயில்பற்றி அறிந்ததிலழுந்து மொன்று மறிந்திடா அடைபெருகிய அஞ்சவத்தை பேணி யுயிர்க்கு உண்மை அதீதம் தனியுறும்என வுணர்த்தும் இவ்வாறு கொண்டு கூட்டுக.

செறிந்திடும்உடலென்றது பஞ்சாவஸ்தைகட்கிடனாகிய பஞ்சசரீரங்களும் ஒன்றினொன்று வியாப்தியாகி நிற்றலை ஜாதி யொருமையாக உணர்த்திற்று.

பொதுவதிகாரத்து ஒவ்வோ ரிந்திரியமும் தத்தமக்குரிய விஷயத்தின் வைத்து ஏனைய நான்கு விஷயங்களையும் சார்பாகக் கவருமென்றாராயினும் அவற்றுள் ஒவ்வொன்றினை

யன்றி ஐந்துவிஷயங்களினும் ஒருங்கே அழுந்துவதன்மை யால் ஈண்டுச் சேர்புலன் வாயில்பற்றி யறிந்ததி லழுந்து மென்றார்.

அதீதத்தில் ஒன்றும் அறிந்திடாது கிடக்கும் ஆன்மா அடைவே கருவிகளின் பெருக்கத்தான் விஷய வுணர்வு விரியும்படி ஜாக்கிரத்தையெய்தலின் அடைபெருகிய அஞ் சவத்தையென்றார். அடை—கடைக்குறை. பெருகிய அஞ் சவத்தை எனவே சிறுகிய அஞ்சவத்தையாகிய கீழாலவஸ் தையுந் தானே போதரும்.

அதீதமென்புழி கண்ணுருபு விரித்துரைக்க.

நின்மலதுரியாதீதத்தில் ஆன்மா தனித்து நிற்குமுறைமை யாவது—பெத்தத்தில் ஆணவ மலத்தொடும் முத்தியில் அருளொடும் அத்துவிதமாகியே நிற்றலான் அந்நிலைகள் ஆன்மாவிற்குத் தனியாகாமையானும், தன்னலாதல் பிறரா னாதல் அந்நிலைகளிற் பிரித்தறிய வாராமையானும், சொப் பனவவஸ்தையில் இன்பத் தழுந்தினேன் ஜாக்கிரப்பட்டுழி சொப்பனம் ஜாக்கிரமென்னும் அவ்வீரவஸ்தானுபவங்க ளில் ஒன்றிலேனுந் தோயாது அவற்றைக்கண்டு நிற்றன் மாத்திரையே யாதலை யொப்ப உன்முகத்து நின்மல துரியா தீதத்தே சிவானுபவத்தைப்பெற்ற ஆன்மா அங்குநின்றும் பகிர்முகப்பட்டுழி அச்சிவானுபவத்தினாதல் வாலனுருப மாய்த் தோன்றும் பிரபஞ்சானுபவத்தினாதல் தோயாது அவ்விரண்டனையும் அவற்றொடு தோயாது நிற்குந் தன்னை யும் எதிரிட்டறிந்து நிற்றலேயாம். என்பது, உணர்த்துந் தன்மை கூறுழி இனிது விளங்கும்.

அவ்வாறன்றி அதீதத்தில் ஆணவ மலத்தான் மறைப் புண்டு கிடத்தலே ஆன்மாவிற்கு ஸ்வரூப லக்ஷணமா மெனின் அதனை நாடோறும் அனுபவிப்பதனாற் காண்க வென்னலே யன்றி உணர்த்துமென ஆகமப் பிரமாணத் தின்மேல் வைத்துரைக்க வேண்டாவென்க.

உருவுணர்வி லாமையானு மோரொரு புலன்க ளாக, மருவிநின் றறிதலானு மறுநிக டம்மின் மன்னித், தருபய னுகர்தலானு முயிர்சட மாத லானு, மருவினை யுடலுளாவி யறிவினு லறியு மன்றே.

(இ—ள்.) செறிந்திடுமுடலுண்மன்னுவதென்ப தென்னை ஸ்தூல தேகமுதற் பிராணவாயு வீறுகியவற்றுள் ஒவ்வொன்றே ஆன்மாவாத லையுமென்பார் மதம் அடாதோ வெனின் உறக்கத்தும்பிணத்தும் தனதறிவின்மையைக்காட்டுதலால் ஸ்தூல தேகமும் சப்தாதிய விஷயங்களின் ஒவ்வொன்றை யன்றி அழுந்தி யறியாமையான் இந்திரியங்களும் இந்திரியங்களாற் றரப்பட்ட விஷயங்களின் பயனைத் தம்மின் ஒருங்கே கூடிநின்றன்றி நுகர மாட்டாமையான் அந்தக்கரணங்களும் இயங்கற்றொழிலுடைத்தென்பதே யன்றி எஞ்ஞான்றுமெட்டுணையும் அறிவின்மையாற்பிராண வாயுவும் ஆன்மா வாகாமையின் அடாது. அடாதேல் அறியுந் தன்மை அன்றே பிறிந்தவான்மா செறிந்திடு முடலுண் மன்னுதற் கேதுவென்னை சேர்புலன் வாயில்பற்றி யறிதல் எவ்வாறெனின் அனாதி கன்ம பலன் காரணமாகத் திருவருளான் மன்னி அப்பயன்களை அவ்வருளானே அனுபவமாக வறியு மென்பதாம்.

ஆன்மா வாகாமையின் அடாதென்பது குறிப் பெச்சம்.

தருபயன் மறுதிகடம்மின் மன்னி நுகர்தலானு மென க்கொண்டு கூட்டுக. மன்னி என்றது ஆவி என்பதனோடுஞ் சென்றியையும்.

மருவி நின்றறிதற்கும் தருதற்கும் வினைமுதல் அவாய் நிலையான்வந்தது. அருவினை யுடல்—ஏதுப்பெயர்கொண்ட ஐந்தாம் வேற்றுமைத் தொகை. அனுபவத்தானன்றிக் கட்புலனுக் கெய்தாமையான் அருவினை என்றார். வினைப்பயனை வினையென்றது உபசாரம். அறிவென்றது ஏற்புழிக்கோடலால் திருவருளின் மேற்றாகி நடுநிலைத் தீபமாய் நின்றது. (ரு)

அறிவெனில் வாயில் வேண்டா வன்றெனி ...வைதாமென்னே, யறிவதை யுதவுமென்னி லசே தன மவைதாமெல்லா, மறிபவ னறியுந்தன்மை யருளுவ னென்னிலான்மா, வறிவிலா தாகுமீச னசேதனத் தளித்திடானே.

(இ—ள்.) அறிவினு லறியு மெனவே ஆன்மா இயற்கை யறிவுடைப் பொருளோ அன்றோ வென உண்டாம் ஐய மகலத் தெருட்ட வேண்டுமெனின் விஷயங்களைக் கர ணேந்திரியங்களா னன்றி யறியமாட்டாமையான் இயற்கை யறிவுடைத்தாவதன்று அக்கரணேந்திரியங்கள் ஆன்மப் பிரவேசமில்வழி யறியமாட்டாத ஜடமாகலான் இயற்கை யறிவுடைத்தாகாதது மன்று. முற்றுணர் வுடையோனு கிய முழுமுதற் கடவுளினது தொழில் வினுவதன்மை யான் இறைவன் அறிவிக்கக் கரணேந்திரியங்கள் வாயிலாக விஷயங்களை யறியும் அறிவினையுடையதாகு மென்பதாம்.

ஆன்மா அவ்வறிவுடையதாதலை ஞாயிற்றி னொளிகாட்ட உபநேத்திரம் வாயிலாகப் பொருளைக் காணும் ஒளியினை யுடைய கண்ணுவமையின் வைததுணர்க.

ஆன்மாவானது அறிவிக்கினும் அறியாத ஜடமாயின் அறிவித்தல் பயன்படா வாகலான் ஈசனசேதனத்தளித் திடா னென்றார். வேண்டா, என்னே, அசேதன மவைதாம், ஆன்மா அறிவிலா தாகும், ஈசனசேதனத் தளித்திடான், என்பன விதண்டாவாதமாய் மறுதலைப் பொருளை யுணர்த் தி நின்றன.

இஃது வாதிகள் கூற்றுக்களை ஆசங்கித்துப் பரிகரித்து மேலைச் செய்யுட் கருத்தை வலியுறுத்தியவாறு. (ச)

அறிவினு லறிந்தயாவு மசத்தாதலறிதியென்று, மறிவினு லறியொணுதா லாவதொன் றின்மை தொன்மை, யறிவுதா னென்றைமுந்தி யதுவதுவ

வாகக்காணு, மறிவுகா ணசத்துமற்ற தறிவினுக் கறியொணாதே.

(இ—ள்.) உலகியலிற்கண்கூடா நிகழ்தலையொப்ப உலகப் பொருட்களை யறியு முன்னரே அதனை யறிவிக்கும் இறைவனை அறிந்தே மென்பார் ஒருவரு மின்மையால் இறைவன் அறிவிக்க ஆன்மா அறியு மென்ற தொவ்வாதெனின் அற்றன்று; ஆன்மாவினது பண்டைப் பரிசல்லாத அவஸத்தாகிய சுட்டறிவிற்படும் விஷயங்களைப்போல இறைவன் அழிபொருளன்மையாற் சுட்டறிவிற் படுவோனல்லன் அவ்வறிவினீங்கிய முக்திக்காலத்துப் பண்டைப் பரிசாகிய ஸத்தறிவினால் ஸ்வானுபவமா யறியப்படுவன். ஆகலான் இறைவன் அறிவிக்க ஆன்மா அறியு மென்னற் கிழுக்கின் றென்பதாம்.

ஆகலான் இறைவன் அறிவிக்க ஆன்மா அறியுமென்னற் கிழுக்கின்றென்பது குறிப்பெச்சம்.

தொன்மையறிவு தானொன்றை முந்தி யதுவதுவாகக் காணும் அறிவு அசத்துகாண் அறிவினாலறிந்த யாவு மசத்தாத லறிதி மற்றதறிவினுக் கறியொணாது என்று மறிவினாலறியொணாதா லாவதொன்றின்மை எனக்கொண்டு கூட்டியும், அவ்வறிவு அசத்துகாண், அவ்வறிவினாலறிந்தயாவும், அவ்வறிவினுக் கறியொணாது என ஆண்டாண்டு அகரச் சுட்டுக்கள்வருவித்தும் உரைக்க.

ஒன்றைமுந்தி யதுவதுவாகக் காணல்—விஷயங்களில் ஒன்றைவிட் டொன்றைப் பற்றி முனைத்து நின்று அவ்வவ் வாகாரமா யழுந்துதல். அறிவினாலறிந்த யாவுமென்றது ஆன்மாவினது சுட்டுணர்வா லறியப்பட்ட விஷயங்க ளனைத்து மென்னும் பொருட்டு. மேலைச்செய்யுளின் ஈசனென்றதைக் குறிப்பானுணர்த்திப்போந்த மற்றதென்றது திணை வழுவமைதி.

சுட்டறிவி னீங்கிய முக்திக்காலத்து ஸ்வானுபவமாயறி ப்படுதல் ஒருதலையென்பார் என்று மறிவின லறியொணு தாலாவதொன்றின்மை என எதிர்மறையாற் கூறினர். (ரு)

**எவ்வறி வசத்தறிந்த தெனிலுயி ரறியாதீச**
**னவ்வறி வறியானல்ல தசேதன மறியாதாவி**
**செவ்விய கருவிகூடித் தெரிவுறு தருளிற்சேரா**
**வொவ்விரு வகையதென்னி லொளியிருளொருங்**
**[குருவே.**

(இ—ள்.) இறைவன் அறிவிக்கக்கரணேந்திரியங்கள்வாயி லாகஅறியும் அறிவுடைத்தாகியஆன்மா அஸத்தாகியவிஷ யங்களையறியும்படி பண்டைப்பரிசிற்றிறம்பி யெழுந்த சுட் டறிவாவ தியாவருடைத்தெனின் முற்றறிவினை யுடைய இறைவற்குச்சுட்டி யறியவேண்டுவதின்றுகலானும் ஆன்மா அவன் அறிவித்தாலன்றி அறியுந்தன்மைத்தன்றுகலானும் கரணேந்திரியங்கள் அறிவிக்கினும் அறியமாட்டாத ஜட மாகலானும் அம்முப் பொருட்களுள் ஒன்றினுடைத்து மன்று. அன்றெனில்ஆன்மாவோடாதல் முற்றறிவாகியதிரு வருளோடாதல் கரணேந்திரியங்களின் சேர்க்கைபற்றி யுள தாவதெனப்படாதோவெனின் ஆன்மாவாதல் கரணேந்திரி யங்களாதல் ஒன்றனையொன்று தானகப்பொருந்தற்கும் பொருந்தியவழியுந் திருவருளையின்றிஅறிதற்கும் ஸ்வதந் திரமுடையனவன்மையானும் கரணேந்திரியங்கள் ஒளிமுன் னிருள்போலத் திருவருண் முன் வலியழிந் தடங்குவதே யன்றித் திருவருளோடு கூடி நிற்பன வன்மையானும் ஆவதெனப்படா படாவேல் முற்றறிவினையுடைய இறை வற்குச் சுட்டி யறிய வேண்டுவதின்றுயினும் சுட்டறிவு முண்டென்றுற் படுமிழுக் கென்னையோ வெனின் ஓர் கண்ணின் மாட்டு ஒளியோடு ஒளியின்மையும் பொருந்தி நில்லாமையை யொப்ப இறைவன் மாட்டு முற்றறிவாகிய திருவருளோடு சுட்டறிவிற் கேதுவாகிய அறியாமையும்

பொருந்தி நில்லா வாகலான் அங்குச் சுட்டறிவுளதாத லின்று. மற்றென்னேயோ வருவாயெனின் இறைவன் அறி வித்தவாறே ஒருங்கே யறிதற்கெழுகின்ற ஆன்ம ஞான மானது ஆணவமலமாகிய அறியாமையாற் றடைப்பட்டுக் கரணேந்திரியங்களின் வழியாய்ச் சுட்டறிவாகி நிகழு மென்பதாம்.

இறைவன் அறிவித்தவாறே ஒருங்கே என்பது முதல் குறிப்பெச்சம்.

அசத்தென்புழி இரண்டாவதும் அவ்வறி வென்புழி மூன்றாவதும் விரித்துரைக்க. ஈசனவ்வறிவாலறியான் உயி ரறியாது என மாறுக. அல்லதென்றது பாரிசேஷ வளவை யாய்க் கருவிகளை யுணர்த்தி நின்ற குறிப்பு மொழி.

ஈண்டுஸ்வதந்திரமாகவென்னும்பொருட்டாய செவ்விய வென்றது நடுநிலைத் தீபம். கருவி அருளிற் சேராவெனக் கிளந் துரைக்க. இறைவன்மேற் சாரவைத்து ஒவ்விரு வகையதென்றது தொகையான் ஒன்றாகிய அறிவே வகை யான் முற்றறிவு சுட்டறிவு என்னும் இரண்டாயிருக்க வொண்ணுதோ வென்னும் பொருட்டு. ஒளியிரு ளொருங் குறுவென்றது உவமத் தொகை. (சா)

**சத்திது வென்றசத்துத் தானறியாதசத்தைச், சத்தறிந் தகலவேண்டா வசத்திது சத்தென் றோர், சத்திரு ளொளியலாக்கண் டன்மைய தாம சத்தைச், சத்துட னின்றுநீக்குந் தன்மையாற் சதசத்தாமே.**

(இ—ள்.) மேற்கூறியவாற்றால் இறைவன தறிவாகிய திரு வருளும் ஆன்மாவுங் கருவிகளுங் கூடியன்றி ஓர் பொருளை யறியாவென்பது பெறப்படுதலின் அம்முப்பொருட்களுள் எப்பொருள் ஸத்தை யறிந்தனுகற்கும் அசத்தை யறிந்த கறற்கும் கடப்பாடுடையதெனின் ஸத்தாகிய இறைவனை அஸத்தாகிய கருவிகள் ஒருஞான்று மறிவதன்று. ஸத்

தாகிய இறைவனோடு யாண்டுந் தாதான்மியமாய் நிற்கும் ஸத்தாகிய திருவருட்கு அஸத்தாகிய விஷயங்களை அறிந் தகலவேண்டுவதின்று. ஆகவே பாரிசேஷவளவையின் வைத்து ஆன்மாவேகடப்பாடுடையதென்றறிக. ஆயின் ஆன்மா ஸத்தோ அஸத்தோவெனின் ஸோமஸூரியாக்கினிகளின் ஒளியையாதல் இருளையாதல் காண்கின்ற கண்ணொளி அவ்வவ்வாகாரமாய் நிற்பினும்முதல்கெடாது அவ்விரண்டற்கும் வேறுயதோர் ஒளியாதலையொப்ப ஸத்தேயாம். ஆமெனினும் ஸத்தாகிய திருவருளோடு கூடிநின்று அஸத்தாகிய விஷயங்களை நீக்குதலான்ஈரிடத்து நிற்பதென்பதுபோதருதலின் ஆன்மா ஸதஸத்தெனப்படு மென்பதாம்.

சத்திதுவென்பன விரண்டும் இறைவன் மேலும், சத்தென்பன விரண்டும் திருவருண் மேலும், ஓர் சத்தென்றது ஆன்மாவின்மேலும், அசத்தென்றது கருவிகண்மேலும், அசத்திது வென்றதும் அசத்தை யென்பன விரண்டும் விஷயங்கள் மேலு நின்றன. ஓர் சத்து வினைத்தொகை. சத்தசத்தெனற் பாலதனை, சத சத்தென்றது வடமொழி மதம். (எ)

**கண்ணொளி விளக்களித்துக் காட்டிடு மென்னின்முன்னங், கண்ணொளி யொன்று மின்றும் விளக்கொளி கலந்தவற்றைக், கண்ணொளி யகல நின்றே கண்டிடும் வேறுகாணக், கணணொளி விளக்கின்சோதி கலந்திடுங் கருத்தொன்றன்றே.**

(இ—ள்.) திருவருளோடு கூடி நின்றன்றி அஸத்தாகிய விஷயங்களை யறிந் தகலமாட்டாத ஆன்மா சித்தோ அசித்தோவெனின் விளக்கொளியான் வியாபிக்கப்பட்ட பொருட்களை அவ்வொளி வியாபகத்திற்குப் புறம்பே நிற்குங்கண்ணுங் காண்டலாற் கண்ணுக்குத் தன்னொளியுள வென்பதூஉம் உளவாயினும் விளக்கொளியான் விளக்கப்பட்டுழியன்றி அப்பொருட்களைக் காணாமையால் ஈரொளி

யும் ஒற்றித்து நின்றே காணுமென்பதூஉம் ஒற்றித்து நின்று காணினும் விளக்கொளி காட்டலும் கண்ணொளி காண்டலுமாகிய தாரதம்மியங்களை யுடையவா மென்ப தூஉம் காண்டல் கருதல்களான் இனிது விளங்கக் கிடத்த லின் அதனையொப்பத் திருவருள் அறிவிக்க ஆன்மா பொருளை யறிவதோர் அறிவுடைத்தாக லாற்சித்தேயா மெனினும் அறிவித்தாலன்றி அறியாமைபற்றிச் சிதசித் தெனப்படு மென்பதாம்.

கண் என்பவற்றுண் முன்னைய விரண்டினும் நான்காவ தும் பின்னையதின் ஆறாவதும் ஒளி என்பனவற்றுண் முன் னையதின் இரண்டாவதும் இறுதிக்கண்ணின்ற கண் ணொளியென்பதின் உடனிகழ்ச்சிப் பொருள் படவந்த மூன்றாவதும் விரித்துரைக்க. ஒன்றும் என்றது சற்றுமென் னும் பொருட்டு. இன்றுமென்பது மறுதலைப் பொருள் படவந்த குறிப்பு மொழி. விளக்கொளி என்றது விளக்கு கின்ற ஒளி என்னும் பொருட்டாய் ஸோம ஸூரியாக்கி னிகளின் ஒளிகளை யுணர்த்தும். வேறு—தனித்து. கரு த்து—தன்மை மேற்று.

எல்லாம் அறிபவ னறியுந் தன்மை யருளு னென்னில் ஆன்மா வறிவிலா தாகுமீச னசேதனத் தளித்திடானென் றது ஆன்மா இயற்கைஅறிவுடைப்பொருளோ அன்றோ வென்னும் ஐயந்தீர்த்ததூஉம் ஈண்டுவமையின் வைத்துக் காட்டியது ஆன்மா அறிவுடைப்பொரு ளன்றென்னும் வாதத்தைமறுத்து முன்னையதை வலியுறுத்தியதூஉம் ஆக லாற் புனருத்தியாகாவென்க.

இச்செய்யுள் சொற்பொருட்பின்வருநிலையாய் ஒட்டலங் காரம் பெற்றவாறு. (அ)

ஓரிடத் திருத்தன் மாயா வுருநிறைந் திடுத லொன்றும், பேரிடத் துறைதருளே பிறங்கறி வாகி நிற்றல், சோர்வுடைச் சடநிகழ்த்த லெனு

மிவை சொல்லார் நல்லோர், ஓர்விடத் துணரு
முண்மை யொளிதரு முபலம் போலும்.

(இ—ள்.) ஒவ்வொரு விஷயமாய் விட்டுவிட்டறியும்படி ஒவ்வோரிந்திரிய மாத்திரையே இடனாகக்கொண்டு நிற்பதன்றி விஷயங்களைந்தையும் ஒருங்கே யறியும் வண்ணம் இந்திரியங்களைந்தினும் ஒருங்கே நிற்றற்கும் விட்டுவிட்டறியப்படும் ஒவ்வொருவிஷயத்தின் றன்மையும் இஃதெனப்பாரம்பரியத்திலறிந்த தாய் தந்தை குரவர் முதலியோரான் அறிவிக்கப்பட்டறிதலேயன்றித் தானாக அறிதற்கும் ஆற்றலில்லாததாய் அவ்வா றறிதற் கிடனா யெடுத்த வுடம்பிற்கு இறுதிவருமென அஞ்சி உள்ளங் குலைதலையுமுடைய அவ்வான்மாவே பிற்காலத்து எவற்றையும் ஒருங்கேயறியும்படி உலகமுழுமையும் வியாபித்து நிற்றலும் எவற்றையும் ஒருங்கே யறிவதாகிய வியாபகவறிவும் பிறரானன்றி இயற்கையாகவே விளங்குதலும் உயிர்களிற் றீர்ந்த உடம்புகண் மீட்டு மவ்வுயிர்களைக் கூடிக் குலாவச் செய்து மகிழ்தலும்உடையவாதல் பிரமாணத்திரயங்களானும் அறியக்கிடத்தலின் ஒன்றோடொன்றுமுரணுவதாகிய இவ்விரு திறங்களானுண்டாம் ஐயமகலுமாறு ஆன்மாவின் றன்மை இஃதென அறுதியிட்டறிவிக்க வேண்டுமெனிற் பாசத்தைச் சார்ந்துழி துன்பமே அனுபவமாம்படி சுட்டறிவே வடிவாகியும் பதியைச் சார்ந்துழி வரம்பிலின்பமே அனுபவமாம்படி முற்றறிவே வடிவாகியு நிற்பவாகலாற் சுத்தப் படிகத்தை யொப்ப ஆன்மாவின் றன்மை சார்ந்ததன் வண்ணமா மென்பர் ஸ்வானுபூதிமான்க ளென்பதாம்.

ஒவ்வோரிந்திரியத்திற்கும் உரியவிஷயம்பற்றி ஏனைய நான்குவிஷயங்களையுஞ் சார்பாக வறிதல் சிறப்பியல்பாகலான் யாண்டு நிகழ்வனவாகிய பொதுவியல்பின்வைத்து ஒவ்வொருவிஷயமாத்திரையே அறியுமெனப் பொருள் கோடலே சண்டைக்கியைபுடைத்தென்க.

ஓரிடத்திருத்தல் மாயா வுரு நிறைந்திடுதல் ஒன்றும் பேரிடத்துறைதல் தானே பிறங்கறிவாகி நிற்றல் என்பன நிரனிறை. அதுபற்றி சோர்வுடைச்சட நிகழ்த்தற்கு எதிர்மறை ஏற்குமாறு வருவிக்கப்பட்டது.

இச்செய்யுள் உண்மை யதிகாரத்ததாகலானும் படிக வுவமையின் வைத்து ஆன்மாவின்றன்மை சார்ந்ததன்வண்ணமாமென வித்தாரந்தப்படுத்தலானும் ஒன்றேடொன்று முரணுவதாகிய இருவகை யியல்பினுள் யாதுண்மையென வினையதென்பதே யமைவுடைத்து. அவ்வுழி மாயா வுரு நிறைந்திடுத லென்றது அறியாமையாகிய காரணத்தைக் காரியமாக வுபசரித்ததேயாம். யாங்ஙனமெனின் மாயா வுரு அனாதிபந்தமாயுள்ள அறியாமையை அவஸ்தைகளான் அனுபவித் தகற்றற் கிடனாக வமைந்த வாகலானும் அதன்கண் ணிறைந்திடுதல் அவ்வறியாமை யுள்ளளவும் நீங்காவாகலானும் என்க.

சோர்வுடைச் சடம்—உயிரிற் றீர்ந்ததாய் அவ்வுயிராற் றனக்குடைப்பொருளென அபிமானிக்கப்பட்டிருந்த அத் தூலவுடம்பு. உவமப்பொருள்போல ஆன்மா அஸத்தசித் தன்றென்பார் உணரும் உண்மையென்றார். எவற்றினுமிக்க நலமாகிய வீடுபேற்றினை யுடையராய்த் தாம் பெற்றபேறு உலகம் பெறவேண்டுமெனச் சாதகஞ் செய்வோ ராகலின் நல்லோரெனப் பட்டனர் ஃவானு பூதிமான்கள். என்பரென்பது சொல்லெச்சம்.

சோர்வுடைச்சட நிகழ்த்துமென்பதற்கு நமதுகுலதெய்வங்களாகிய ஆளுடைய பிள்ளையார் முதலாயினர் அங்கத்தைப் பூம்பாவையாக்கி யருளியது, வேதியகுமாரனை விஷந் தீர்த்தெழுப்பி யருளியது, முதலைவாய்ப்பிள்ளையை யழைப்பித்தருளியது முதலிய செய்கைகளே சான்று. சென்ற கால வளர்ச்சியோடும் அழைப்பித்தருளினமையான் முதலைவாய்ப் பிள்ளையும் சோர்வுடைச் சடத்தின் மீண்டதேயாம். இச் சான்றாகிய அரசின்மேல் வைத்துப்பொருள்

கொள்ளுங்கான் முயலகன் களிர் சுர முதலியவற்றாற் றளர்ச்சி யடைந்ததினீக்கிக் குலாவச் செய்தவைகளும் அடங்குவனவாம். சோர்வுடைச்சடம் நிகழ்தலான் மகிழ்வரென்பது "கண்ணுதல் கருணை வெள்ளமாயிரமுகத்தாற் கண்டார்" என்பது முதலியவற்றாற் பெறப்படும்.

ஆளுடைய பிள்ளையார் மூன்றுவது திருவயதில் "தம் மேலைச்சார்புணர்ந்தோ சாரும் பிள்ளைமைதானோ அம்மே யப்பாவென்றென் றழைத்தருளியழுதருளி"ன ரென்றமையான் அவ்வுணர் வுதிக்குங்காறும் தாய்தந்தை முதலியோரான்உணர்த்தப்பட்டுணர்ந்தா ரென்பதூஉம் ஞானபோனகராயதற்பின்னர் "கைச்சிறிய தொருமாறுகொண்டோச்சக்கா லெடுத்தன"ரெனப் பாசவாலனையைக்காரணமாக்கிப் பகர்ந்தமையான் அதன் முன்னர் உடற்காப்பு முடையராயிருந்தா ரென்பதூஉம் ஊகிக்கற்பாலன. அதனை நாடகமெனக்கொள்ளின் உலகிற் கியலை யுணர்த்தியதாகும்.

இச்செய்யுள் கண்ணொளி யுவமையின்வைத்துக் காட்டியதனை வலியுறுத்தியவாறு மாயிற்று. (சு)

---

இனி அஞ்சவஸ்தையினதுண்மையை

அருளிச்செய்கின்றார்.

**எண்ணவொன் றிலாததீத மெய்திய துரியத்தொன்றா, நண்ணிடுஞ் சுழுத்திதன்னி னயந்துளதொன்றுபின்னு, மண்ணிடுங் கனவுதன்னி லாறேழாஞ் சாக்கிரத்திற், கண்ணுறு மஞ்சாறுய கருவிகள் காணுந்தானே.**

(இ—ள்.) அஞ்சவஸ்தையாவது துரியாதீதத்திற் புருஷதத்துவமும், துரியத்தில் அப்புருஷதத்துவத்தோடு பிராணவாயுவும் சுழுத்தியில் அவ்விரண்டனோடு சித்தமெனப்படு மூலப்பிரகிருதியும் சொப்பனத்தில் அம்மூன்றனோடு அபா

ஞதி வாயுக்கள் ஒன்பதும் மனம் புத்தி அகங்காரம் மூன்றும் பூதங்களிடமாக சப்தாதிய விஷயங்களைத் தோற்றுவிப்பதாகிய தன்மாத்திரைகளைந்தும் வசனுதிகளைந்தும், ஜாக்கிரத்தில் அவ்விருபத்தைந்தோடு பஞ்சபூதங்களின் வழித்தாய்த் தொழிற்படுவனவாகிய ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பத்தும் ஆன்மப்பிரவேச மாத்திரையானே தத்தந் தொழிற்களைத் தலைப்பட ஆன்மாவும் அவற்றோடு அபேதமாய் போக்கு வரவு புரியுங்காலங்களெனப்படு மென்பதாம்.

ஆன்மாவு மவற்றோடு அபேதமாய்ப் போக்கு வரவு புரியுங்காலங்களெனப்படு மென்பது குறிப்பெச்சம்.

ஆன்மா துரியாதீதத்திற் சென்றடங்கினும் வினைப்போகங்காரணமாக மீண்டடையும் அவஸ்தையென்பார் எய்திய துரியமெனவும், போகம் பொருந்தினுந் துன்ப முண்டாகாவாறு ஆண்டுக் குவிந்து நிற்குஞ் சித்தமென்பார் நயந்துளதொன் றெனவும் போகஸாதனமாகிய கருவிக் குழாங்களான் ஆன்மா நெருக்குண்ணும் அவஸ்தை யென்பார் அண்ணிடுங் கனவெனவும் அண்டபிண்டங்கள் அமைந்தவாறே காணப்படுவதாகிய அவஸ்தையென்பார் கண்ணுறுஞ் சாக்கிர மெனவும் அரசற் கமைச்சராதியரையொப்ப ஆன்மாவினது பிரேரகமின்றியே அதன் வரவு நோக்கிக் கருவிகள் தத்தந் தொழிலைத் தலைப்படு மென்பார் தானே காணுமெனவும் சாற்றினர்.

போகம்பொருந்துதல்—பைசந்திவாக்குஅனுபவமாதல்.

அதீதம் எண்ணவிலாது ஒன்று எனவும் கண்ணுறும் சாக்கிரத்தில் அஞ்சாறுய கருவிகள்தானே காணும் எனவும் கொண்டு கூட்டுக.

அதீதமென்புழிக் கண்ணுருபு தொக்கி நின்றது. இலாதது என்பது இலாது என மரீஇயிற்று. எண்ணவிலாதது

எனவே தோற்ற முறைபற்றித் தத்துவங்களுள் ஒன்றாக வைத்தெண்ணற்பாலதல்லாததாய் ஒன்றெனவே தொழின் முறையின்வைத்து எண்ணற்பாலதுமாயுள்ள புருஷதத்துவமென்பதாயிற்று; ஆயினும் அஃது வாய்பாடுபற்றி ஆன்மா பஞ்சகஞ்சுகமாத்திரையேயுடையனும் இச்சாஞானக்கிரியைகளை ஏகதேசத்தின் மருவியதனுலாய பொதுவியல்போடு அதீதத்திற்சென்றடங்கிக்கிடத்தன்மேற்றேயாம்.

ஏற்புழிக்கோடலாற் பின்னென்றது பிராணவாயுவின் பிற்பட்ட அபானுதிவாயுக்கள் ஒன்பதின்மேலும், அஞ்செ ன்றது பஞ்சபூதங்கண்மேலும் ஆம். ஆறு—வழித்து. ஆகாயாதிகள் சப்தாதிகளைக் காட்டிநின்றலன்றி அவ்விஷயங்களைக் கவரும்படி ஞானேந்திரியங்களினும் அக்கவர்ச்சி பற்றி வசனுதிகள் நிகழும்படி கன்மேந்திரியங்களினும் ஆன்மா மனம்வாயிலாகப் பிரவேசியாவாகலின் அவ்விந்திரியங்கள் பஞ்சபூதங்களின் வழித்தாய்த்தொழிற்படுமென்பதாயிற்று. தானேகாணுமென்றது அவவ்ஸ்தைக்கு நிற்குங் கருவிகடோறுஞ் சென்றியையும்.

பஞ்சாவவ்ஸ்தைகளுள் ஒன்றாகிய ஜாக்கிரத்தில் தத்துவ தாத்துவிகங்களாகிய தொண்ணூற்றாறு கருவிகளுந்தொழிற்படுவனவாக அவற்றுள் முப்பத்தைந்து கருவிகண்மாத்திரையே அவவ்ஸ்தைக்கு நிற்குங்கருவிகளா மொழிந்ததென்னையோவெனில் சிவதத்துவமைந்தும் ஆன்மாவைப் பிரிவதும் புணர்வதுமின்றி யாண்டும் ஒரு பெற்றித்தாய் நிற்கும் பிரேரகக்கருவிகளாகலானும் புருஷதத்துவமெனவே ஏனைக்கலைமுதலிய ஆறும் தானே போதருதலானும் பூதங்களைந்தும் அவவ்ஸ்தைகளான் ஆன்மாவிற் கனுபவமாகும் வண்ணம் தன்மாத்திரையின் காரியசொரூபமாகிய பஞ்சவிஷயங்களைக்காட்டி நிற்பனவேயன்றி போக்குவரவுடைத் தன்றாகலானும் புகலவேண்டுவனவன்று. வசனம் கமனம் தானம் விஸர்க்கம் ஆனந்தமுற்றதொழில் என்னுந் தாத்துவிகங்கள்பற்றியும் ஆன்மாவிற்கு இன்பத்துன்பங்கள்

வருதலானும் அபானாதிவாயுக்கள் தனித்தனியே வெவ்வேறு தொழில்களைத்தலைப்படலானும் பிராணவாயுவை யின்றி தத்துவதாத்துவிகங்கள் தொழிற்படுவனவன்றாக லானும் அவை கிளந்துரைக்கப்படுவனவாயிற்று. ஏனைய தாத்துவிகங்க ளனைத்தும் அவஸ்தைகளினிகழ்ச்சிபற்றி நிகழ்வனவாகலான் அவற்றை நிகழ்த்தவேண்டுவதின் றென்க.

ஞானேந்திரிய கன்மேந்திரியங்களின் தொழிற்பாடுங் கூடியவழி ஜாக்கிராவஸ்தையாகுமேல் அனுபவத்தால் ஜாக்கிரத்தோடு வேற்றுமை தோன்றாத சொப்பனாவஸ் தையில் அக்கருவிகளையின்றிச் சப்தாதிவசனாதிகள் நிகழு மாறெங்ஙனமெனிற் சொப்பனாவஸ்தைக்கு நிற்குங் கருவி களுள் மனம் புத்தியகங்காரங்களும் பஞ்சதன்மாத்திரைக ளுங் கூடியதாகிய புரியஷ்டக சரீரத்தில் அவ்வவஸ்தானு பவத்திற்குரியதாய்த்தோன்றும்ஸ்தூலசரீரத்தின்கண்ணே யுள்ள ஞானேந்திரிய கன்மேந்திரியங்களானே நிகழ்வன வாம். இக்கருத்துப் பொதுவதிகாரத்துப் புலப்படுத்திய தேயாயினும் உசிதம்பற்றி ஈண்டும் உணர்த்தலாயிற்று.

அத்தகைய ஞானேந்திரிய கன்மேந்திரியங்களால் அண் டபிண்டங்களினிகழ்ச்சி எனைவயும் ஜாக்கிரத்துப்போல உள் ளவாறே அனுபவமாகாமையானும், அவ்வுழி ஜாக்கிராவஸ் தைக்குரிய ஸ்தூலசரீரம் தொழிலின்றிக்கிடத்தலானும், ஈரிடத்தும் ஞானேந்திரிய கன்மேந்திரியங்களைக்கொள்ளுங் கால் அவஸ்தாபேதம் அறிதற்கிடமாகாமையானும், ஞா னேந்திரிய கன்மேந்திரியங்கள் ஜாக்கிராவஸ்தை மாத்தி ரைக்கே நிற்பதெனக் கூட்டுப.

சுழுத்தியவஸ்தைக்கு நிற்குமூலப்பிரகிருதியே சொப்ப னாவஸ்தையில் புத்திமுதலிய தத்துவங்கள் தொழிற்படு மாறு குணதத்துவமாய் வியக்தமாவதாகலின் அவ்வவஸ் தைக்கு வியனுய கருவிகள் இருபத்திரண்டேயாம்.

மாயாகாரியமாகிய விஷயங்களைச் சுட்டியுணர்தலாற் கன்மமும், அவ்வாறுணர்தற்குவாயிலா நிற்றலாற் கருவிகளாகிய மாயேயமும், அவ்வுணர்ச்சியாற் பெறப்படும் விஷயபோகங்கள் எண்ணிறந்த துன்பத்திற்கேதுவாய்த்தோன்றி நின்றழிவவெனவறியாது இன்பமென மயங்குதலான் மாயையும், அத்தகைய வியாபாரங்கட்குக் காரணமாகயானெனநிற்றலான் அறியாமையாகிய ஆணவமும், அவற்றை எனதெனப் பற்றுதலாற்றிரோதமும் ஆகிய பஞ்சமலங்களெனப்படும் பாசத்தினுண்மை இவ்வவஸ்தாரூபமாதலறிக. (கO)

---

இனி சிவத்தின துண்மையை
அருளிச் செய்கின்றார்.

**இவ்வகை யவத்தைதன்னி லெய்திடுங் கரணமெல்லா, மெய்வகை யிடத்திலுற்று மேவுமாகண்டிமிக்க, பொய்வகைப் பவமகற்றப் புரிந்திடலருளாலாங்கே, யைவகை யவத்தையுய்க்கு மறிவினுலறிந்துகொள்ளே.**

(இ—ள்.) சிவமாவது மேலைச்செய்யுளிற் கூறிப்போந்த பஞ்சாவஸ்தைகட்குடனாய் நிற்குங் கருவிகண் முறையே காரணம் கஞ்சுகம் குணம் சூக்குமம் ஸ்தூலமெனப்படும் பஞ்சசரீரங்களைப்பொருந்திமூலாதாரம் நாபி இதயம் கண்டம் லலாடமென்னும் ஸ்தானங்களினின்று தொழிற்படுதலைக்கூர்ந்துணர்ந்து ஆன்மா அவற்றிற்கு வேறென்பதையனுபவமாகக்கண்டு சிவானுபூதியினழுந்துவார்க்குவெறும் பொய்யாய் முடிவதும் அவ்வனுபூதியைத் தருவதாகிய அனுபவப்பேற்றின் முன்னர்த்தாய் மலபரிபாகமுற்றுழி ஆற்றவொண்ணாத வுபாதியைத்தருவதுமாய் நிகழும் அண்டபிண்டாகாரமாகிய பஞ்சவிஷயங்களின் தோற்றரவையொழிக்கும்பொருட்டு ஸாதகஞ் செய்யப்புகின் நேர்படும் ஜாக்கிரமுதற்றுரியாதீதமீறாகிய ஐந்து ாத்தாவஸ்தைக

ளானவை திருவருள்வாயிலாக அடைவே விளக்கமிகும்படி ஸ்வானுபவமாகத்தருவதும் பக்குவிகள் ஆன்மஞானமாத் திரையானே பெறுவதுமாகிய இயல்பினையுடையதாகும் ஆகலான் அவ்வாறனுபவமாகப்பெறின் மீட்டும் வாஸனை பற்றியுண்டாம் உபாதிகளானமூவாவண்ணம் அப்பேற்றை விடாது பயிலவேண்டுமென்பதாம்.

மெய்வகை யிடத்தில் மேவுமாஉற்றுக்கண்டெனவும் புரிந்திடிலாங்கே ஐவகையவத்தையருளா லுய்க்குமெனவும் கொண்டு கூட்டுக.

கரணமெல்லாமென்றது கருவிப்பொதுவின் மேற்று. வகையென்பவற்றுள் இரண்டாவதை இடத்தினுங்கூட்டி யுரைக்க. பவம்—தோற்றம். அகற்றற்கேது வருவிக்கப்பட்டது. நூலறிவான் மேம்பட்டு அனுபவவறிவின் வேட்கை வைத்தோரேயாயினும் விவகாரங்களையொழித்துச் சாதகஞ் செய்யப்புகுதன் மிகவும் அரிதாகலின் பொய்வகைப் பவமகற்றப்புரிந்திடில் என்றார். ஸாதகஞ்செய்தற்குரித்தாவது ஜாக்கிரமேயாகலின் ஆங்கே என்றது அவ்வவஸ்தை மேற்று. கொள்ளே என்றது விடாது பயிலவேண்டுமென்னும் பொருட்டு.

இவ்வகையவத்தையென்னுஞ்சுட்டு மேலைச் செய்யுளிற் கூறிப்போந்த கேவலஸகலமாகிய பஞ்சாவஸ்தைகளையும் மெய்வகையென்றது காரணமுதற்றூலமீறாகிய பஞ்சசரீரங்களையும் இடவகையென்றது மூலாதாரமுதல் லலாடமீறாகிய பஞ்சஸ்தானங்களையும், மிக்க பொய்வகையென்றது சுட்டறுத்துழிவெறும்பொய்யாய்முடிகின்ற பஞ்சவிஷயங்களையும் ஐவகையென்றது கேவலஸ்கலங்கட்கு வேறாகுஞ் சுத்த ஜாக்கிரமுதற் றுரியாதீத மீறாகிய பஞ்சாவஸ்தைகளையும் உணர்த்தும்.

அதீதத்திற் கஞ்சுகசரீரம் வியக்தமாகாமையான் அவ்வியக்தமாகிய மாயையின்மேல்வைத்து ஆண்டைக்குண்மையாவது காரண சரீரமென்ப.

சிவத்தினதியல்பு சுத்தாவஸ்தையை யடைந்தார்க் கன்றிப் பெறவொண்ணாமையும் பெறுவது பண்டைப் பரிசே யாயினும் பாசநீக்கத்திற் புதிதுபோலத் தோன்றுதலும் பற்றி உய்க்குமெனவும், பால் தேன் சீனி கற்கண்டுமுதலிய மதுரபதார்த்தங்கள் ஒன்றாக்கலந்துழி அதன்சுவையின்னதெனப் பகுத்துணரவொண்ணாததாய்பருகுவோனைத் தன்மயமாகச்செய்வதாய் நிகழ்தலையொப்ப எண்குணச்செல்வமெனப்படும் இறைவனதிலக்கணங்க ளனைத்தும் ஒருங்கே திரண்டு ஸ்வாநுபவமாகத்தலையளிசெய்வதாகலின் அஃது இத்தன்மைத்தென மனவாக்குக்களால் அறிதற்கமையாதெனக் குறிப்பானுணர்த்துவார் அறிவினு லறியெனவும் அருளினார்.

உய்த்தற்குச் செயப்படு பொருள் நிறுத்த முறையாற் போந்தது. (கக)

---

இனி உணர்த்துந் தன்மையை
அருளிச் செய்கின்றார்.

**நீக்கமி லதீதமாகு நிறைந்தகே வலமா நீர்மை,**
**சாக்கிரங் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மையாகு,**
**நீக்கமி லிரண்டுங்கூடா தொழிய வோர் நிலையினீடுஞ், சாக்கிர வதீதஞ் சுத்தத் தகைமைய தாகுந் தானே.**

(இ—ள்.) திருவருள் வாயிலாகச் சிவானுபவத்தைத் தரத்தக்க சுத்தாவஸ்தையி னியல்பாவதியாதெனின் ஸாதக நெறியில் நாதவசப்படுதல் ஸகலமும் அஃதொடுங்கிய வழியே அறிவுஞ் சென்றொடுங்கி அறியாமையான் வியாபிக்கப்படுதல் கேவலமுமாகலான் மாறிமாறி வருகின்ற அவ்விர வஸ்தைகளும் வாராதொழியும்படி ஆன்மா அறிவாகாரமாய் நிற்ப அவ்வான்மாவை அடைவே பெருகி வருகின்ற இன்பாகாரமாகச் செய்யும் ஜாக்கிராதீதமே பூரண சுத்தாவஸ்தை யாவதென்பதாம்.

கலாதி சேர்ந்த சாக்கிரஞ் சகலமாந் தன்மையாகும்
நிறைந்தமாசுநீக்கமிலதீதங் கேவலமாநீர்மையெனக்கொண்டு
கூட்டுக.

மாசு—ஈண்டு அறியாமைமேற்று. ஓர் என்றது அறிவின் மேற்றாய் நின்ற முதனிலைப் பெயர். நிலை—ததும்பாது நிற்றல். நீடுமென்பது பெருகுவதென்னும் பொருட்டாய்ச் சுத்தாவஸ்தையில் அடைவே ஜாக்கிரமுதலிய நான்கினும், வியாபித்தலென்னும் பொருட்டாய் அதீதத்தும் இவையும். நீடும்பொருள் அவாய்நிலையாற் பெற்றாம். தகைமையென்றது ஈண்டுப் பூரணத்தின் மேற்று.

கலாதி சேர்ந்தாலன்றி ஜாக்கிரமும் ஸகலமென்னும் பெயரும் இல்லையாகக் கலாதி சேர்ந்த சாக்கிரஞ் சகலமாந் தன்மையா மென்றதனானே கலாதி யென்றது சுத்த ஜாக்கிரத்துந் தொழிற்படுவனவாய் முன்னர்க் கூறப்படும் பதினொரு தத்துவங்கண் மேற்றாம். சுட்டப்படும் பொருள் ஆதீதத்தின் மறைந்துழியாயினும் அறியாமை நீங்கும்படி சுட்டறிவில்லாது அப்பொருளைக் காண்கிலேமென மயங்குதற்குக் காரணம் சுட்டறி வுதித்தற்கு முன்புள்ள அறியாமையே யாகலான் நிறைந்த மாசு நீக்கமிலதீதமென்றார்.

பெத்ததிசையிற் கண்டறிந்த வாஸனைபற்றி ஸாதக திசையாகிய சுத்தாவஸ்தையி னிகழுஞ் சொப்பனத்திற் றோன்றும் விஷயங்களின் பின்னே அறிவுஞ்சென்று சுழுத்தியி னொடுங்கி ஆன்மா அறியாமையான் வியாபிக்கப்பட்டு அதீதத்திற் சென்று கிடத்தலும் உண்மையின் அதனையுந் தழுவற்பொருட்டுக் கேவலாவஸ்தையி னியல்பை முன் வைத்தார்.

மேலைச்செய்யுளில் ஐவகையவத்தை யுய்க்குமென விளம்பியவாற்றானும் ஈண்டு ஓர் நிலையி னீடுஞ் சாக்கிர வதீதஞ் சுத்தத் தகைமையென முடிவை மொழிந்தமையானும் துரிய முதலிய ஏனைய நான்கவஸ்தைகளும் ஸோபானங்களாகக் கொள்ளப் படுவனவாம். (௧௨.)

மருவிய பொறியி லொன்று மாபூத மைந்தி லொன்றுங், கருவிக ளொன்கு நீங்காக் கலாதிக ளைந்துங் கூடி, யொருபுல னுகருமிந்த வொழுங் கொழிந் துயிரு மொன்றைத், தெரிவுற தவினொ ழிந்தத் திரள்களுஞ் செயலிலாவே.

(இ—ள்) உத்தரவாதுளமுதலிய சிவாகமங்களின் விதித்தவாறேசெய்யத் தொடங்கிய ஸாதகநெறியாகிய சுத்தாவஸ்தைக் கண்ணும் விஷயங்கள் தோற்றுவானேனெனின் ஆன்மாவுந் தத்துவங்களுங் கூடித் தொழில்புரிவதனாற் றோற்றுவ வென்பதாம்.

ஆன்மா பஞ்சவிஷயங்களையு நுகர்வ துண்மையாயினும் ஒவ்வொன்றையன்றி நுகரமாட்டாவாகலான் மருவியபொறியிலொன்று மெனவும் அதற்கியைய ஒவ்வொரு விஷய மாத்திரையே காட்டி நிற்கு மாகலான் மாபூத மைந்திலொன்று மெனவும் வழங்கினார்.

மருவிய பொறி—தன் மாத்திரையாற் றழுவப்பட்ட ஞானேந்திரியம். மாபூதமைந்து—தன் மாத்திரைகளாகிய சூக்கும பூதங்களை நோக்க ஸ்தூலமாகிய ஆகாயமுதலிய பூதங்கள். கருவிக ளொன்கு—மனம் புத்தி யகங்காரங்களோடு சித்தமெனப்படும் பிரகிருதி தத்துவமுங் கூடியது. வியக்தமாகிய குண தத்துவமுதலிய நான்கெனலுமாம். அதீதத்தும் ஆன்மாவோ டெனிற்றலின் நீங்காக் கலாதிகளெனப்பட்டன. உயிருமென்றது கலாதிகளைந்து மென்றதனோடுஞ் சென்றியையும்.

தத்துவங்களையின்றி விஷயங்களைக்கவரமாட்டாத ஆன்மாவினது இழிவுடைமைதோன்ற உயிரென அஃறிணையாகவும் அத்தத்துவங்களும் ஆன்மாவையின்றி விஷயங்களை நுகர மாட்டாமையான் ஆன்மாவினது சிறப்புடைமை தோன்ற அவனென உயர்திணையாகவும் அருளினார். (கரு)

தனக்கென வறிவிலாதான் றனிவை யறிந்து சாரான், றனக்கறி விலாதவாயி றனறி யாது சாரா, தனக்கென வறிவிலாதான் றத்துவ வன் னருபன், றனக்கென வறிவாலுலிச் சகலமு நுக ருந்தானே.

(இ—ள்.) ஆன்மாவுந் தத்துவங்களுங் கூடி அளவிற ந்த காலம் விஷயங்களைக் கவர்ந்தனுைய துன்பச் சுழற்சி யினின்று நீங்கத்தக்கதாகப்பயிலப்புகுந்தசுத்தாவஸ்தைக் கண்ணேமறதியினுன் மீட்டும் விஷயங்களைக் கவரும்படி ஆன்மாதத்துவங்களைச் சென்று கூடியதோ அன்றித் தத் துவங்களே ஆன்மாவைச் சென்றணைந்தவோ வெனின் ஆன்மா அறிவித்தாலன்றி யறிவதன்மையாலும் தத்துவங் கள் அறிவிக்கினும் அறிவனவன்மையாலும் ஒன்றனையொன் றறிந்து கூடுவதன்றாகலாற் பெத்ததிசைக்கண்ணே ஸகலா வஸ்தையால் வினைப்பயனாகிய விஷயங்களை நுகர்வித்த இறைவனே ஸாதக திசையாகிய சுத்தாவஸ்தைக்கண் ணும் ஸகலாவஸ்தையான் வினைப்பயனாகிய விஷயங்களை நுகருமாறு படிகத்தையொத்த ஆன்மாவையும் பஞ்ச வன் னங்களையொத்த தத்துவங்களையுங் கூட்டிக் காரியப்படுத் துவனென்பதாம்.

இவையென்றதும் வாயிலென்றதும் மேலைச் செய்யுளிற் கூறிப் போந்த மருவிய பொறி முதலியவற்றின் மேற்று. வன்ன தத்துவ ரூபனென மாறுக. வன்னதத்துவம்—உவ மத் தொகை. வன்னவுவமைக் கேற்பப் படிக வுவமை வருவிக்கப் பட்டது. ஸகல மெனப்படுந் தத்துவத்தொ ழில் விரிவு நுகர்பொருளாவ தன்மையான் இச்சகலாவஸ் தையானும் வினைப் பயனாகிய விஷயங்களை நுகருமென விரித்துரைக்க. தனக்கென வறிவாலுல் நுகரு மென்றமை யான் நுகருமாறு ஆன்மாவோடு தத்துவங்களைக் கூட்டு வோனும் அவனே யென்பதுதானே போதரும். தனக்கென

வென்றது—ஸ்வதந்திர மென்னும் பொருட்டு. தனக்கென அறிவிலாதான்—ஆன்மா. தனக்கென அறிவான்—இறைவன். இச் சகலமு மென்றது பெத்த ஸகல மாத்திரையே யன்றியென இறந்தது தழீஇயது.

முசுகுந்தன் அர்ச்சுனன் முதலாகிய நரேந்திரர் ஸுரலோகத்தை யடைந்து ஸுரேந்திரனு லுபகரிக்கப்பெற்ற போகம் ஸுரபோகமே யாயதை யொப்ப ஆன்மா சுத்தாவஸ்தையை யடைந்து இறைவனு லுபகரிக்கப் பெறும் ஸகலாவஸ்தையும் சுத்தாவஸ்தையேயாம்.

இஃது சொற்பொருட்பின் வருநிலை: (கச)

**கண்டறி புலன்கள்காணுங் கருத்தினு லொருத்தன்ஞானங், கொண்டுள மறியுமென்னிற் கொள்பவன் முதலியாகு, மண்டிய வுணர்வுயிர்க்கா மன்னிநின் றறியுமென்னி, லுண்டிட வேண்டுவானுக் கொருவன்வே றுண்டலாமே.**

(இ—ள்.) இறைவன் ஆன்மாவோடு தத்துவங்களைக் கூட்டினும் கூடிய வழி முன்கண்டறிந்த விஷயங்களையே கண்டுதுன்புறுவதொருதலையாமென்றெண்ணி அஞ்சுவதாகலானும் இச்சகலாவஸ்தானுபவம் பெத்ததினைசக்கண்ணதாகிய ஸகலாவஸ்தானுபவத்தோடு வேற்றுமைப்படுதலானும் ஆன்மா ஆண்டு அனுபவமாய்வருந் திருவருளை வாயிலாக்கொண்டு விஷயங்களை யறிந் தனுபவிக்குமெனில் திருவருள் விஷயக்காட்சிக்கு வாயிலாக நிற்கில் தத்துவங்களோ டொருங்குவைத் தெண்ணப்படுதலும் அதுபற்றி ஆன்மாவைச் சிவமெனக் கொள்ளலும் வேண்டுமன்றே ஆகலான் அஃதடாது. சுத்தாவஸ்தையில் ஆன்மா திருவருளைப் பிரிய வறியா வாகலானும் பிராரப்தம் அனுபவித்துத் தீரவேண்டி யிருத்தலானும் ஆன்மாவின்பொருட்டுத் திருவருளே தத்துவங்களைக் கூடி நின்று விஷயங்களைக் கவருமெனின் ஆன்மா அனுபவித்துத் தீர்க்கவேண்

டிய பிராரப்தத்தைத் திருவருள் அனுபவித்துத் தீர்க்கு மென்பது ஒருவன் பசி தீர்தற்பொருட்டு மற்றொருவனுண்டலை யொக்கும் ஆகலான் அஃதும் ஒவ்வா தென்பதாம்.

ஆகலான் அஃதடா தென்பதும் ஒவ்வா தென்பதும் குறிப்பெச்சங்கள்.

கருத்து—ஊகத்தின்மேற்று. ஒருத்தன் ஞானம்—ஒப்பற்ற சிவனது ஞானமென்னும்பொருட்டாய்த் திருவருளை யுணர்த்தும். ஆன்மா பிராரப்தானுபவங் காரணமாகச் சுத்தாவஸ்தையிற் றத்துவங்களைக் கூடாவென்னும் வாதிகள் கூற்றுக்கியைய உளம் உயிர் என அஃறிணையாகவும் விஷயங்கடோற்றுமேல் தத்துவங்களைக்கூடிப் புருஷனுதல் ஒருதலை யென்னு மறுப்பிற்கியையக் கொள்பவன் உண்டிட வேண்டுவானென உயர்திணையாகவும் ஓதினர். ஆகுமென்றது எதிர்மறைப் பொருள்பட வந்த குறிப்பு மொழி.

மண்டியவுணர்வென்றதனுள் மண்டியவென்பது உள்ளே மிகுத்து விம்மியதென்னும் பொருட்டாய்த் திருப்தியின் மேற்றாகி யுணர்வென்பதனோ டிணைந்து வரம்பிலின்பத்து வாழ்க்கையான் நித்திய திருப்தியையுடைய திருவருளெனப் பொருடரும் ஆகலாற் றிருவருள் விஷயவின்பங்களைக் கவரும் வேட்கை யுடையதன் றென்பதாயிற்று.

இறைவன்தத்துவங்களைக்கூட்டிய மாத்திரையே ஆன்மா பிராரப்தத்தின் வழியே அனுபவித்தாலன்றி அடங்காத விஷய விச்சையுடையனுவ னென்பார் உண்டிட வேண்டுவானுக் கெனவும் ஆன்மாவின் பொருட்டுத் திருவருள் அனுபவிக்கினும் ஆன்மாவினது தாபம் நீங்குவ தன்றென்பார் வேறொருவனுண்டலா மெனவும் உவமித்தார். (கரு)

**இருணனி யிரவிதான் வந்திரித்தலு மிரவிலெண்ணும், பொருணிலை கண்டுமாந்தர் பொருந்திடு மாறுபோல, மருணிலை யெங்குநீங்க மகிழ்ந்துயிர்**

தன்னுண்மன்னு, மருளையு மொழியஞாலத் தறிந்
தவா றறியுமன்றே.

(இ—ள்.) அவ்வாறு சுத்தாவஸ்தைகளினும் ஸகலம்
வாயிலாக வினைப்பயன்களை நுகர்கின்றஆன்மாசிவானுபவத்
தைப்பெறுவதெங்ஙனமெனின் அந்நுகர்ச்சிக்கண்ணும்திரு
வருளையே விழைந்துநிற்கில் ஸகலங்களோடு கேவலங்களு
மாய் நின்று மயக்கும் அறியாமையாகிய விருளானது பூத
விருளை யழித்தெழுந்து தனது முதலாகிய ஞாயிற்றினோடு
புறப்பொருட்களையுங் காட்டுகின்ற கிரணத்தை யொப்ப
ஆன்மாவினதுள்ளத்தே அனன்னியமாக விளங்கித்தோன்
றும் சிவாதித்திய கிரணமாகிய திருவருளானீங்கக் கவலையி
னீங்கிச் சுத்தத்திற் சுத்தாவஸ்தையின் அடைவே பெரு
குவதாகிய சிவானுபவத்தை ஆண்டாண்டுப் பெற்று மகிழ்
தலும் பிராரப்தத்தாற் பகிர்முகப் பட்டுழி அவ்வான்மா
தனதுள்ளத்தே நிலைபெற்றிருக்கின்ற திருவருளைத் தரிசித்
தன்மாத்திரையே யன்றி அவ்வருளானே தன்னையும் உலக
மாகிய புவனசராசரங்க ளனைத்தையும் காலநியதிகளையும்
சுட்டாதுசுட்டி ஒருங்கே யுணர்வதாகிய வியாபகவறிவைத்
தலைப்படுதலுஞ் செய்யு மென்பதாம்.

நனியிருளெனமாறுக. நனி—மிகுதி. இரவிலெண்ணல்—
பூதவிருட்கண்ணே பொருளை யறியாது கவலைப் படுதல்.
ஞாலத்து என்புழி ஐயுருபு தொக்கிநின்றது. உம்மை விரித்
துரைக்க. கால நியதிகள் ஞாலத்தைப் பிரிந்து கூடுவன
வன்மையின் அவற்றையும் உடனுணருமென்பது. அறிந்த
வாறறிதல்—பெத்த திசையைப்போல விட்டு விட்டன்றி
ஒருங்கே யறிதல். தன்னுண் மன்னுமருளையும் ஞாலத்தை
யும் அறியு முயிர் அவ்விரண்டற்கும் இடையே தனித்து
நிற்றலாற் றன்னையும் அறியுமென்பது தானேபோதரும்.

மாறிமாறிச் செல்லலும் மீடலுமாகிய பூதவிருள்போலாது
தொன்று தொட்டு நீக்கமின்றிநின்று மயக்குவதாகிய

ஆணவ விருளென்பார் மருணிலை எனவும், பூதவிருளை மலை முழை நிலவறை முதலியவற்றை விட்டகற்றற்கேலாத ஞாயிற்றினொளிபோலாது ஆணவ விருளை சுத்த ஜாக்கிர முதற்றுரியாதீதமீறாகிய அவஸ்தைகளை விட்டகற்றற்கு வல்லதென்பார் எங்கு நீங்கவெனவும், பூதவிருளான் மறைந்த பொருளைக்கண்டுகூடலினிகழ்வபோலாது ஆணவ விருளான் மறைந்த சிவானுபவத்தைக் கண்டு கூடலிற் பேருவகையாமென்பார் மகிழ்ந்தெனவும், விழையாதோருங் காணும்படி புறம்பே வருதலும் செல்லுதலுமாகிய ஞாயிற்றி னொளிபோலாது விழைந்தோர துளளத்தின் கண்ணே வுதோதயமாக விளங்கும் சிவாதித்திய கிரணமென்பார் உயிர் தன்னுண் மன்னும் அருளெனவும், அங்ஙனம்வருதலும் செல்லுதலும்பற்றி மேருவினதுநாற்றிசைப் பொருளையும் யாண்டுங் காட்டற் கேலாத ஞாயிற்றினொளி போலாது எவற்றையும் யாண்டும் ஒருங்கே காட்டவல்ல வெழிலுடைத்தென்பார் ஞாலத்தறிந்தவா றறியு மெனவு நவின்றருளினார்.

நீங்க மகிழ்ந்து மன்னும் அறியும் எனப் பயன்மேல் வைத்து அருளின துபகாரத்தை அருளிச்செய்தார்.

உயிர் தன்னுண்மன்னு மருளையு மொழியஞாலத் தறிந்தவாறறியுமென்றது அப்பொருட்டாதல் "அடிஞானமான் மாவிற் றேன்றுந் தோன்றத் தாரியனுஞ் சிவன்றேன்றுந் தானுந் தோன்றுந் தொல்லுலக மெல்லாந் தன்னுள்ளே தோன்று நேரியனுய்ப் பரியனுமா யுயிர்க்குயிரா யெங்கு நின்ற நிலையெல்லாமுன்னிகழ்ந்துதோன்றும்" என்றருளிய வழி நூலாற்காண்க. (கசு)

அறிந்திடுமனுதிவாயி லானவை யவன்றனுலே,
யறிந்திடுமென் றுமொன்று மறிந்திடாவவைபோ
லியாவு, மறிந்திடு மறியுந் தன்மை யறிந்திடா
கன்மத் தொன்மை, யறிந்தவை நுகருமாறு மரு
ளுவ னமலன் றனே.

(இ—ள்.) அங்ஙனந் திரிபதார்த்தங்களையும் சுட்டாது சுட்டி ஒருங்கே யுணர்வதாகிய வியாபக வறிவைப் பெற்ற ஆன்மா அறியாமையானேர்படுவதாகிய விஷயவின்பத்துன் பங்களான் மெலியுமா றென்னையோ வெனின் வியாபகவறி வைப்பெற்றுழி அப்பேறும் இறைவனை யின்றி யமைவதன் றெனக் கண்டு சுட்டாது சுட்டலை யொழிந்து உட்புறம் பென்னும் வேற்றுமையற அவனது திருவடிக்கீழ் வியாப்தி யாகிப் பகிர்முகத்துஞ் சுத்த ஜாக்கிராதீத நிலையைப் பெற வேண்டுமெனக்கருதாது சுட்டாதுசுட்டியறியும் அவ்வறிவி னழுந்த வழுந்த அஃது அடைவே தடிப்பெய்திச் சுட் டறிவாகி நிகழுமாகலாற் பிராரப்தத்தா னெடுத்த உடம் புள்ளளவும் ஒழியாது வருகின்ற விஷயவின்பத் துன்பங்க ளையும் ஆன்மா சுட்டி யறிந்தனுபவிக்கும்படி இறைவனே கருவிகளைச் | சேட்டிப்பித் தருள்வதனுலெனக் காண்க வென்பதாம்.

ஆகலானென்பது சொல்லெச்சம்.

அறியுந் தன்மை யறிந்திடா வென்பது உவமையினும், என்றும் ஒன்று மறிந்திடா வென்பது பொருளினுஞ்சென் றியையும்.

என்றும்அவனையின்றி ஒன்றும்அறிந்திடாவென வுவமை யினும் அதற்கியையப் பொருளினும் விரித்துரைக்க.

அவனென்றது ஆன்மாவிற்குக் குறிப்பாகு பெயர். யாவும்—திரிபதார்த்தங்களும். நுகருமாறு மென்னும் உம்மை யாவும்அறிந்திடு மறிவையருளிய அமலனே கன்மத் தொன்மை நுகருமாறு கருவிகளைச் சேட்டிப்பித்தலும் செய்வனென்பதை யுணர்த்தும்.

அமலனென்றது ஆன்மாவிற்குக்காட்டிக் காணுமுபகார முடையோனுகியும் நிருபாதிகனென்னும் பொருட்டு.

இவ்வாறு செய்யுட்களுந் தீவிரதர பக்குவிகட் குணர்த் தியவாறு. (கஎ)

காட்டிடுங் கரணமொன்று மில்லையேற் காணொ ணாதா, நாட்டிய விவற்றான்ஞான நணுகவு மொண்ணாமுன்ன, மீட்டிய தவத்தினாலே யிறை யரு ளுருவாய்வந்து, கூட்டிடு மிவற்றை நீக்கிக் குரைகழல் குறுகுமாறே.

(இ—ள்.) கருவிகளைக் கூடிய வழியன்றிப் பொருளை யறியமாட்டாத ஆன்மா கருவிகளின் கூட்டுறவின்றிய சுத் தாவஸ்தையிற் சிவானுபவத்தைப் பெறுதல் யாங்ஙனங் கூடுமெனின் எப்பொருளையாயினும் ஸ்வானுபவமாகப் பெறுதற்கின்றி யமையாச் சிறப்பிற்றாய் வேண்டப் படுவன வாகிய ஆன்மாவினது இச்சாஞானக் கிரியைகளை விளக்கற் குரிய கலைவித்தை அராகங்களு மில்லா தொழியிற் கேவலம் வந்து தலைக்கூடுமாகலாற் சிவானுபவத்தை ஸ்வானுபவமா கப் பெறுத லமையா. அத்தகைய கலைவித்தைஅராகங்கள் ஆன்மாவிற்கு விஷயானுபவமாகும்படி அந்தக்கரணாதிகளை முனைப்பித்து நிற்குமேல் அது ஸகலாவஸ்தை யாகலின் முனைப்பித்தஅக்கலாதிகளின் கூட்டுறவாற்சிவானுபவத்தை ஸ்வானுபவமாகப் பெறுவிக்கத்தக்கவாய்மை ஞானமாகிய திருவருளோ டத்துவிதமாகவு மமையா. இவ்விரண்டினும் வேறாகிய சுத்தாவஸ்தையாவது கலைவித்தைஅராகங்கள் இச்சாஞானக்கிரியைகளை விளக்கி நிற்றன் மாத்திரையாய் நிகழ்வனவாகும். ஆகலான் அத்திறத்த சுத்தாவஸ்தையை யடைவார்க்குச் சிவானுபவம் ஸ்வானுபவமாதற் கைய மின்று. அற்றேல் கலைவித்தைஅராகங்கள் நிகழ்ந்த வழி எல்லாக் கருவிகளு நிகழ்ந்து ஸகலமாதலும் கலைவித்தை அராகங்கள் அகன்றவழி எல்லாக் கருவிகளும் அகன்று கேவலமாதலும் இடைவிடாது மாறிமாறி வருவ துண்மை யால் தேவரீரருளிச்செய்த சுத்தாவஸ்தையை எவ்வாற்றா னடைவதெனின் முற்பிறவிகளிற்செய்த நிஷ்காமியச்சரியை கிரியா யோகத் தவப்பய னுடையார்க்கு அதுகாறும் அவ ரதுள்ளத்தே ஒளித்திருந் துணர்த்திவரும் இறைவனே

ஆசாரிய வடிவமாகவும் வெளிப்பட் டெழுந்தருளி வந்து கைதயால் அச்சகல கேவலங்களை யொழித்துத் தனது திருவடியாகிய வாய்மை ஞானத்தைக் கூடுதற்குரிய சுத்தா வஸ்தையை யடைவிக்கு மென்பதாம்.

இவற்றை நீக்கிக் குரைகழல் குறுகுமாறு கூட்டிடுமென வினையும்.

காட்டிடுங் கரணமொன்று மில்லையேற் காணொணாதா மென்றமையான் ஆன்மாவின திச்சாஞானக் கிரியைகளை விளக்கி நிற்குங் கலைவித்தைஅராகங்கள் இன்றியமையாச் சிறப்பிற்றாய் வேண்டப்படுவன வென்பதாயிற்று; ஆதல் நீங்காக் கலாதிகளொன்றுமென்றமையானே இனிது விளங் கும். கலையானன்றிக் காலநியதிகள் பயன்படுவனவன் றாதலை நோக்கிக் கலையை முன்வைத்தாராயினும் கலைதோற் றுகைக்குக் காலநியதிகள் காரணங்களாகலின் கலையைக் கூறு மிடமெங்கணும் காலநியதிகளையுட னிகழ்வனவாக் கொள்க. நாட்டுதற்குச் செயப்படு பொருள் வருவிக்கப் பட்டது. நாட்டுதல்—முளைப்பித்தல். நாட்டிய விவற்றென் றது கலைவித்தைஅராகங்கண் மேற்று. முன்ன மீட்டிய தவம் அப்பொருட்டாதல் "யோகியர்க்கே ஞான மொழுங் காம் பேரன்பானதாகியரு முன்யோகஞ் சார்ந்தோர்" என் றருளிய ஆன்றோர் வாக்கியத்தானுங் காண்க.

பொதுவதிகாரத்தாற் புகன்றவற்றுள் திரிபதார்த்தங்கட் கும் உண்மைசாதித்தவாறே அவ்வுண்மைகளை ஸ்வானு பவமாகும்வண்ணம் அருளவல்ல ஆசாரிய வடிவத்திற்கும் ஈண்டுண்மை சாதிப்பார் இறை யருளுருவாய்வந்தென் றார். அருளுருவாதல் இறைவன் ஆசாரியவடிவமாக்கொள் ளப்பட்ட மூர்த்தியாகிய அடியவரதுயிருமுடம்பும் அரு ளிற்கரைந்து அவ்வருளாகாரமாய்நிலவுதலாற்சானுமென்க. நீக்குதற்குக் கருவி அவாய்நிலையாற் பெற்றும். குரை கழல்—பாசவெற்றிகொள்ளச்செய்யுந் திருவடிக்கு ஆகு

பெயராய்த்திருவருளையுணர்த்தும். ஆறு—சண்டேச்சுத்தா வஸ்தையின் மேற்று. (கஅ)

---

இனி உணர்த்துந்தன்மையுள் ஞானவாய்மையை அருளிச் செய்கின்றார்.

**பன்னிறங் கவருந்தொன்மைப் படிகநீடொளி யும்பன்மை, மன்னிலங்கியல்புந் தந்தவளரொளி போல வையந், தன்னகம் பயிலுநற் சிற்சடங்க டன்றன்மை தாவா, நன்னலம் பெறநிறைந்த ஞானமே ஞானமென்பார்.**

(இ—ள்) திருவடி ஞானத்தினதுண்மையை உணர்ந்தாலன்றி அதனைப் பெற்றேமென்றுதல் பெற்றிலமென்றுதல் தெளியவொண்ணாதாகலான் தனது ஞானமாத்திரையானே ஒருபொருளையாயினும்அறிந்தநுபவிக்கமாட்டாத ஆன்மாவிற்கு எப்பொருளை அறிந்தநுபவிக்கும்படி உபகரித்து நிற்பது திருவடி ஞானத்தினதுண்மையாகுமெனின் தன்னாற் கவரப்படுகின்ற பஞ்சவன்னங்களினாகாரமாய் நிற்றலினீங்கியஸ்படிகமானது பண்டைப்பரிசிற் சுத்தமாகிவிரிந்து விளங்குகின்ற ஒளியினையுடையதாதலையும் மீட்டும் பஞ்சவன்னாகாரமாயின் அத்தன்மையினையும் கண்ணொளிக்குக் காட்டுதன்மாத்திரையேயாய் ஸ்படிகவொளி பஞ்சவன்னவொளிகளாற் பிரகாச அப்பிரகாசங்களையுடையதாகாத கதிரொளியையொப்பத் தன்னாற் கவரப்படுகின்ற பஞ்சவிஷயாகாரமாய் நிற்றலினீங்கிய ஆன்மஞானமானது சுட்டறநின்று வியாபகவறிவாய் விளங்குந்தன்மையினையுடையதாதலையும் மீட்டும் பஞ்சவிஷயாகாரமாயின் அத்தன்மையினையும் ஆன்மாவிற்குக் காட்டுதன்மாத்திரையே யன்றி ஆன்மஞானவியாபக பஞ்சவிஷயவியாபகங்களால் அறிவறியாமைகளிற்றோயாததாகிஆன்மா ஞானயோகவிஷயபோகங்களான் இன்பத்துன்பங்களைப் பயப்பதாகிய அறிவறியாமைகளிற்றோயாது அவற்றிற்கு ஸாக்ஷிமாத்திரையாய்

யாண்டும் ஒரு பெற்றித்தாகிய நிரதிசயவின்பாகாரமாய் வாழும்வண்ணம் ஆன்மஞானத்தைத் தன்னோடத்துவித மாக்கொண்டு ஆன்மாவினதுள்ளத்தில் துரியநிலைக்கண்ணே பரிபூரணமாக நிறைந்திருக்கின்ற இலக்கணத்தையுடைய திருவருளாகிய ஞானமே உண்மையாகிய திருவடிஞான மென வ்வானுபூதிமான்கள் சொல்லுவ ரென்பதாம்.

பன்னிறங்கவரும் படிகத்தொன்மை நீடொளியெனக் கொண்டு கூட்டுக.

பன்னிறம் இரண்டாம்வேற்றுமைத்தொகை. நீடொளி வன்னக்கலப்பினீங்கி விரிந்துவிளங்குமொளி. மன்னிலென் றதனுன் மன்னுவதொருதலையன்றென்பதாயிற்று. வள ரொளி—மிக்கவொளியென்னும் பொருட்டாய் உச்சிப்பக லொளியையுணர்த்தும். வையம் விஷயாகாரமாகலின் விஷ யங்கட்கு ஆகுபெயராயிற்று. வையமென்புழி ஐயுருபுவிரித் துரைக்க. பயிலும்—பயிலச்செய்யும். நற்சித்துவையந் தன் னகம்பயிலச் செய்வதெனவே சடம் தன் மேற்பயிலச் செய்வதென்பதுதானே போதரும். விஷயபோகத்தினிக ழுஞ் சுட்டறிவை அதற்குக்காரணமாகிய அறியாமைமேல் வைத்துச்சடமெனவுபசரித்தார். நன்னலம்பெறுதற்கிடம் அவாய்நிலையாற் பெற்றும். நன்னலம்—மிக்க நலமென்னும் பொருட்டாய் நிரதிசயவின்பத்தின்மேற்றும். ஞானமே என்னுந் தேற்றேகாரம் ஆன்மா நிரதிசயவின்பத்தைப் பெறுதற்குமுன் ஆன்மஞானத்தை அத்துவிதமாக்கொ ண்டு நிற்பது அருளினது பூரணமெனப்படாமையை யுண ர்த்திற்று.

பஞ்சமைமுதலிய வாக்குக்களை உள்ளத்தேயடங்கி நிக ழச்செய்யு ஞானயோகமென்பார் வையந்தன்னகம் பயிலு நற்சித்தெனவும், அவ்வாக்குக்கண் முதலியவற்றை வெளி ப்பட நிகழச்செய்யும் விஷயபோகமென்பார் வையந்தன் மேற்பயிலுஞ் சடமெனவும், நிரதிசய வின்பாகாரமாயினு ரதுள்ளம் யாண்டும் பூரணஞானத்தானிறைந்திருத்தலிற்

பிராரப்தப்பயனும்வந்து கூடுமவற்றுள் ஞானயோகத்தாற் சுட்டொழிதலும் அதுபற்றிப் புதிதாக வின்பந்தோன்றுதலும் விஷயபோகத்தாற் சுட்டுதித்தலும் அதுபற்றித் துன்பந்தோன்றுதலு நிகழாவென்பார் நற்சிற்சடங்கடன் றன்மைதாவாவெனவு நவின்றருளினர்.

அற்றேல் அருளோ டத்துவிதமாய் நிற்கும் அவ்வான்ம ஞானத்தையன்றி நற்சிற் சடங்களாதற்கு வேறோர்ஞானம் ஆன்மாவின் மாட்டுளதாதலின்மையாற் றன்னனுபவங்கட்குத்தானே ஸாக்ஷிமாத்திரையாய் நிற்குமென்பது தகாதெனின் அற்றன்று தக்கதேயாம். என்னே? அந்தக்கரணத்தின் ஓர்அம்சமாகிய மனத்தின்றொழில்களில் இது தக்கது இது தகாதது என வறிதலும் அவற்றான்வரும் பயன்களுள் தள்ளத்தக்கதை மட்டுமன்று தான்பெற்றபேற்றிற் சிறிதெனக் காண்புழிக்கொள்ளத் தக்கதையும் அனுபவித்தும் அனுபவியாததாம்படி அவற்றிற் பற்றின்றி அவ்வனுபவத்திற்கு ஸாக்ஷிமாத்திரையாய் நிற்றலுஞ் செய்யும் மற்றோர் அம்சமாகிய புத்தியைப்போல அருளோ டத்துவிதமாகி நின்று விளங்கும் ஆன்மஞானமும்வாஸனைபற்றிப்பயிலும் ஞானயோகத்தானுதல் விஷயபோகத்தானுதல் வரும்பயன்கட்கு ஸாக்ஷிமாத்திரையாய் நிற்றல் ஸ்வானுபவத்தால் இனிது விளங்குமாகலின். (கக)

**மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை, யாயவா ருயிரின் மேவு மருளொளி லிருளாய் நிற்கு, மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை, யாயவா ருயிரின் மேவு மருளொளி லொளியாய் நிற்கும்.**

(இ—ள்.) எதிர்ப்பட்ட விஷயங்களை எனதெனப் பற்றுமாறு ஆன்மாவை மயக்குகின்ற மாயையும் பற்றிய விஷயங்களை இத்தன்மையவெனநிச்சயித்து அனுபவிக்கச் செய்வதாகிய மாயேயமும் அவ்வனுபவத்தான்வரும் இன்

பந்துன்பங்களின் விருப்பு வெறுப்புக்க ளடைதலாகிய கன்மமும் உடம்புள்ளளவும் ஒழியாதாக விஷயங்களால் இன்பத் துன்பங்களைப் பயப்பிப்பதாகிய அறிவறியாமை கள் தாக்காது நிரதிசயவின்பத்தைப்பெறுதல் யாங்ஙனங் கூடுமெனின் மாயை மாயேய கன்மங்களி னுண்மையை ஆராயுங்கால் அவை சிவானுபவத்தைப்பெற்றோரை ஆணவ மலம் வாலுருபமாய் வியாபிக்குமேல் தம்மை ஆண வாகாரமாய்க் காட்டி நிற்றலும் திருவருள் வியாபிக்குமேல் தம்மை அவ்வருளாகாரமாய்க் காட்டி நிற்றலும் உடையவா மெனத் தெருளப்படும் ஆகலாற் பகையிவர் உறவிவரெனக் காட்டுந் துணைவரையுடையார் வருந்துவோ ரல்லராதலை யொப்ப இம்மாயை மாயேய கன்மங்களை யுடையார் அறி வறியாமைகளாற் றாக்கப்படுவோ ரல்லராகலின் அவர் நிரதி சய வின்பத்தைப் பெறுதற் கையமின் றென்பதாம்.

ஆகலாற் பகையிவர் உறவிவரென்பது முதற் குறிப் பெச்சம்.

ஆருயிரின் மருண்மேவு மெனிலிருளாய் நிற்குமெனவும் ஆருயிரின் அருண்மேவுமெனில் ஒளியாய் நிற்குமெனவுங் கொண்டு கூட்டுக.

மாயா வருமிருவினை—அனுபவமாத்திரையாற் கெடாது மேன்மேலும் பயனைவளர்க்கும் ஆகாமிய வினையாகிய விரு ப்பு வெறுப்புக்கள். வாய்மை—இரண்டாம் வேற்றுமைத் தொகை. ஆயுங்காலென்பது ஆயவெனத் திரிந்துநின்றது. ஆருயிர்—கிடைத்தற்கரிய வுயிரெனச் சிவானுபவிகளை யுணர்த்தும்.

மாயை மாயேய கன்மங்கள் தம்மிடத்தமைந்த ஆன்மா வின்கண்ணே வாலுருபமாய் வந்து கூடிய மருளையாதல் அருளையாதல் தம்மாட்டுக்காட்டி நிற்குந் தன்மை ஸ்படிக பாத்திரமானது தன்னிடத் தமைந்த சுத்தோதகத்தின் கண்ணே மலினங்கூடிய வழி அம்மலினாகாரமாகவும்வலம்ர்ய

கிரணங்கூடியவழி அக்கிரணாகாரமாகவுந் தன்னைத்தோற்று வித்தல் போலுமாம்.

ஆன்மாவை மேவிய அருளாதல் மருளாதல் செலுத்தும் வழியேயன்றித் தாமாக ஆன்மாவை யீர்த்துச் செல்வன வல்லவென்பது தோன்றத் தனித்தனி மாயை மாமாயை மாயா வருமிருவினையின் வாய்மையாய வாருயிரின் மேவு மெனா வைத்ததாகவின் இஃது சொற்பொருட் பின்வரு நிலையாயிற் றென்க. (௨௦)

---

இனி வாய்மை ஞானத்தின் பயனை
அருளிச் செய்கின்றார்.

**தேசுற மருவுமான்ம தெரிசன மான்மசுத்தி**
**யாசிலா வான்மலாப மாகமூன் றாகுமூன் றும்**
**பாசமத கலஞானம் பற்றறுன் பணியை நீத்த**
**லேசினேயத்தழுந்த லெனுமிவற் றடங்குமன்றே.**

(இ—ள்.) நிரதிசயவின்பம்வாய்மை ஞானத்தின்பயனே யாக அதனைத் தத்துவரூபமுதலியபத்துவகையாப் பெறப் படுவதெனப் பகர்வ தென்னையோவெனின் அவ்வின்பம் ஸாதகநெறியிற் பயிலப்பயில வளர்ந்தேறி வருமென்பதே யன்றி ஒருங்கே பெறப்படுவதன் றாகலான் அநுபவ ஸோபானக்கிரமம் பற்றிப் பத்துவகையாப் பகர்வதென்க. அப்பத்துங் கருத்து வகையானோக்குங்கால் தேசுற மருவு மான்ம தெரிசனமுதலிய மூன்றுமே யாமெனவும் ஏனைய வேழும்இம்மூன்றனுள் அடங்குவனவாமெனவும் இம்மூன் றும் பாசமதகலஞானம் பற்றறன்முதலிய மூன்றேதுக்களாற் பெறப்படுவனவா மெனவும் சிவாகமங்கள் செப்புமென் பதாம்.

ஆக மூன்றாகும் இவற்றடங்கும் மூன்றும் பாசமதகல ஞானம் பற்ற றுன்பணியை நீத்தல் ஏசினேயத் தழுந்த லெனுமெனக் கொண்டு கூட்டுக.

மூன்றுமென்புழி இகரச்சுட்டு வருவித்தும் பாசமதகல ஞானம்பற்றன் முதலியவற்றாள் ஆண்டாண்டு ஏதுப் பொருள் பயக்கும்ஆனுருபுகள் விரித்தும்உரைக்க. பெறப் படுவனவா மென்பது சொல்லெச்சம். அடங்குதற்குச் செயப்படுபொருள் அவாய் நிலையாற் பெற்றும்.

பாசமதகலஞானம் பற்றன் முதலிய மூன்றேதுக்களாற் பெறப்படுந் தேசுற மருவு மான்ம தெரிசன முதலிய மூன் றும் இருணீக்கமும் ஒளிவிளக்கமும்போல ஏதுக்களோடு பயன்கள் உடனிகழ்ச்சியா மென்ப துணர்ந்து கோடற் பொருட்டு ஏதுப்பொருள் பயக்கும் ஆனுருபுகள் ஆண் டாண்டுத் தொக்கி நிற்குமா றருளிச் செய்தார். என்பது முதனூற் சூத்திரங்களில் "ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி யுராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவத்தண்ணிழ லாம் பதி" எனவும், "ஏகனாகி யிறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினையின்றே" எனவும், அயரா வன்பினரன் கழல் செலுமே" எனவும், ஏதுவும் பயனுமாயருளிச் செய் திருக்கின்றவாற்றான் இனிது விளங்கும்.

மேற்கூறியவாறே இறையருளுருவாய்வந்து கேவல ஸகல லங்களை நீக்கிக் கூட்டியவா றொழுகிக் குணைகழல் குறுக லெனப்படும்முதனூல்எட்டாஞ்சூத்திரக்கருத்தின்படிஉன் முகத்தே நின்மல துரியாதீதாவஸ்தையில் தானும் எதிருங் கழலப்பெற்ற சிவானுபவத்தினின்றும் பகிர்முகப்பட்டுழி முன் துரியநிலைக்கண்ணே ஸிவானுபவமாகப் பெற்ற பதி முதலிய முப்பொருட்களும் அவை ஒன்றினொன்று வியா பக வியாப்பியங்களாமாறும் ஜாக்கிரப் பட்டுணரும் சொப் பனாவஸ்தையை யொப்ப எதிரிட்டறியும்படி காட்டி நிற் கும் பாச வாஸனை நீங்கும் பொருட்டென்பார் பாசமத கலவெனவும், நின்மல துரியாதீதத்திற்பெற்ற சிவானுபவ த்தை நாடுதலானென்பார் ஞானம் பற்றலெனவும், அவ் வாறு நாடவே வாஸனைரூபமாய்த் தோன்றிய அப்பாசம் பேய்த்தேரானய நீர்த்தோற்றம்போலநீங்குதலான் வெளிப்

பட்டு விளங்குந் திருவருளோடு ஆன்மாகதிரொளியும் கண்ணொளியும்போல அத்துவித மாகுமென்பார் தேசுற மருவு மெனவும், அத்துவிதமாய வழி சொப்பனாவஸ்தையை யொப்ப ஜாக்கிரத்திற் காண்டல்போலாது ஜாக்கிரானுபவ மாகவே ஸர்வத்தையும்வேறு தோன்றாவண்ணம் தன்னுள் வியாப்பியமாகச் செய்து வியாபகமாக விளங்கும் சிவ தரிசனத்தால் தரிசிப்பநாகிய தன்னையுங் காணுமென்பார் ஆன்ம தெரிசன மெனவும் அருளினார்.

பிராரப்தபோகமாய் வரப்படும் இன்பத் துன்பங்கள் தாக்காவாறு ஆணவமலம் அகன்றொழியும்படி திருவருளோடத்துவிதமாதலெனப்படும் ஏகனாகி நிற்றல் நிலைத்தற்பொருட்டு அவ்வின்பத் துன்பங்களை ஏற்றுக்கொள்ளுமாறெழுகின்ற முயற்சியினும் சுட்டறுத்தொழுகுதலானென்பார் தான்பணியை நீத்தலெனவும் அவ்வாறொழுகவே விஷயங்களின் மயக்குவதாகிய மாயையினாலாதல் அம்மயக்கம்பற்றியுண்டாம் விருப்பு வெறுப்புக்களாகிய கன்மத்தினாலாதல் பிறழாத ஏகனாகி நிற்றலெனப்படும் சிவயோகத்தாற் பிறவிக்கு வித்தாகிய புண்ணியபாபரகிதமாகி விளங்குமென்பார் ஆன்மசுத்தியெனவும் அருளினார்.

ஆன்மசுத்தியால் ஜீவன்முக்திநிலை ஸித்தித்ததாயினும் பிராரப்த போகத்தை ஏற்றுக்கொள்ளுமா றெழுகின்ற முயற்சியுள்ளளவும்ஒரோவழி சுட்டுணர்வுதோன்றி விஷயவின்பத்துன்பஙகளை அனுபவமாகச் செய்தலும் உண்மையின் அதற்கேதுவாகிய கிஞ்சித்வாஸனையும் ஒழியும்பொருட்டுத் திருவருளோடாகிய அத்துவிதநிலையை ஒருவாற்றானும் பிரியாவண்ணம் பற்றி நிற்றலானென்பார் ஏகனேயத்தழுந்தலெனவும், உன்முகத்துநின்மலதுரியாதீதாவஸ்தையிற்பெற்ற சிவானுபவம் பகிர்முகப்பட்டுழிப் பிறழ்ந்தமைபோலாது உட்புறம்பென்னும் வேற்றுமையற யாண்டும் ஒரு பெற்றித்தாய் உடம்புநீங்கியவழிக்கைகூடும் பரமுக்தி

நிலையோடொத்ததாய் நிகழும் சிவானுபூதியைப் பெறாத லென்பார் ஆசிலாவான்மலாபமெனவும் அருளினார்.

பிராரப்தத்தால் இச்சை அனிச்சை பரவிச்சைகள் காரணமாகத் தன்மாட்டுநிகழும் பிரவிர்த்திகளினும் சுட்டறுத் தொழுகாவழி விகற்பவிகற்பங்களுண்டாகி அவற்றிற் குப் பிறரானோர்படும் அனுகூலப்பிரதிகூலங்களின் வைத்து அவர்மாட்டு விருப்புவெறுப்புக்கள்தோன்றி அதுகாறும் அவரானோர்படும் இன்பத்துன்பங்கள் இறைவனுலாவதே யன்றிப் பிறிதன்றெனக் கண்டொழுகுவதாகிய ஏகனாகி நிற்றலிற் பிறழுவருமாகலான் அங்ஙனமாகாவாறு சுட்ட றுத்தொழுகுதலாகிய இறைபணி நிற்றலெனப்படும் தான் பணியை நீத்தலுள் ஏகனாகி நிற்றலை அடக்கிக் கூறினார்.

ஆன்மசத்தியாற் பிறவியொழிதலின் வைத்து அதனை அனுபூதியெனக்கொள்ளுங்கால் ஆன்மலாபம் அனுவாதமெனப்படும்.

தத்துவரூபமுதலிய ஏனையவேழும் ஆன்மதெரிசனமுதலிய மூன்றனுளடங்குமாறு—தத்துவரூபத்தால் தேகோஹம்பாவனையினீங்கித் தத்துவதெரிசனத்தால் ஆன்மோஹமென்னும் அறிவுபிறந்து தத்துவசுத்தியாற் சிவோஹம் பாவனையைத்தலைக்கூடிய வழிப்பெறப்படும். சிவரூபத்தானன்றி ஆன்மரூபமும் சிவரூப ஆன்மரூபங்களானன்றிச் சிவ தெரிசனஆன்மதெரிசனங்களும் அவ்வடைவேயன்றிஏனையவையும் விதிதிப்பனவன்றாகலான் ஆன்மதெரிசனமுதலிய மூன்றனைக்கூறவேஏனையவெல்லாம் அவற்றுள் அடங்குமென்பதாயிற்று. இதனால் அனுபவவகை ஏகாதச காரியங்களெனவெண்ணற்க. ஆன்மாவிற்குச் சிவபோகியாயிருக்குந் தன்னியல்பு லபித்தலையே ஆன்ம லாபமென்பவால் சிவ போகமென்பதும் ஆன்ம லாபமென்பதும் ஒரு பொருட் கிளவியாய்முடிதலிற் றசகாரியங்களேயாம்.

குருவருளாற் பெற்ற ஞானஸாதக நெறியைத் தலைப்பட்டுஅதுவாயிலாக உன்முகத்து அனன்னியமாப் பெறப்

படும் சிவானுபவத்தின்கண் ஆன்மாவை விழுங்கி நிற்கும் சிவம் ஆன்மாவிற்கும்சிவபூரணமுழுவதும் தன்னுள்ளத்தே நிகழும்படி பெற்று நிற்கும் ஆன்மா சிவத்திற்கும் உருவத்தையொத்தலான் அப்பேறு சிவரூப ஆன்மரூபங்களெனப் படும்.

வித்தியாலாபம் தனலாப மென்பனபோல ஆன்மலாப மென்னுஞ் சொல்லியல்பு ஆன்மாவிற்கு ஆன்மா லபித்த லெனப்படுதலான் அதுலபிக்குமாறு யாங்ஙனமெனின்மன்னவன்வன்றன்மகன் வேடரிடத்தே தங்கி மதிமறந்தங் கிழந்துநின்ற அரசாட்சியாகிய தன்னியல்பினைப் பெறுவது போல ஆன்மா ஐம்புலக் குழுவினீங்கிப் பண்டைப் பரிசெனப்படும் ஸச்சிதானந்த மயமாகிய தன்னியல்பினைப்பெறுதலேயாம். அது "அந்தமிலாவானந்தம் பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்" என்றருளிய திருவாக்கானும் இனிது விளங்கும். இப்பேற்றை அனன்னியமாந் தன்மைப் பெருவாழ்வென்ப.

இவ்வனுபவத்தைச் சிவதெரிசனம் சிவயோகம்சிவபோக மென்றது ஆன்மதெரிசனம் ஆன்மசுத்தி ஆன்மலாபமெனவருளியது திரிபுடி வாடாநெறியைக் கூடாமைப்பொருட்டு. இக்கருத்துப் பற்றியன்றே ஸோஹம்பாவனை பண்ணுகவெனச் சிவாகமங்களும் நீயே ஸச்சிதானந்தமென உபநிஷத்துக்களும் நிகழ்த்துவ வென்க.

ஆன்மரூபானுபவம் பகிர்முகத்து எதிரிட் டறியும்படி சொப்பனவவஸ்தையாகவே ஆன்மதெரிசனம் ஜாக்கிரத்தே சுழுத்தியும் ஆன்மசுத்தி துரியமும் ஆன்மலாபம் துரியாதீதமுமாகிய அவஸ்தானுபவங்களாயவா றறிக. சொப்பன முதலிய இவ்வவஸ்தானுபவங்கள் அடைவே தருவெனப் பொருண்மாத்திரையாய்க் காணப்படும் நிருவிகற்பக் காட்சி அது மாவோ இலுப்பையோ வென ஐயுறவரும் இடைநிலக்காட்சி மாவெனக்காணும் ஸவிகற்பக்காட்சி பத்திர

புஷ்ப பலாதிகளின் விசேஷணத்தால் தேமாவெனக்காணும் ஸ்தூல ஸவிகற்பக்காட்சி இவைகளைப்போலத் தெளியக் காண்டலாம். அவ்வாறன்றி நிருவிகற்பக் காட்சியை நிஷ்களானுபவமாகவும் ஸவிகற்பக் காட்சியை ஸகளானுபவமாகவு நினையற்க. (உக)

தன்னறி வதனாலேதுந் தனக்கறி வில்லையே னுந், தன்னறி வாகவெல்லாந் தனித்தனிப் பயனருந்துந், தன்னறி வறியுந் தன்மை தன்னாலே தனையறிந்தாற், றன்னையுந்தானேகாணுந்தானது வாகி நின்றே.

(இ—ள்.) ஆன்ம தெரிசனத்தைப் பெறும்பொருட்டுப் பாசவாஸனைநீங்கும்படி பகிர்முகத்துநாடத்தக்கதாக உன் முகத்தே சிவரூபானுபவம் கைகூடுதற்குபாயமாவ தியாதெனின் ஆன்மா விஷயங்களைக்கண்டு கேட்டுண்டுயிர்த்துற் றுத் தனித்தனியறிந்து பயனடைதற்குத் திருவருளினதுப காரம் இன்றியமையாச் சிறப்பிற்றென்னும் உண்மையை நாடி அவ்வருளோ டத்துவிதமாதலே உபாயமாகும் அவ் வுபாயத்தான் உன்முகத்தே சிவரூபானுபவமும் அவ்வனு பவத்தான் ஆன்மரூபானுபவமுங் கைகூடும் கூடவே பகிர் முகத்தும் அவ்வத்துவித நிலையிற் பிரியாது நின்று சிவதரி சனத்தால் ஆன்ம தரிசனத்தை ஸ்வானுபவமாகப் பெறு மென்பதாம்.

தன்னாலே தனையறிந்தாற் றானதுவாகி நின்று தன்னையுந் தானே காணுமென வினையும். தன்னாலே என்றதனை பிர ட்டித்தும் அகரச்சுட்டு வருவித்தும் உரைத்துக்கொள்க.

தன்னாலே என்புழி தன்னென்றதும் அதுவென்றதும் திருவருண்மேலும் தனையறிந்தாலென்புழித் தனையென்றது சிவானுபவத்தின்மேலும் தன்னென்பன முதலியவனைத்தும் ஆன்மாவின்மேலுங் குறிப்புமொழிகளாச் சார்ந்துநின்றன.

அறிந்தாலென்றது அருமைநோக்கி. தன்னையு மென்னும் உம்மை சிவத்தினையுமெனப் பொருட்டந்து நின்றது. தானே காண்டல்—சுருதியுத்திகளாற் கண்டவாறே ஸ்வாநுபவ மாக் காண்டல். தானே என்னும் ஏகாரம் சிறப்பு.

இஃது சொற்பொருட் பின்வருநிலை. (உ௨)

தத்துவ மானவற்றின் றன்மைக ளுணருங்காலை
யுய்த்தறிந் திடவுதிப்ப தொளிவளர் ஞானமாகு
மத்தன்மையறியுமாறு மகன்றிட வதுவாயான்மா
சுத்தமாஞ் சுத்தஞானத் தொகுமுத ரொன்றுமன்
[றே.

(இ—ள்) ஆன்மசுத்தியைப் பெறும்பொருட்டுப் பிராரப்தபோகமாய்வரும் விஷய வின்பத் துன்பங்களை ஏற்றுக் கொள்ளுமாறெழுகின்ற முயற்சியினும் சுட்டறத்தொழுகுதல் யாங்ஙனங் கூடுமெனின் ஆன்மா உபாதிரூபமாய் நேர்படும் சப்தாதிய விஷயங்களைப்பற்றத் தொடங்கும்போதே உன்முகத்தும் பகிர்முகத்தும் சுழுத்தியிற்காணுதொழிந்த விஷயங்கள் மீட்டுங் காணுமாறு அவற்றிற்குத் தாரகமாய் நின்றதியாதெனில் ஆராயின் சித்திரங்கட்குப் பித்திகையைப் போலத் திருவருளே தாரகமாய் நிற்பதெனத் தெளிவாக விளங்கும். அவ்வாறே விஷயங்களைக் காணுந்தோறும் சிந்தித்தறிவதாகிய பயிற்சியுங் கழன்று அவ்வநுபவம் ஸஹஜமாகவே சுட்டொழிந்துவிசிப்பதாகிய சிவயோகத்தால் ஆன்மசுத்தியைப்பெறும். இனி ஆன்மலாபத்தைப் பெறும்பொருட்டுத் திருவருளோடாகிய அத்துவிதநிலையை ஒருவாற்றானும் பிரியாது நிற்றற்குபாயமாவ தென்னையோவெனின் ஸதாநிஷ்டையிற் பயிறலே உபாயமாகும். அவ்வுபாயத்தால் ஆன்மாவைச் சுத்திகரித்து நின்ற திருவருளையும் வியாப்தியாகவுடைய சிவபோகாநுபவம் ஸ்வாநுபூதியாக விளங்குவதாகிய ஆன்மலாபத்தைப்பெற்று வாழலாகுமென்பதாம்.

தத்துவமானவை—சேர்ந்தவை. அவற்றின் றன்மைகள்—விஷயசப்தாதிகள். இரண்டாவது விரித்துரைக்க. உணருங்காலே—அறிவாற் பற்றும்போது. உய்த்தறிதல் யுக்தியானாராய்தல். ஏதிப்பதென்றது—சேர்ந்த விஷயங்கட்கு இனவொருமையாய் வந்த குறிப்பாகு பெயர். பித்திகையின் வேறாய்ப் பிரிக்கப்படாத சித்திரங்களை யொத்தலின் அவற்றைஒளிவளர் ஞானமாகுமென்றார். ஒளிவளர்தல்—ஸர்வவியாபகமாதல். திருவருளோடாகிய அத்துவித நிலையைப் பிரியாமைக் குபாயம் அவாய் நிலையாற் பெற்றாம்.

பித்திகையாக் காண்பார்க்குச் சித்திரங்களானுய உபாதி யொழிதலே யொப்பத் திருவருளாக் காண்பார்க்கு விஷயங்களானுய வுபாதிவிடு மென்பது கருத்து. (உ௬)

**உறைதரு முணர்வுமன்றி யதன்முத லுள்ளதென்றிங், கறைவதே னென்னிலண்ண லருளினுமதுவேயன்றி, நிறையொளி முதலதன்றி நின்றிடா நிமலனுகு, மிறையவன்முதலவன்ற னிலங்கருள் சத்தியாமே.**

(இ—ள்.) ஊசல் கயிறற்றாற் றூப்தனையே யாந்துணையாதலே யொப்ப ஆன்மா பாசத்தினீங்கியவழி வாழ்தற்குத் தாரகமாகப் பெறுந் திருவருட்குமேலாக அதனை வியாப்தியாகவுடையதோர் முதற்பொருளுளதென ஞானபாதத்துச் சாற்றுதல் சாலுமாறெங்ஙனெனின் அத்திருவருளைச் சிவபெருமானுக் குடைப்பொருளெனச் செப்பும் சிவாகமங்களாகிய உரையளவையானும் எவற்றையும் ஒருங்கே விளக்குகின்ற ஞாயிற்றினொளி ஞாயிற்றையின்றி நில்லாமையை யொப்ப ஸர்வபரிபூரணமாக நிறைந்து விளங்குந் திருவருள் சிவபெருமானை யின்றித் தனித்தோர் முதலாய் நிற்பதன்றென்னுங் கருதலளவையானும் சிவபெருமான் யாண்டும் ஆணவமலத்தொடு தோய்வற நிற்கின்ற அனாதிமல முத்தனென்பதையும் திருவருள் ஸ்வயம்பிரகாச

முடைத்தாயினும் சிவபெருமானது திருவுள்ளக் குறிப்பின் வழியே ஆன்மாக்களை உய்வித்தற் பொருட்டு ஆணவ மலம் பரிபாக முறும்படி அதனோடு தோயாது தோய்தலு முடைத்தென்பதையும் உணர்த்தும் ஸ்வானுபவமாகிய காண்டலளவையானும்சிவபெருமான்சத்தனென்பதூஉம் திருவருள் அவனது சத்தியாமென்பதூஉம் இனிதுவிளங் கும். ஆகலாற் றிருவருட்கு மேலாகச் சிவமென்பதோர் முதற்பொருளுளதெனத் தெருளுக வென்பதாம்.

ஆகலாற் றிருவருட்கு மேலாக என்பது முதற்குறிப் பெச்சம்.

இறையவனிமலனாகும் முதல் இலங்கருள் அவன்றன் சத்தியாம் எனக்கொண்டு கூட்டுக.

உறைதருதல்—வாழ்தல். உணர்வு ஏற்புழிக்கோட லாற் றிருவருளின்மேற்று' இங்கு என்றது சரியையாதிய மூன்றுபாதங்களுள் ஒன்றற்கொன்றேற்றமாகப் பயனளித் தலைக்கூறுங் கிரியாகாண்டத்தைப்போலாது முடிவாகிய ஸாயுஜ்யப்பயனைக்கூறு ஞானகாண்டத்தென்னும் பொரு ட்டு. நிறைவொளிமுதலதன்றி நின்றிடாவென்றமையான் உவமேயங் கருதலளவையாக வருவிக்கப்பட்டது. நிறை யொளி—ஞாயிற்றினது உச்சிக்கிரணம். முதல்—ஞாயிறு. இலங்கருள்—ஸ்வயம் பிரகாசத்தினையுடைய திருவருள். ஆயினும், இறையவனிமலனாகுமென்றமையான் அவ்வருள் ஆணவமலத்தொடு தோயாதுதோய்தலுமுடைத் தென்ப தாயிற்று. தோயாது தோய்தல்—திரோபவித்துநிற்றல். அவன்றனிலங்கருள் சத்தியாமென்றமையான் முதலென் றது சத்தனென்னும் பொருட்டாம். இறையவன் முதலெ ன்றது திணைவழுவமைதி.

சிவாகமங்களில் நம்பிக்கையுடையனாய்ச் சாக்தேயனல்ல னாய் சாக்தேயவாதம்பற்றி ஆசங்கிப்பவனாய்வினாவிய ஸாத கனுக்கு அவ்வாசங்கை தீரும்படி ஆகமவளவையின் வைத்துணர்த்தலே யமையுமாயினும் ஸாதகத்தின்கண்

மனவெழுச்சி சேறற்பொருட்டு ஏனையவளவைகளானும் இனிதுவிளக்குவாமென்பது தோன்ற அதுவே யன்றி யென்றார்.

அண்ண லருளென்றது பொது வகையானும் அவன்றன் சத்தியா மென்றது சிறப்பு வகையானும் உணர்த்தியவாறு.

**சுத்தமாஞ் சத்திஞானச் சுடராகுஞ் சிவமொழி ந்தச், சத்திதா னின்றுமுன்னைத் தகவிலா மலங் கள்வாட்டி, யத்தனையருளுமெங்கு மடைந்திடு மிருளகற்றி, வைத்திடு மிரவிகாட்டும் வளரொளி போன்மகிழ்ந்தே.**

(இ—ள்.) திருவருட்சத்தி ஆணவமலத்தொடுதோயாது தோய்வதாயினும் எண்ணிறந்த ஆன்மாக்களோடு நிற்கும் அம்மலவலியை யழித்தற்பொருட்டு அதனொடு இடைவிடாது பயிலவேண்டுவதாகலின் எய்ப்பிடத்துப் பரியான் வியாபிக்கப்படும் பாகனைப்போல இலக்குவாய்த்துழி மலத்தான்வியாபிக்கப் படத்தக்க தன்றே அங்ஙனமாக அவ்வருட்சக்தியைஆன்மாக் களைச் சுத்திகரித்து|அவர்க்குச்சிவானுபவத்தை விளைவிக்கும் ஆற்றலுடைத் தென்னலாமோ வெனின் திருவருட்சத்தி ஸ்வயம் பிரகாசமாகிய ஞான சொரூபமாகலின் ஒருவாற்றானு மலத்தான் வியாபிக்கப்படுதலும் சிவத்திற்கு வேறாக நிற்றலும் உடைத்தன்மையான் உலகத்தின்கண் ணிறைந்திருக்கிற பூதவிருளை வலியழித்தெழுந்து தனது முதலாகிய ஞாயிற்றைக் காட்டுகின்ற கிரணத்தை யொப்ப ஆன்மாக்களதுள்ளத்தே அறிவேயே அபேதமாய் பந்தித்து நிற்றலையும் அந்நிலையினீங்கிய வழிப் புறம்பே வாலறிவுருபமாய்த் தோற்றுதலையுமுடைய ஆணவாதிய மலங்களினது அவ்விருதிறங்களையும் வலியழியச் செய்து அவரைச் சுத்திகரித்து நோக்கித் தன்மகனைச் சான்றோனெனக் கேட்டதாய் ஈன்றபொழுதிற் பெரிதுவத்தலையொப்ப மகிழ்ந்து உன்முகத்தும் பகிர்முகத்தும் நின்

மலஜாக்கிரமுதலிய பஞ்சாவஸ்தைகளிடமாக தனயராகிய ஆன்மாக்கட்குத் தந்தையாராகிய சிவபெருமானைக் காட்டு தன்மாத்திரையேயன்றி அவரது திருவடியைக் கூட்டுதலும் மீளாவங்காளாக வைத்து வாழ்வித்தலுஞ் செய்யு மாற்ற லுடையதே யாகுமென்பதாம்.

சத்திஞானச் சுடராகும் சுத்தமாம் அச்சத்திதான் சிவ மொழிந்தின்றும் எங்குமடைந்திடு மிருளகற்றி இரவிகாட் டும் வளரொளிபோன் முன்னைத் தகவிலா மலங்கள்வாட்டி மகிழ்ந்து அத்தனையருளும் வைத்திடுமெனக் கொண்டு கூட்டுக.

உவமையில் எங்குமென்னும் இருளையும்இரவிகாட்டு மென்னும் வளரொளியும் ஏற்குமாறு பொருளினுஞ் சென் றியையும்.

எங்குமென்றது உவமானத்துப் பெத்தான்மாக்களாற் காணப்பட்ட உலகப்பரப்பின் மேலும், உவமேயத்துப் பக் குவான்மாக்களது உட்புறம்பென்னு மிரிடங்கண் மேலு மாம். இரவி இரண்டாம் வேற்றுமைத் தொகை. வள ரொளி—உச்சிப் பகலொளி. மலங்களென்றது முன்னை என்பதனோடுஞ் சென்றியையும். முன்னை மலங்கள்—அனா தியே ஆன்மாக்களை அபேதமாய்ப் பந்தித்து நிற்கு மலங் கள். தகவிலா மலங்கள—அவ்வாறு பந்தியாது வாலனு ரூபமாய்ப் பந்தித்து நிற்கும் அம்மலங்கள்.

முன்னைத் தகவிலா மலங்கள் வாட்டி யென ஒரு தொட ராக வைத்துரைக்கின் முன்போல அபேதமாயன்றிப் பேத மாகியவாலனுரூபமாய் பந்தித்துநிற்குமலங்களது வலியை யழித்தெனமட்டும் பொருடருமாகலானும் தரவே அவை அபேத நிலையின் வலியை வாட்டினாலன்றிப் பேதநிலைக்கு வருவனவன்மையின் அவ்வபேத நிலையை வாட்டியவர் யாவ ரெனவும் வாட்டிய வழிப்பெறப்படும் பயனியா தெனவும் ஐயமுண்டாதற் கேதுவாகலானும் அங்ஙனமாகா வண்ணம்

முன்னை மலங்கள் வாட்டி தகவிலா மலங்கள் வாட்டி என இருதொடராக வைத்துரைத்தலே அமைவுடைத்தென்க. அதுவருஞ் செய்யுட்களானும் இனிது விளங்கும்.

அவ்வுழி அத்தனைக் காட்டல் அருளல் வைத்திடுதல் என்பவை முன்னை மலங்கள் வாட்டியதனால் உன்முகத்துப் பெறப்படும் பயனாகவும் சென்றியைவனவாம். இதைதல் "பொய்வகைப் பவமகற்றப் புரிந்திடி லருளா லாங்கே ஐவகை யவத்தை யுய்க்கும்" என்றருளினமையானும். அதனுண்மை அத்தனைக்காட்டல் முத்திறப்பட்டு அருளல் வைத்திடுதல் என்பவற்றோடு ஐவகையாய் வருதலைக் குரு முகத்தால் ஸ்வானுபவம் பற்றி யறிக.

ஆளாகவைத்தலின் மீளாமை வாலுணர்வுஷயத்தாற்பெறப் படும் ஸ்வானுபூதி மாத்திரைக்கே பயனுமென்பர்; காதலனைப் பிரியினும் கலவியின்பத்தைப் பிரியாக் கருத்தினளோடொப்ப உன்முகப்பேற்றினின்றும் பகிர்முகப் படினும் அப்பேற்றிற் பிறழாப் பிரியத்தராய்ப் பிறங்குவோரு முளராகலின் உன்முகப்பேற்றிற்கும் செல்லற்பாற்றும்.

மகிழ்தலும் அருளலும் வைத்திடுதலுமாகிய மூன்றும் பொருண்மாட்டுப் பிறிதின்கிழமை நீக்கிய விசேஷணமாதல் காண்க.

நிறைபொளி முதலதன்றி நின்றிடாவென உவமையின் வைத்தோதியது திருவருட் சத்தி சிவத்தினு மேற்பட்ட தன்றென்னும் பொருட்டும் ஈண்டுச் சிவமொழிந்தச் சத்தி தானின்று மென்றது தாதான்மியச் சிறப்புடைத்தென்னும் பொருட்டும் ஆகலாற் புனருத்தியாகா. (உ௫)

புகலருமசத்தர் தம்பாற் பொருந்திய வலகை யேபோ, லகிலமு முணருமீச னருளுயிர் மேவ லாலே, சகலமு நிகழவேண்டுந் தலைவனைத்தொழி லுந்தானே, யிகலற வியற்றல்வேண்டு மென்றது நன்றின்றே.

(இ—ள்.) தாங்கொண்ட கருத்தைப் பிறருணருமா றுரைக்க வறியாத கொச்சைமாக்கண் மாட்டாயினும் கிஞ் சித் வியாபக வறிவினையுடைய அலகை ஆவேசிக்கின் அவர் முக்காலங்களையுஞ் சிறிது மொழிதலும் முன்னேலாதவற் றிற் சில செய்தலுமாகிய அவ்வலகைக்குணந்தான் விளங் குதலை யொப்ப மறப்பு நினைப்பு மாறாத வான்மாக்களாயி னும் அவரை முதல்வனது முற்றுணர்வினையுடைய திரு வருள் அத்துவிதமாக வியாபிக்கின் அவ்வான்மாக்கண் மாட்டு வரம்பிலின்ப மாத்திரையேயன்றி முற்றுணர்வு முத லிய ஏனைய வெழுகுணங்களும் யாண்டு நிகழ்தலும் அத னால் அவர் ஸ்வதந்திரமாகப் பஞ்சகிருத்தியங்களைத்தடை யறச்செய்தலுமாகிய முதல்வனதியல்பான் விளங்கவேண்டு மன்றோ வெனின் "தன்னையறிவித்துத் தான்றனைச் செய் தானைப் பின்னை மறத்தல் பிழை" என்றருளியதையு முண ராது இவ்வாறியம்பியதும் செய்நன்றி கொன்ற பாவமாகு மென்பதாம்.

ஈச னகிலமு முணருமரு ளைக்கொண்டு கூட்டுக.

எதிர் நிரனிறையாநின்றவற்றுள் அவ்வவற்றிற்கேற்ப உவ மையடை பொருளினும் பொருளடையும் வினையும் உவ மையினுஞ் சென்றியைந்தன.

உயிர் என்பதின் ஏழாவதும் ஈசன் தலைவன் என்பவற் றின் ஆறாவதுந் தொக்கின்றன. சகலமும்—எண் குணங்க ளும். நிகழவேண்டுமென்றது முக்காலங்களையுந்தழுவிவந்த மொழி. தானே—ஸ்வதந்திரமாகவே. வேண்டுமென்புழி அன்றோவென்னும் வினாக்கூற்றுக்கள்விரித்துரைக்க. என்ற தும் என்புழி மகரஞ்சந்திநோக்கிக்கெட்டது. அவ்வும்மை இழிவுசிறப்பு. நன்றி யின்றே என்பவற்றுள் இன்மைச் சொல், கொன்றதென்னும்பொருட்டாகிச் செய்நன்றிகொ ன்றமகற்கு உய்விலலையென்னும் பயனையுணர்த்தி நிற்றலால் ஸகலமு நிகழ்தலையும் தானே யிகலற ஐந்தொழிலியற்றலை

யும் வேட்டுமுயல்வார்க்கு அம்முயற்சியானுகுங்கேடு இத் தினைத்தென அமையாவென்பது கருத்து.

ஸகலமும் நிகழவேண்டுமென்றேவென்னும் வினவிற்கு முற்றுணர்வு முதலிய குணங்கள் முக்தான்மாக்கண்மாட்டு ஒவ்வொரு காலத்துக் காட்சிப்படுதலும் மற்றைக் காலத்து அக்குணங்கள் அவர் மாட்டுளவோ இலவோவென ஐயுறு மாறு காட்சிப் படாமையும் ஏதுக்களாயின.

தானே யியற்றல் வேண்டுமென்றேவென்னும் வினவிற்கு, "உரைப்பாருரை யுகந்துள்க வல்லார் தங்களுச்சியா, யரைக்காடரவாவாதியு மந்தமுமாயினுய், புரைக்காடுசோலைப்புக்கொளியூரவிநாசியே, கரைக்கான் முதலையைப் பிள்ளைதரச் சொல்லுகாலனையே" என்றருளியது முதலியவாய்ச் சிருஷ்டியின்பொருட்டும், "அவ்வினைக்கிவ்வினையாமென்று சொல்லுமஃதறிவீர், டுய்வினைநாடாதிருப்பதுமுந்தமக்கூனமன்றே, கைவினைசெய் தெம்பிரான் கழல்போற்றுதுநாமடியோஞ், செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறுதிருநீலகண்டம்." என்றற்றொடக்கத்தனவாய்ஸ்திதியின் பொருட்டும், "புத்தர்சமண் கழுக்கையர் பொய் கொளாச், சித்தவர்கடெளிந்துதேறின, வித்தகநீறணிவார்வினைப் பகைக்குத்திரமாவனவஞ்செழுத்துமே" என்றருளியது முதலியவாய் ஸம்ஹாரத்தின் பொருட்டும், "கலைமாதராய் முக்கணனருளில்லையென்றிடு மூகர்நாவை யகன்றுநீ நக்கனூர் திருவாணையேகு" என்றருளியது முதலியவாய் திரோதானத்தின்பொருட்டும், "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, யோதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது, வேதநான்கினு மெய்ப் பொருளாவது, நாத நாம நமச்சிவாயவே" என்றற்றொடக்கத்தனவாய் அனுக்கிரஹத்தின் பொருட்டுமாகப் பிரார்த்தித்தமை ஏதுக்களாயின.

இகலறவியற்றல்வேண்டுமென்றே வென்னும் வினவிற்கு அனுக்கிரஹ கிருத்தியமாகிய சைவஸ்தாபனத்தின்பொருட்டு க்ஷமணரோடிகலி "அற்றன்றியந்தண்மதுரைத்தொ

கையாக்கினுனுந், தெற்றென்று தெய்வந்தெளியார் கரைக் கோலை தெண்ணீர்ப், பற்றின்றிப் பாங்கெதிர்விரவும் பண்பு நோக்கிற், பெற்றொன்றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே" என்றருளியது முதலியவாய் எதிர்வாத நிகழ்ந்து வென்றமை ஏதுவாயிற்று.

முக்தான்மாக்கள் அருளினது எல்லையின்றிய வியாபக மளவும் வியாப்தியாகி நிற்போராயினும் அதனாற் பெறும் பயன் வரம்பிலின்பமாத்திரையேயாம். முற்றுணர்வு முத லிய ஏனைய வெழுகுணங்களும் பசுபாசங்களின்வைத்து ஐந்தொழிற்பொருட்டு ஸாதனமாக வேண்டப்படுவனவே யன்றி அவை முக்தான்மாக்கட்கு இன்றியமையாச் சிறப் பிற்றாய் வேண்டப்படுவனவன்றாகலாற் பயனேடொருங்கு வைத்தெண்ணற்பாலனவன்று.

உலோகோபகாரமாயுண்டாமுயற்சியும், இச்சை அனி ச்சை பரவிச்சைகள் காரணமாகப் பிராரப்தானுகுணமா யெழுதலால் திருவருளை முன்னிடும்போதே "வேதவேள் வியை நிந்தனைசெய்துழ, லாதமில்லிய மணெடுதேரரை, வாதில்வென்றழிக்கத் திருவுள்ளமே, பாதிமாதுடனாய பரமனே" என்றற்றொடக்கத்தனவாகப் பிரார்த்தித்தலும் உண்மையின் இகலோடிகலி ஐந்தொழிற்களை யியற்றலு முக்தான்மாக்கட்கியல்பேயாமெனக. தானே இயற்றமைக் கேது வருஞ்செய்யுளாற் பெறப்படும்.

மன்னவனுல் வேடர்சேரியினின்றும் பிரிக்கப்பட்டுப் பட்டாபிஷேகஞகப்பெற்ற மன்னவகுமாரனுவான் மன்ன வர் போகமாத்திரைக்கே யுரியனுகி மன்னவனதாணையின் கீழடங்கி நின்று பணிசெய்தலேயன்றி மன்னவனுற்பெற்ற வுபகாரத்தை மறந்து ஸ்வதந்திரமாய்க் கருவூல முதலிய வற்றைக் கையாளப்புகுதலும் ஆணைசெலுத்த முயறலும் செய்வனுயிற் செய்நன்றி கொன்றமகனுகி மன்னவனதா ணையான் முனியப்பட்டுக் கருதியதுகைவராமையேயன்றிப் பெற்றபேற்றையுமிழந்து இராஜதானியி னெல்லைக்கப்பாற்

பட்டுத் துன்புறுதலின் வழுவுவோனல்லனுதலை யொப்ப இறைவனால் ஐம்புலச்சுழற்சியினீக்கப்பட்டு அவனது திருவடியைப்பெற்ற முக்தான்மாக்கள் வரம்பிலின்பமாத்திரைக்கே யுரியராகி அருளின் கீழடங்கி நின்று தொண்டுசெய்தலேயன்றி இறைவனதுபகாரத்தை மறந்து முற்றுணர்வு முதலியவற்றை விழைதலாதல் ஐந்தொழிற்களுள் யாதொன்றைக்கருதியாயினுந் தற்போத முனைத்தெழுதலாதலுடையராயிற் செய்நன்றி கொன்றோராகித் திரோதான சத்தியான் முனியப்பட்டுக் கருதியது கைவராமையேயன்றித் தாம் பெற்றவரம்பி லின்பத்தையு மிழந்து முக்தியுலகிற் கப்பாற் பட்டுத் துன்புறுதலின் வழுவுவோ ரல்லராகலிற் றன்னையறிவித்துத் தான்றானுச் செய்தானைப் பின்னை மறத்தல் பிழையென்பது.

முற்றுணர்வு முதலிய வெழுகுணங்களும் ஐந்தொழிற்கும் ஸாதனமாமாறு:—ஆன்மாக்களையும் அவரைப்பந்தித்து நிற்கு மலகன்மங்கள் கன்மபலன் ஆன்மாக்களை வீடுகூட்டும் பொருட்டு அக்கன்மபலனை நுகர்வித் தொழித்தற்குரிய மாயை மாயேயங்கள் இவற்றையும் ஒருங்கே யுணர்தல் முற்றுணர்வுடைமையானும், உணர்ந்தவற்றை மறவாதிருத்தல் இயற்கை யுணர்வுடைமையானும், மறவாமையான் முன்னுணர்ந்தவாறே உபகரித்தற் கடமை பேரருளுடைமையானும், உபகரித்தல் அளவிலாற்றலுடைமையானும், உபகரித்தற்கண் ணிடையூறின்மை தன்வயமுடைமையானும், அவ்வுபகாரத்தைஆன்மாக்கள்பெறுதற்பொருட்டு உயிர்க்குயிராய் நிற்றல் தூயவுடம்புடைமையானும், உயிர்க்குயிராயுடனிற்பினுங்கடலின்கண் ணமிழ்ந்தனோை அமிழ்ந்தாது நிற்போரே களையேற்றற்குரியராதலையொப்ப ஆன்மாக்களை வீடுகூட்டு முரிமைப்பாடாகிய பந்தத்தொடக்கின்மை இயல்பாகவே பாசங்களினீங்கிநிற்றலுடைமையானும், ஆம்.

இவ்வாறு முற்றுணர்வு முதலியவற்றான் உபகரிக்கப்பெ ற்ற முத்தான்மாக்களை எங்கெழிலென் ஞாயிறெமக் கென் னுமாறு ஒருவாற்றானுங் குறைபாடின்றிய நித்திய திருப்தி யையுடையராகச்செய்யும் வரம்பிலின்பமுடைமையு முளப் பட எண்குணச் செல்வனென்ப இறைவனை.

எண்குணங்கட்கும் அதீதமாய் நிகழ்வதே உண்மைப் பொருளாவதென உபநிஷத்துக்களோதுவது ஐந்தொழிற் கும் அதீதமாகிய அவனது சுத்த நிலையை நோக்கியே யன் றிப் பிறிதன்று. (௨௯)

**இன்றுநோக் குணா நடக்கு மியல்பிலோர்க் கினை**
**யவாய்ந்து, நின்றதோ ரலகைநேர்ந்தா னிகழ்வ**
**தெனதுபோ லுள்ளத், தோன்றிய வுணர்வு தம்**
**பா லுள்ளது நிகழ்த்து மீசன், நன்றொழி னடா**
**த்துமேனி தனக்கெனக் கொண்டு தானே.**

(இ—ள்.) தன்னையறிவித்துத் தான்றனைச் செய்தானைப் பின்னை மறத்தல் பிழையென் றருளியவாறே ஸ்வதந்திரம் பாராட்டுதல் குற்றமென்ற தொக்கும். ஆயினும் முத்தான் மாக்களை வியாபித்து நிற்பது ஸர்வசக்தியாகிய திருவரு ளாகலான் ஸ்வதந்திரமாய் முற்றுணர்வு முதலியவற்றோடு ஐந்தொழி லியற்றுமாற்றல் அவர்க்குள வென்பதற் கைய மின்றே யெனிற் குருடு செவிடுமை முடமெனப்படுங்குறை பாடுடையார்மாட்டு அக்குற்றங்களின்றிய உறுப்புக்களமை யப்பெற்ற அலகையாவேசிக்கினும் அவ்வலகையான் அவர துள்ளத்தே நிகழ்த்தப்பட்ட குரூர குண மாத்திரையே அவர் அனுபவிப்பர் அத்துணையேயன்றி உருட்டி விழித் தல் அதட்டிப் பேசுதல் குதித்துக்கூத்தாடன்முதலியவை அவர்மாட்டு நிகழாமை இப்பொழுதுங் கண் கூடாகும். அதனை யொப்ப ஸ்வதந்திரமாய்விளங்காத அறிவிச்சை செயல்களையுடைய ஆன்மாக்களை ஸர்வசக்தியாகிய திரு வரு ளிரண்டற வியாபித்து நிற்பினும் திருவருண்மாட்டு யாண்டும் விளங்குவதும் அவ்வருளான் அவ்வான்மாக்கள

துள்ளத்தே நிகழ்த்தப்படுவதுமாகிய வரம்பிலின்ப மாத்திரையே அவர் அநுபவிப்பர். அத்துணையே யன்றி ஸ்வதந்திரமாய் முற்றுணர்வு முதலியவற்றோடு ஐந்தொழிலியற்று மாற்றலு முடையராகார். அவ்வாற்றலுடையோராகவுங் கண்டாமன்றோ வெனின் ஐந்தொழிற் களையுந் தானே நடாத்தும் ஆற்றலுடையோனாகிய இறைவனது திருவுள்ளத்தின்கண்ணே உலகத்தை உய்விக்கும் பொருட்டு முத்தான்மாக்களாகிய தனதடியவரது பெருமையை விளக்கவேண்டுமென வெழுந்த காருண்யத்தான் அவரைச் சிறப்புவகையாற் றிருமேனிபாக்கொண்டு நின்று முற்றுணர்வு முதலியவற்றான் ஐந்தொழிற்களையும்இறைவனே நிகழ்விப்பன் அதனான் முத்தான்மாக்கள் அவற்றை ஸ்வதந்திரமாக வுடையர்போலத் தோன்றப்படுதன் மாத்திரையேயாமென்பதாம்.

அதனான் முத்தான்மாக்கள் அவற்றை என்பது முதற் குறிப்பெச்சம்.

நோக்குரை நடக்குமியல்பிலோர்க்கு இணையவாய்ந்து நின்றதோரலகை நேர்ந்தால் இன்று நிகழ்வதென் எனவும், ஈசன்றனக்கு மேனியெனக்கொண்டு தன்றொழில் தானே நடாத்துமெனவுங்கொண்டு கூட்டுக.

அவ்வவற்றிற்கேற்ப உவம அடைகள் பொருளினும் பொருள்வினை உவமையினுஞ் சென்றியைவ.

பிறவிச்செவிடே மூகைக்கேதுவாகலான் உரைக்குமியல் பிலோரெனவே கேட்குமியல்பிலோரென்பதுங் கொள்ளப்படும். இன்றுமென்னுமகரஞ்சந்தி நோக்கிக்கெட்டது. நிகழ்வதென் என்னும் வினக்கூற்று நோக்குரை நடக்குமியல் புளோர் மாட்டுப்போல நிகழாவென்னுங்குறிப்புப் பொருள்பட நின்றது. உணர்வு ஆகுபெயர். தன்னுலாவேசிக்கப் பட்ட அசத்தர்மாட்டும் நிகழ்த்துவதாகிய குரூரகுணமாத்திரையே அலகையினிடத்து யாண்டும் விளங்குவதையொ

ப்பத் திருவருண்மாட்டு வரம்பிலின்பமாத்திரையே யாண்டும் விளங்குமென்பார் தம்பாலுள்ளதென்றார். ஆகலான் வரம்பிலின்பத்தை நிகழ்விக்கும் அருட்பூரணத்திற் கிலக்கணங்களாகிய முற்றுணர்வு முதலியவை இறைவனது திருக்குறிப்பின்வழியே சிறப்புவகையான் விளங்கு மென்பதாயிற்று.

உணர்வொன்றிய வுள்ளத்தை யுடையாரும் ஈசன்றனக்கு மேனியெனக்கொள்ளற்குச் செயப்படுபொருளாவாரும் முக்தான்மாக்களென்பது மேலைச்செய்யுளினின்றும் பெற்றாம்.

இப்பத்துச்செய்யுட்களும் தீவிரபக்குவிகட் குணர்த்தியவாறு. (உஎ)

**இந்நிலை தன்னின்மன்னி யெய்திடுங் கலாதி போதந், தன்னள வறிந்துநிற்குந் தகவிலா மலங் கணீத்த, வந்நிலை கரணமாகா வகையதி லறிவடங்கி, மன்னிட வியாபியாய் வான்பயன் றோன்று மன்றே.**

(இ—ள்.) தன்னாலே தனையறிந்தாற்றானதுவாகி நின்று தன்னையுந்தானே காணுமெனச் சாற்றியமாத்திரையே அவ்வாறு ஸாத்தியம்பண்ணிக்கொள்ளத்தக்க முன்னைத் தவமுதிர்ச்சியுடையரல்லாதார் ஸாதித்துப் பெறுமாறியாங்ஙனமெனின் குருடு செவிடூமை முடமுதலிய குறைபாடுகளனைத்தும் ஒருங்கேயுடையாரையொப்பக் கரணேந்திரியங்களைத் தானகவே யசைவற நிறுத்தி ஆண்டு இச்சாஞானக்கிரியைகட்கு விஷயமாகவருஞ் சூக்குமை பஞ்சமைகளேயும் மாயாகாரியமத்துணையேயென அறிந்தகல்வார்க்குச் சிவானுபவம் ஸித்திப்பதாகும். ஸித்தித்த அவ்வனுபவத்தினின்றும் பகிர்முகப்பட்டுழி வாஸனைரூபமாய்த் தோன்றும் பிரபஞ்சக்காட்சியைப் பேய்த்தேரானுய நீர்த்தோற்றம்போன்றதெனக் கண்டுகழிக்கவே விளங்குவ

தாகிய திருவருள் இடைநிலையாகாவண்ணம் அதனோடைத்து விதமாக நிற்கப்பெறுவதாகிய ஜாக்கிரசுழுத்தியில் திருவருளையும் வியாப்தியாகவுடைய சிவம்விளங்கித் தோன்றுமென்பதாம்.

இகரச்சுட்டினுன் மேலைச்செய்யுளினின்றும் பெறப்பட்டனவாகிய உவமானத்திற்கு ஈண்டைக்குரிய உவமேயங் கொள்ளுங்கால் கண்ணும் நாவும் காதுமேயன்றி உரைக்குமியல்பிலோரெனவே கேட்குமியல்பிலோ ரென்பதூஉம் நடக்குமியல்பிலோரெனவே பாணியின் னேறிலுலன்றிப் பாதமுன்னேறுமையின் வைத்து ஈதலேற்றன் முதலியவற்றிற்குரிய இயல்பிலோரென்பதூஉம் போந்து காதுங்கையுமுளப்பட முக்கியேந்திரியங்களாகிய இவற்றுன் இனம் பற்றி ஏனைய விந்திரியங்களும் கொள்ளப்படுவனவாகலின் அவ்விருவகை இந்திரியங்களையும் அசைவற நிறுத்தவே அவற்றுன் விஷயங்களைப்பற்றி வியாபரித்தலையுடைய மனமுதலிய அந்தக்கரணங்களும் அசைவற நிற்றல் வலித்தித் தலைநோக்கிச் சொற்பல்காமைப்பொருட்டு இந்நிலை தன்னின்மன்னி என்றார். எனவே இந்திரிய வியாபாரங்கள் நின்ற வழியும் வாஸனைபற்றி நிகழுங் கரணவியாபாரங்களை ஒழிக்கவேண்டுமென்பது ஊகமுடையார்க்கினிது விளங்குமென்க.

உவமவுருபு வருவிக்கப்பட்டது. ஊழானுய குருடு முதலிய அக்குறைபாடுடையாரும் ஞானவபோதகராதல் செல்லும்போலுமென மயங்காது காத்தற்பொருட்டுத் தன்னின் மன்னியென்றார். தன்னின் மன்னுதல் ஆன்மா தானுகவே அவற்றின் றெழிற்பாடுகளை நிறுத்துதல். கலைவித்தை அராகங்களான் விளங்கியவழியும்கரணேந்திரியங்களின்சலனத்தால் அசுத்த மாயாகாரியமாகிய விஷயங்களையேயன்றி அதுகாறுங் கண்டறியாத ஆன்மாவினதிச்சாஞானக் கிரியைகட்கு விஷயமாகும் புதுமையாமென்பார் எய்திடுமென்றார். கலாதிகளானுய இச்சாஞானக்கிரியைகட்கு விஷய

மாகவரும் வாக்குக்களைக் கலாதிபோதமெனை அடக்கிக் கூறினார். அளவறிதல்—குடத்தைமண்ணென்றறிந்து ழிச்சுட்டியும் சுட்டாகாதொழிதலை யொப்பக் கண்டுகழித்தல். அளவறிந்தவழிப் பெறப்படும்பேறுவருவிக்கப்பட்டது. நிற்குந் தகவிலாமலங்கள்—அப்பேற்றால்அனாதிபந்தநிலைபோலாது வாலனுரூபமாய்ப் பந்தியாது பந்தித்து நிற்கு மலங்கள்.

வாலனு ரூபமாய்த் தோன்றுவது பிரபஞ்சமேயாயினும் அதனைச் சுட்டியறிதலால் அவ்வறிவிற்கேதுவாக அதன் முன்னர்த்தாய் நிகழும் அறியாமையாகிய ஆணவமும் சுட்டலாகிய கன்மமும் சுட்டுப்பொருளின் மயக்குவதாகிய மாயையும் சுட்டப்படும் பொருளாகிய மாயேயமுமாக நான்குமலங்களோடு அவற்றை நிகழ்விக்குந் திரோதமும் உளப்படப் பஞ்சமலங்களையும் அறிந்தகலவேண்டுமென் பார் மலங்கணீத்த வென்றார்.

அந்நிலை—ஆண்டுத்தாரகமாகப்பெறும் அருணிலை. காரணமென்றது ஈண்டுக்காட்சியின் மேற்று. வகை—பொருட்டு. அதிலறிவடங்கி மன்னிடவியாபியாய வான்பயன்றோன்றுமெனவே அத்தோற்றத்தைக் காண்பதாகிய ஆன்மா தன்னையுங் காணுமென்பது போதருதலின் இச்செய்யுளும் ஆன்ம தெரிசனத்திற் குபாயங் கூறியதாயிற்று. (உஅ)

**அடைபவர் சிவமேயாகு மதுவன்றித் தோன்றுமென்ற, கடனதே னென்னின்முன்னங் கண்டிடார் தம்மைப்பின்னுந், தொடர்வரு மருளினாலுந் தோன்றுமா காணாராயி, னுடையவ னடிசேர்ஞான முணர்தலின் றணைதலின்றே.**

(இ—ள்.) சிவாகாரமாகிய திருவருளோடத்துவிதமாயினும் சிவாகாரமாவரேயன்றி அவர்க்குச் சிவந்தோன்றுமெனக் கட்டுரைத்த தென்கொலோ வெனின் சிவபெருமானைப் பெத்தநிலையிற் கண்டறியாத ஆன்மாக்கள் தம்மை அத்துவிதமாக்கொண்டு நிற்பதும் அந்நிலையிற் பிரிந்தவழி

மீட்டுந்தொடர்ந்து கூடுதற்கரியதுமாயுள்ள திருவருளினை லும்மவ்வானுபவமாகவிளங்கப் பெறுரேல் தமதுமுதல்வனு கிய அச்சிவ பெருமானது திருவடியைப் பெறுவேமெனை லுக்கியெழுந்த அவரது ஆன்மஞானம் அவ்வடியாகிய திரு வருளை யறிந்ததுமாகா அதனோடத்துவிதம் பெற்றது மாகாவெனத் துணியப்படு மென்பதாம்.

அருளோடத்துவிதமாய் நிற்போர் தேஹிகளாயினும் விதேஹிகளே யாகலானும் அவ்வருளைத் தாதான்மியமாக வுடையசிவம் பெண்ணாகியாணுபயமாய்ப் பிறங்கொளிசேர் விண்ணாகி மண்ணாகியும் இத்தனையும் வேறாகி விளங்குவ தொன்றாகலானும்அடைபவர் சிவமேயாகுமென்றாராகலின் திணைவழுவின் றென்க. கடன்—கட்டுரை. முன்னம்—பெத்தநிசை.

அருளோடத்துவித மானாலன்றிச் சிவானுபவத்தைப் பெறுதலும் பெறுதவழி அவ்வத்துவிதநிலையினீங்குவதுண் மையான்மீள அருளைத்தொடர்ந்துகூடுதலும் அரிதாகலின் பின்னும் அருள் தொடர்வரும் அருள்என இருதொட ராகப் பிரித்துவைத் துரைத்தலே யமைவுடைத்து.

அருளினாலுமென்ற சிறப்பும்மை ஏனைய வுபாயங்களாற் பண்டே பயின்றுறு மின்றே பயின்றுறு மொளிக்குஞ் சோர னென்பதை யுணர்த்திற்று.

உடையவனடிசேர் ஞானம்—ஆன்ம ஞானம். ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது.

அருளோடத்துவிதமாயவழி சிவானுபவம் பிறவாதேல் அவ் வத்துவித நிலையி னீங்குவ துண்மையாதல் "தென் பாலுகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன் பெண்பா லுகந்தில னேல் விண்பாலியோ கெய்திவீடுவர்" என்றருளிய திரு வாக்கானினிது விளங்கும். (உக)

பொற்புறு கருவியாவும்புணராமே யறிவிலாமற் சொற்பெறு மதீதம்வந்து தோன்றுமே தோன்றி

*நின்ற, சிற்பர மதனுலுள்ள செயலறுத்திட வுதிக்குந், தற்பர மாகிநிற்றல் சாக்கிரா தீதந்தானே.*

(இ—ள்.) ஜாக்கிர சுழுத்தியினின்று நீங்குமாறு பிராரப்தானுபவமாக உபாதி ரூபமாயுதிக்கும் விஷயங்களைப் பித்திகைக்குச் சித்திரம்போலத் திருவருட்கு வேறன்றெனக்கண்டொழுகத்தக்க தீரமுடைய ரல்லாதார்க்கு அவ்வுபாதி தாக்காமைக்குரிய உபாயமாவதி யாதெனின் பிராரப்த போகமாய்வருமவற்றுள் இன்பத்தால் விஷயங்களைப் பற்றி யனுபவிக்குமாறு தத்துவங்களெல்லாம் சலித்து வியாபரித்தலாகிய வசலமாதல் துன்பத்தால் அஞ்சி நடுநடுங்கிச் சோர்ந்து மயங்குவதும் ஆணவமலமேலீட்டினால் ஜாக்கிரத்தே அதீதமெனப் பெயர்மாத்திரையாய் நிகழ்வதுமாகிய மத்தியாலவவஸ்தைக் கேவலமாதல் வந்துகூடாவண்ணம் குருபதேசத்தைப்பற்ற விளங்கித்தோன்றுந் திருவருளோடத்துவிதமாகி நின்றொழுகுவதே உபாயமாகும், அற்றேல் உண்மையாகிய ஜாக்கிராதீதநிலையாவதியாதெனின் அவ்வருளோ டத்துவிதமாகிய நிலையிற்பிறழாது நின்று ஓரோவழிக் கிஞ்சித்தாய்நிகழும் விஷயவாஸனையை ஒழித்தழிப் புதிதுபோலத்தோன்றும் சிவானுபூதிமயமாக நிற்றலே உண்மையாகிய ஜாக்கிராதீதநிலையாவதென்பதாம்.

உன்முகப் பேற்றிற்கேயன்றிப் பகிர்முகத்தும் சுழுத்தி பரியந்தம் பெறுமாறு சலனமின்றித் துணைத்துநின்ற தத்துவங்களென்பார் பொற்புறு கருவியென விசேஷித்தார். பொற்புறுதல்—அழகியவாதல். இச்சாஞானக்கிரியைகளை விளக்குங் கலைவித்தை அராகங்களேயன்றி வசங்கற்பவிகற்பங்களுண்டாமாறு அந்தக்கரணுதிகளும்புணரலாகாதென்பார் யாவும் புணராமே என்றார். சிற்பரந்தோன்றற் கேது அவாய் நிலையாற் பெற்றாம். உள்ள செயலென்றது—ஏற்புழிக்கோடலாற் கிஞ்சித் வாஸனையின் மேற்று. தோன்றி நின்றனவும் உதிக்குமெனவும் சொன்னவை—உன் முகத்துப்பெற்ற சிற்பர தற்பரங்களே பகிர்முகத்து வாஸனு

ரூபமாய்த்தோன்றும் பிரபஞ்சோபாதியால் அஃகிநிகழ்ந்து அவ்வுபாதிநீங்கிய வழிப்புதிதுபோலப் பூரணமாகப் பெறப் படுதலை யுணர்த்தி நின்றன. ஜாக்கிராதீத நிலையை நீக்கமி லதீதமென்னும் செய்யுளில் சுத்தாவஸ்தையி னியல்பை விளக்கு முகத்தாற் பாசத் தடிப்பினீங்கி ஸ்வானுபவமா கப் பெறுதலையும், இச்செய்யுளில் பாசவாஸனையி னீங்கி ஸ்வானுபூதியாகப்பெறுதலையும் உணர்த்தியதாகலான் ஸா தகநெறி, அவ்வவற்றிற்குரியவாய்ச் சிறுபான்மைவேற்றுமை தோன்றநின்றது.

தோன்றி நின்ற சிற்பரமென்றது அதனோ டத்துவித மாகி நின்றெழுகுவதனாற் பூர்வ வாஸனைப்பற்றி அந்தக் க்ரணங்களோடுங் கூடாதே வாடாதே குழைந்திருத்தலா கிய ஆன்ம சுத்திப்பேற்றைக் குறிப்பாகவும், அதனால் உள்ள செயலறுத்திட வுதிக்குந் தற்பரமாகிநிற்றலென்றது ஆன்மலாபப்பேற்றை வியக்தமாகவும் உணர்த்தியவாறு. ()

ஒடுங்கிடா கரணந்தானே யொடுங்குமா றுணர்ந் தொடுக்க, வொடுங்கிடு மென்னினின்றதொடுங் கிடா கரணமெல்லா,மொடுங்கிட வொடுங்கவுள்ள வுணர்வுதா னொழியும்வேறு, யொடுங்கிட லன்றி மற்ற வுண்மையை யுணரொணாதே.

(இ—ள்.) சிவானுபவத்தைப் பெறும்பொருட்டுவிதித்த வாறே ஸாதகஞ் செய்தற்கு ஆன்மாவினது இச்சைமாத்தி ரையானே அந்தக்கரணபுறக்கரணங்கள் ஒடுங்கமாட்டாவா கலாற் பிராண பந்தன முதலியவற்றான் ஒடுக்குவதன்றோ உபாயமாவதெனின் அவ்வாறொடுக்கி நின்ற ஆன்மபோத முனைப்பு ஒடுங்காது நிற்குமாகலான் அஃது ஸகலாவஸ் தையேயாம். அவ்வான்ம போதத்தை விளக்கி நிற்கும் உள்ளந்தக்கரணங்களும் ஒடுங்கும்படி உண்டி யொழிதல் முதலியவற்றான் உடம்பினை ஒடுங்கச் செய்யின் அப்போத முனைப்பு மொடுங்கிடு மன்றோ வெனின் அவ்வா றொடுக்

கின் முன்னுள்ள சிற்றுணர்வுதானும் இல்லையா யொழியு மாகலான் அஃது கேவலாவஸ்தையேயாம். மற்றென் னையோ வுபாயமாவதெனின் அவ்விரவஸ்தைகளும் எய்தா வண்ணம் குருபதேசத்தி னுறைத்துநின்று ஸாதித்துக்கர ணங்களை ஒடுங்கா தொடுங்கச் செய்வதாகும் அவ்வாறன் றிச் சிவானுபவத்தைப் பெறுதல் கூடாதென்பதாம்.

தானே கரண மொடுங்கிடாவெனக்கொண்டு கூட்டுக.

கரணம் ஜாதி யொருமை. ஒடுங்கிட ஒடுக்கவென்னுது ஒடு ங்க வென்றது உடம்பிற் குயிரோடுள்ள அபேத நிலைமை பற்றி. மற்ற வுண்மையை யென எதிர்மறையாக வழங்கின மையாற் சங்கித்த வுபாயங்களால் ஸாதித்துப் பெறப்படு வது ஸாயுஜ்ய மன்றென்பதாயிற்று. உணரொணுதெனவே புணரொணு தென்பதுந் தானேபோதரும்.

இஃது சொற்பொருட் பின்வருநிலை. (நூக)

**பற்றிடுங் கருவியாவும் படர்ந்துண வளிக்குங் காலை, யுற்றறிந் திடுவதொன்றி னுணர்வினி னுண்மையாகு, மற்றதும் பகல்விளக்கின் மாய்ந் திட வருவதுண்டேற், பெற்றிடு மதனை மாயப் பிறப்பினை யறுககலாமே.**

(இ—ள்.) கரணங்களை ஒடுங்காதொடுங்கிநிற்கச்செய்து உன்முகத்தே சிவானுபவத்தைப்பெறினும் பிறவியொழியு மாறு பகிர்முகத்தும் அவ்வனுபவத்தை அனுபூதியாகப் பெறவேண்டுவதன்றே ஆகலான் அவ்வனுபூதியைப் பெறு தற்குத்தடையாக வரும்பிராரப்தபோகத்தையும் அதுபற்றி யேறும் ஆகாமியத்தையும் ஒழித்தல் எவ்வாற்றாற் கூடு மெனின் கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறியும் ஐம்புலன்களை யும் ஒருங்கே விருந்தா யருந்துமாறு அவற்றைப் பற்று கின்ற ஐம்பொறிகளும்விரிந்து ஐயுணர்வுகளையும் ஒருங்கே யளித்து நிற்புழியும் அவற்றுள் ஏதேனும் ஒருணர்வினைப் பற்றி ஒரே புலனதியல்பினைமட்டும் உள்ளவாறே யுணர்வ

தன்றி அதனோடு ஏனையவற்றினியல்புகளையும் உணர்வதின் ருகலான் ஒரேபுலனையுணர்வதாகிய அச்சுட்டுணர்வும் திவாகரன் முன்னர்த் தீபத்தையொப்ப வலியழியும்படி திருவருள் விளங்கித் தோன்றுமேல் அவ்வருளோ டத்துவிதமாகி நின்று பிராரப்தபோகத்தையும் அதுபற்றி யேறும் ஆகாமியத்தையும் ஒழித்தல் கூடுமென்பதாம்.

அவ்வருளோ டத்துவிதமாகி நின்றென்பது குறிப்பெச்சம்.

உணர்வினின்உற்றறிந்திடுவது ஒன்றினுண்மையாகுமெனவியையும்.

காலையென்புழி சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. மற்றதுமென்னும்உம்மை இழிவுசிறப்பு. விளக்கின்—விளக்கைப்போல. வருவதற்கு வினைமுதல் அவாய்நிலையாற் பெற்றும். அம்முதல் வருவதற்கு ஏதுமேற் பெறப்பட்டமையின் மீட்டும் விளம்பாராயினர். உண்டேலென்றது அருமை நோக்கி.

பெற்றிடுமது—விரும்பாதிருக்கினும் வெறுக்கினும் ஒழியாது ஒருதலையான் வந்து கூடுவதென்னும் பொருட்டாகிப் பிராரப்தபோகத்தின் மேலும், மாயப்பிறப்பு—அதுபற்றி யேறு மயக்கத்தால் யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதியானெனத் தோன்றுவதென்னும் பொருட்டாகி ஆகாமியத்தின் மேலு நின்றன.

இவ்வைந்து செய்யுட்களும் மந்தபக்குவிகட் குணர்த்தியவாறு. (௬௨)

முந்திய வொருமையாலே மொழிந்தவை கேட்டல் கேட்டல், சிந்தனை செய்தலுண்மை தெளிந்திட லதுதானுகை, வந்தவா றெய்தனிட்டை மருவுத லென்று நான்கா, மிந்தவா றடைந்தோர் முத்தி யெய்திய வியல்பினோரே.

(இ—ள்.) பிறவிக்கஞ்சி வீடுபெற விழைந்தோராயினும் அதற்குரியவுபாயமாக உபதேசித்தவாறே கரணேந்திரியங் களையசைவறநிறுத்தி ஸாதிக்கத்தக்க ஆற்றலுடையரல்லா தார் அவ்வாற்றலுடையராகிச் சிவானுபூதியைப்பெறுதற்கு ரிய நெறியாவதியாதெனின் ஞானாசிரியனையடைந்து வழி பட்டு அவரான் மொழியப்படும் ஞானநூற்பொருளைப் புற விடயங்களிற் செல்லாது ஒற்றுமைப்பட்ட மனத்தொடு நின்றுகேட்டுக்கேட்டவாறேஉள்ளத்திற்பதியும்படி சிந்தித் துப் பதிந்தபொருளைப் பெறுதலினையன்றி மற்றெவற்றி னுஞ்செல்லாது ஒற்றுமைப்பட்ட உள்ளத்தையுடையராய் நிற்றலைக்கண்டு அவ்வண்ணமேபெறுமாறுஅதற்குரிய வுபா யத்தைஆசிரியர் மொழியாது மொழியக்கேளாது கேட்கிற் கரணேந்திரியங்கள் அசைவற நிற்கும். நிற்கவேஸாதகநெ றியைத் தலைப்பட்டு உன்முகத்தே அநீதத்துப்பெறப்படுவ தாகிய சிவானுபவத்தால் இந்திரஜாலம்போலப் பொய்யாய் முடியும் பிரபஞ்சமானது பகிர்முகப்பட்டுழி வாஸ்ரூப மாய்த் தோற்றுவதினுண்மையைப் பேய்த்தேராயுய நீர்த் தோற்றம் போன்றதே யன்றி ஸாகஸாதன மன்றெனக் கண்டு நீங்கி அவ்வழிப்பெறப்படுந் திருவருளோ டத்து விதமாகி நின்று பிரபஞ்சோபாதியை யொழித்து ஸதா நிஷ்டையிற் பயிறலாற் சிவானுபூதியைப் பெற்று வாழ்வ ரென்பதாம்.

கேட்டல் கேட்டல் சிந்தனைசெய்தல் உண்மை தெளிந் திடல் என்பவை நிரனிறை.

முந்தியவொருமையாலேமொழிந்தவை கேட்டலென்றத னன்ஏனையகேட்டல் பிந்தியவொருமையாலே மொழியாது மொழியக் கேளாது கேட்டலென்பதாயிற்று. உண்மை என்புழி ஐயுருபு விரித்துரைக்க. ஆறு என்பவற்றுண் முன் னையது உவமவுருபு. ஏய்தல்—தான் அதுவாக நிற்றலென் னும் பொருட்டு.

உண்மை தெளிந்திடலென்றது பிரபஞ்சவாஸனா க்ஷயத்தின் மேற்றுகலான் வாஸனாரூபமாத்திரையாய்த் தோற்றுதற்குரிய ஏது வருவிக்கப்பட்டது.

மேலே, தான்பணியை நீத்தலெனவும்ஈண்டு அதுதானாக வந்தவா றெய்தலெனவும் அவ்வப்பக்குவங்கட்கியைய ஒவ்வொன்று மாத்திரையேகூறி யொழிந்ததனால் அவ்விருவாக்கியங்களும் ஒன்றினொன்றுதொக்கி நிற்பதாய் திருவருளோடத்துவிதமாகி நிற்றலென்னும் ஒருபொருளையே பயத்தலுடைத் தென்ப துணர்க. முந்திய கேட்டலும் சிந்தனை செய்தலும் பிந்தியகேட்டலைப் பயப்பிக்கும் ஸாதனமத்துணையே யாமென்பதை யறியாது மயங்காமைப்பொருட்டு நான்காமெனத் தொகைப்படுத்தினர்.

சிவானுபவத்தாற்பிரபஞ்சம் இந்திரஜாலத்தைப் போலப் பொய்யாய் முடியுமென்பது உச்சிப்பகலொளியின் முன்னர் இருளையொப்பவாகலிற் பாசம் நித்தியமென்பதனோடு முரணாமை காண்க. (௧௧)

**பாசமா ஞானத்தாலும் படர்பசு ஞானத்தாலு, மீசனை யறியவொண்ணா திறையருண் ஞானநண்ணித், தேசுறு மதனான் முன்னைச் சிற்றறி வொழிந்துசேர்ந்து, நேசமோடயர்பரத்து நிற்பதுஞான நிட்டை.**

(இ—ள்.) ஞானாசாரியர்மொழியாதுமொழியக்கேளாது கேட்டன் முதலியவற்றான் முயன்று பெறத்தக்க ஆற்றலில்லாதார் மொழிந்தவைகேட்டுச் சிந்தித்திருத்தன் மாத்திரையானே முத்தி யடையாரோ வெனின் ஞானநூற் பொருளை மொழியக் கேட்டுச் சிந்தித்திருத்தன் மாத்திரையே யன்றிப் பூர்வ புண்ணிய விசேஷத்தால் அந்நூலின் விதித்தவாறே ஸாதகம் செய்து நாதானந்தத்தைப் பெறினும் அஃது பாசகாரியமாகிய கரணவியாபாரமே யாகலானும் நாதமுங் கீழ்ப்பட மேற்கொண்டு நின்றுழி தன்னை அறுதி

முக்தனுக் கொப்பென மதித்தலோடுபெறப்படும் ஏகதேச வியாபகஜ் ஞானத்தான் மகிழ்தல் பசுத்துவவாலனை பற்றியே நிகழ்வதாகலானும் அப்பாசஞான பசுஞானங்களாற் சிவானுபவம் உள்ளவாறே விளங்குவதன்று. அதனல்ஞானசாரியரை யடைந்து வழிபாடுசெய்ய அவர் கருணை கூர்ந்து மொழியாது மொழிதலைக் கேளாது கேட்டு வாதகஞ் செய்து உன்முகத்தே சிவரூபானுபவத்தைப் பெறுதலேயன்றிப் பகிர்முகத்தும் விளங்குகின்ற அவ்வனுபவஞானத்தாற் பாசவாலனையி னீங்கிச் சிவதரிசனத்தையும் பசுத்துவ வாலனையி னீங்கிச் சிவயோகத்தையும் பெற்று அப்பேற்றை அயராமையானுகும் அன்பொடுநிற்பதாகிய ஞானநிஷ்டையாற் சிவபோகியாய் வாழ்தலே உண்மையாகிய முக்திப்பயனுவ தென்பதாம்.

உண்மையாகியமுக்திப்பயனுவதென்பது குறிப்பெச்சம்.

பாசகாரியமாகிய கரணங்களாற் பெறப்படு மவற்றுண் மேலாகிய நாதானந்தத்தைப் பெறு ஞானமென்பார் பாசமாஞானமெனவும், அதின்மேற்பட்டுழிப் பெறப்படும் ஏகதேச வியாபகஜ்ஞானமென்பார் படர்பசு ஞான மெனவும் பகர்ந்தார்.

இறையருண் ஞானம்—குருவருளாற் பெறப்படும் சிவரூபானுபவஞானம். தேசுறுமதனு லென்றது பகிர்முகத்தும் விளங்குகின்ற அவ்வனுபவ ஞானத்தா லென்னும் பொருட்டு. முன்னைச்சிற்றறிவென்பது பாசவாலனை பசுத்துவவாலனை என்னும் இரண்டனையும் உணர்த்தி நின்றது. ஞானநண்ணியெனச் சிவரூபானுபவத்யையும், சேர்ந்துளனச் சிவயோகத்தையும், செப்பினமையால் இடைநின்றதும்பாசவாலனு நீக்கத்தின் பயனுமாகிய சிவதரிசனமும் கொள்ளற்பாற்று.

நிற்பதென்றது நடுநிலைத்தீபம். உயர் பரத்து நிற்பது—சிவபோகம்.

இச்செய்யுள் பாசஞான பசுஞானங்களை முக்தி நெறி யன்றென மறுக்கு முகத்தானே மேலதனை வலியுறுத் தியவாறு. (௩௪)

**விளம்பிய வகையி னிட்டை மேவிட லரிதேன் முன்ன, மளந்தறி வளித்தவற்றி னளவுமற்றவற் றினுலே, யுளங்கொளுந் தனையுமுள்ள படியுமுற் றுணர்ந்து செவ்வே, தளர்ந்திடா துவப்பமற்றத் தன்மைய தாகுந்தானே.**

(இ—ள்.) ஸோபானங்களாகச் சொல்லிய கேளாது கேட்டல் உண்மை தெளிந்திடல் அதுதானுகவந்தவாறெய் தல் என்னும் இவற்றின்வழியே ஞானநிஷ்டையைக் கூடிச் சிவபோகியாய் வாழ்வதாகிய அநுபூதியைப் பெறும்பொரு ட்டு ஸாதகஞ் செய்தற்கு விதித்தவாறே தனியிடத்திருத் தல்பற்றியுண்டாம் இதயக்கலக்கத்தாற் றடைப்படுமாயின் அத்தடையை ஒழித்து ஸாத்தியமடைதல் எவ்வாற்றாற் கூடுமெனின் குழூவுடிருப்பினும் கூடாதொழியாப்பிராரப்த வினையானது தன்னாலளிக்கப்படும் இன்பத் துன்பங்களைப் பற்றியனுபவிக்குமாறு ஆன்மபோதத்தை உசிதோசிதமாக விளக்கி நல்கற்கு அளவுகலமாக்கொண்ட கருவிக்குழாங் கள் அறிவிக்கினும் அறியாத ஜடமாகலானும் அக்கருவிக் குழாங்களானாகும் போதத்தால் இன்பத் துன்பங்களைப் பற்றி யனுபவிக்கும் ஆன்மா அறிவித்தாலன்றி யறியாத சிற்சடமாகலானும் அவ்விரண்டனையுங் கூட்டிக் காரியப் படுத்தும் இயற்கை யறிவினையுடைய இறைவனு லன்றி அணுத் துணையேனும் இன்பத்துன்பங்க ளணுகாவென் பதூஉம் அணுகுமவற்றை அவனதருளானன்றிக் கடத்தல் ஒருவர்க்கும் அமையாதென்பதூஉம் சுருதி யுக்தி யனு பவங்களாற் றேர்ந்து நிஷ்டையிறுனவை நிர்விக்கினமாக நடந்தேறும்படி காத்தருளவேண்டுமென இறைவனை வண ங்கிப்பிரார்த்தித்து அங்காஸனத்தொடு முத்திராலக்ஷண விதி வழுவாது செவ்வே யிருந்து இதயக் கலக்கத்தை

யொழித்துஉடற்காவலைக்கைவிட்டுவோதகநெறியைத்தலைப் பட்டுழி நிகழும் இன்பம் பெருகுமாறு அதனை மறவாத மகிழ்ச்சியுடையனுயிடின் அடைவே கேட்டன் முதல் நிஷ்டையீறுகியவற்முற் பெறப்படும் பயன் ஸாத்தியமாதல் கூடுமென்பதாம்.

விளம்பியவகை—கேட்டன் முதலிய ஸோபானங்கள். அரிது—ஈண்டுத்தடைப்படுதலையுணர்த்திற்று. முன்னமென்றது மூவகை வினையுண் முன்னர்த்தா யனுபவிக்கும்படி நேரிடும் பிராரப்தவினைக்கும், அளந்தறிவளித்தவற்று என்றது கருவிக்குழாங்கட்கும், ஏற்புழிக்கோடலாற் குறிப் பாகுபெயர்களாய் நின்றன. அறிவளந்தெனமாறுக. அறிவு இரண்டாம்வேற்றுமைத்தொகை. உளங்கொளுதல்—அனு பவித்தல். தனது ஸ்வதந்திரமின்மையைக்கண்டோன் பிற ரது ஸ்வதந்திர மின்மையையுங் கண்டு கலக்க மறுவ னென்னுங் கருத்தாற்றனையு மென்றதே யன்றிப் பிறரையு மென்றுதாயினர். மற்று என்பன விரண்டும் அசைகள். அத்தன்மையதாகு மென்றது நிஷ்டை யீறுகியவற்முற் பெறப்படும் பயன்மேற்று.

தனியிடத்திருத்தல் பற்றி இதயக் கலக்க முண்டாதற் கேதுக்களாவன, ஸோதகரது பரிபாக பேதத்தால் வன சரர் விலங்குகள் பறவைகள் ஊர்வன முதலிய ஜங்கமங்க ளானும் தருக்கண் முதலிய |தாவரங்களானும் இடுக்க ணேரிடுமோவெனவெழும் அச்சமும் ஊழ்வினையா லெதிர்ப் படும் அரிவையரது ஆடல் பாடன் முதலியவற்றையும் அவரது வடிவின்கண்ணே நிகழும் இயற்கை யழகொடு ஆடைசாந் தணிகலன் முதலியவற்றையுங்கண்டு வாஸனை பற்றியெழு மயக்கமுமே யன்றிப் பற்பலவாகத் தோன் றும் பஞ்ச விஷயங்களுமாம்.

வீடு கூடுவார்பால் வினைவலியா லெதிர்ப்படும் விஷய வின்பமும் துன்பத்தோ டொருங்குவைத் தெண்ணற்பால

தேயாமென்பதற்கு "கோம்பிக் கொதுங்கி மேயா மஞ்ஞை குஞ்சரங்கோளிழைக்கும் பாம்பைப் பிடித்துப் படங் கிழித்தாங்கப்பணைமூலக்கே தேம்பற் றுடியிடை மான் மடநோக்கி தில்லைச் சிவன்று ளாம்பொற்றடமலர் சூடு மென்னுற்ற லகற்றியதே" எனத் தலை மகன் கூற்றாக அரு ளிய திருவாக்கே சான்று. (௩௫)

பாவிக்கின் மறுதிவேண்டும் பயனில்லை கரணை நீத்துப், பாவிப்ப னென்னிலென்ன பழுதுள பாகவத்தாற், பாவிக்க வொண்ணுதென்று பாவிப்ப னென்னினீயென், பாவிக்க வேண்டா வாண்ட பரனருள் பற்றினோர்க்கே.

(இ—ள்.) இதயக் கலக்கத்தை யொழித்த வழியும் பாவனாதீதமாய் நின்று ஸாதகஞ் செய்யும் ஆற்றலில்லா தார் வேதாகமங்களின் விளம்பியவாறே இறைவன துண் மையைப் பாவித்து நின்று ஸாதகஞ்செய்து பயனடைய வொண்ணுதோ வெனின் பாவனை மனமுதலியகரணங்களா லன்றி யமையா. கரணங்க ளெல்லாங் கடந்து நின்ற கறைமிடற்றன் கரண வியாபாரமாகிய ஸகலாவஸ்தை யிற் காட்சிப்படுவானு மல்லன். கரணங்களை யொழித் துப் பாவிக்கிற் பயன்படாதோ வெனின் கரணங்களை யொழித்த வழி தவத்தொடு வாழ் நாளை வீழ்நாளாக்குங் கேவலம் வந்து தலைப்படு மாகலின் அதனினு மிக்க கேடு யாதுளது. கரணங்களானுயபாவனையாற் கிடைக்கத் தகாத வனென்று பாவித்தல் பழுதின்றிப் பயனளிப்ப தன்றோ வெனின் எவ்வாற்றானும் பாவனை கரணகாரிய மென்னும் ஊகமின்றிப் பிதற்றுகின்ற பேதாய் நின்னறிவிருந்தவாறெ ன்னே. அன்பா னினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்தவடிவொடு விரைந்து சேறலுடையா னென் பது தோன்ற மலர் மிசையேகினுனென் றருளிய தெய்வப் புலவர் செஞ்சொல்லானும் பாவனை வேண்டுவதாய்த் தெரு

ளப்படுதலிற் பாவிக்கவேண்டுவ தொருதலையன்றேவெ னின் அஃது சரியை கிரியா யோகங்களால் லவ்வானுபவ மாகும் அவனது கருணைப்பிரவாகத்தை யெடுத்துக்காட்டி மாணடி சேர்தற்கு ஊக்க முண்டாகும் வண்ணமேயன்றி அடி சேர்தற்குரிய வுபாயமாக வருளிய தன்ருகலான் ஞானோபதேச நெறியைக் கடைப்பிடித்து நிற்பார்க்குப் பாவனை வேண்டுவதின் றென்பதாம்.

பாவிக்கின்—பாவிக்கவேண்டின். பழுதுள வென்புழி துவ்வீறுவிகாரத்தாற் ருெக்கது. பாவகத்தாற் பவிக்க வொண்ணு னென்பது பாவிக்க வொண்ணுனென நீட்டல் விகாரம் பெற்றது. நீயென் என்றது இகழ்ச்சிக் குறிப்பு. இறுதிவினை ஏற்குமாறு வருவிக்கப்பட்டது.

இந்நான்கு செய்யுட்களும் மந்ததர பக்குவிகட் குணர்த்தியவாறு. (௩௪)

**ஒன்றிரண் டாகியொன்றி னொருமையா மிருமையாகி, யொன்றிலொன் றழியுமொன்ற தென்னினொன் ருகாதீயி, னொன்றிரும் புறழினன்று முயிரினைந் தொழிலும் வேண்டு, மொன்றி நின்  றுணருமுண்மைக் குவமையா ணவத்தோ டொன்றே.**

(இ—ள்.) பாவனாதீத நெறியாற் பெறப்படுகின்ற முக்தி யிலக்கணத்தைப் பல்லோரும் பலவாருக மொழிகின்றமை யான் அவற்றுள் உண்மையாவதிஃதென வுணர்த்தவேண்டு மெனின் ஓரேமுதலாகிய சிவமே பலவாகிய ஆன்மாக்களாக வுந் தோன்றி நின்று மீளச் சிவத்தொடு சேர்ந்து சிவமாய் விடுமென்னிற் பெறுவானும் பேறுமின்மையானும் ஆன்மாக் கள் வெவ்வேருகவே யுளவாகி நின்று பக்குவத்தாற் சிவத் தொடு சேர்ந்து சிவமாய் விடுமென்னிற் பெறுவானின் மையானும், ஆன்மாக்களும் சிவமும் முக்தியினும் வெவ் வேருகவே யிருக்கு மென்னிற்பேறின்மையானும், அக்கினி

யைச் சேர்ந்த அயத்தைப்போல ஆன்மாக்கள் சிவத்தொடு சார்ந்து சிவாகாரமாய் விடுமென்னின் அவ்வயத்தின் மாட்டுத் தஹனசக்தியாண்டும் நிகழ்தலே யொப்ப ஆன்மாக்கண் மாட்டு ஐந்தொழிற் சக்தியாண்டும் நிகழாமையானும் அவற்று ளொன்றேனும் உண்மையாவதன்று. ஆயின் மற்றென்னையோ உண்மையாவதெனின் ஸ்படிகத்தைப்போலச்சார்ந்ததன் வண்ணமாந்தன்மையினையுடைய ஆன்மாக்கள் பெத்ததிசையிற் பிறப்பிருப்பிறப்புக்களானுய வரம்பில் துன்பத்தை நிரதிசயமாகப்பெறுவிக்கும் அறியாமையைத் தமக்கியற்கையெனக்காணுமாறு ஆணவத்தோ டத்துவிதமாய் நின்றதையொப்ப முத்தித் திசையிற் பிறவி யொழிதலானுய வரம்பிலின்பத்தை நிரதிசயமாகப் பெறுவிக்கும் பூரணவறிவைத் தமக்கியற்கை யறிவெனக் காணுமாறு அருளோடத்துவிதமாகி நிற்றலே முத்தியிலக்கணத்தி னுண்மையாகுமென்பதாம்.

சொற்பல்காமைப் பொருட்டுப் பயனின்மைகளை இலக்கணமாகாமைகளி னடக்கி ஒருமையாம், ஒன்றழியும், ஒன்றாகாவென ஓதி யொழிந்தார்.

ஒன்றாகாவென்றது ஈண்டு அத்துவித மாகாவென்னும் பொருட்டு. ஒன்று முதனிலைத் தொழிற்பெயர். ஏகாரம் தேற்றம்.

உயிரினைத் தொழிலும் வேண்டுமென அவையின்மையை யுணர்த்திநின்ற ஏதுவானும் அதற்கேற்பத் தீயினென்னும் உவமைக்குச் சிவத்தி னிடத்தெனக் கொள்ளப்பட்ட உவமேயத்தானும் ஏனைய மறுப்புக்களில் ஒன்றிரண்டாகியென்பது முதலிய கூற்றுக்கள் சிவமும் ஆன்மாவுமெனப் பொருடந்து நின்றன.

ஐந்தொழிலின்மையை ஏதுவாக்கிப் பிறிதொடுபடாமையைக் காட்டி ஆணவத்தோ டொன்றுதலாகிய உவமையின் வைத்துத் தன்மதம் நிறுத்தியதனால் ஒன்றி நிற்றற் கிடமாகிய உவமேயம் அருளென்பதாயிற்று.

உணர்தற்குப் பயன் அவாய் நிலைபாற் பெற்றும். உவமானவுவமேயங்கள் தம்மின் முரணுந் தன்மையுடைத்தாகலான் அதற்கியைய உவமேயத்து உணருமென்னும் வினைக்கும் வினையாளுக்கும் பயனுக்கும் எதிர்மறைகள் உவமானத்துக் கொள்ளப் பட்டன.

அறியாமையாளுருந் துன்பத்தை நிரதிசயமாக்காண்டல் அனைவர்க்கும் ஸ்வானுபவமாதலின் வைத்து அறிவாளுக்கும் இன்பத்தை நிரதிசயமாக் காண்டல் உண்மையாமென்பது பக்குவிகள் ஊகத்தா னுணர்தற் பாற்று.

தஹித்தற் சக்தி ஒன்றனையேயுடைய தீயின்மாட்டொன்றிய இரும்புவமையை மறுத்தற்கு உயிரின் ஐந்தொழிலும் வேண்டுமென்றருளியது தீக்குவமேயமாக் கொள்ளப்பட்ட சிவபெருமான் ஐந்தொழிற் சக்தி யுடையனுகலின்.

ஈசன் றன்றொழி னடாத்துமேனி தனக்கெனக்கொண்டு தானே என்றருளியதனோடு முரணுகாவாறு ஈண்டு உயிரின் ஐந்தொழிலும் யாண்டும் வேண்டுமென விரித்துரைத்தலே யமைவுடைத்து.

இச்செய்யுள் பொதுவதிகாரத்துப் பல்லோரும்பலவாறுகக் கூறுவதாகிய முக்தி யிலக்கணங்கட்கும் அவற்றைமறுத்து ஸித்தாந்தமாய் நாட்டிய முக்தி யிலக்கணத்திற்கும் சிறப்பிலக்கணம் செப்பியவாறு. (௩எ)

அழிந்திடும் பாசமென்னி னித்தமென் றுரைத்தல் வேண்டா, வழிந்திடா தென்னின் ஞானமடைவது கருதல்வேண்டா, வழிந்திடுஞ் சத்தி நித்த மழிந்திடா வொளியின் முன்ன, ரழிந்திடு மிருளுநாச மடைந்திடா மிடைந்திடாவே.

(இ—ள்.) முத்தான்மாக்கண்முன் அறியாமை காரணமாயெடுத்த வுடம்போடிருக்கக் காண்டலானும் காரியங்கழுங் காறுங் காரண மழிந்தில வென்பது கருதலளவையாற்

போதருதலானும் அவர் பூரணஅறிவைத் தமக்கியற்கையறி வெனக் காண்பரென்பது பொருந்துமாறெங்ஙனெனின் வேதசிவாகமங்கள் பாசத்தை நித்தியமென விளம்பலான் அவ்வறியாமை அழிவெய்துவதன்று. அவற்றுள், விதித்த வாறே விவேகிகள் வீடடைய விழைதலான் அழிவெய்தா திருப்பதுமன்று; அதனல் அவ்விருதிறனுமுளதெனப்படும் அறியாமையானது கதிரொளியின்முன்னர்க்காரிருள்முதல் கெடாமலும் உளதெனத் தோன்றாமலும் அடங்கிக் கதி ரொளியோடு கூடிய கண்ணொளியைச் சற்றேனு மறைத் தற்கேலாததாக வலியழிந்து கிடத்தலைபொப்பத் திருவரு ளின் முன்னர் முதல்கெடாமலும் உளதெனத் தோன்றா மலும்அடங்கிஅவ்வருளொடுகூடிய ஆன்மஞானத்தைச்சற் றேனு மறைத்தற்கேலாததாக வலியழிந்துகிடக்கும் அங் ஙனம் வலியழிந்து கிடந்தமைபற்றிக் கால நியதிகளின் படி நிலைபெறுவதாகிய உடம்பு உள்ளதாகியும் இல்லாததே யாம். ஆகலான் முக்தான்மாக்கள் பூரண அறிவைத் தமக் கியற்கை யறிவென காண்ப ரென்பதற் கையமின் றென் பதாம்.

அங்ஙனம் வலி யழிந்து கிடந்தமைப்பற்றி யென்பது முதல் குறிப்பெச்சம்.

ஆணவமுள்வழி ஏனைய ஏன்றுமலங்களு முளவாதலும் அஃதில் வழி இருந்தும் இலவாதலும்பற்றி ஆணவம் பாச மெனப் பந்தவாதனமாகிய சிறப்புப்பெயர் பெற்றது.

அறியாமையேகட்டும் அறிவுடைமையே வீடுமாகலின் ஞானமடைவது கருதல் வேண்டாவென்றார்.

நித்தமாகிய பாசம் அழிந்திடா வென விரித்துரைக்க. ஒளி யென்றதற் கேற்ப உவமேயத்துத் திருவருளென்பது வருவிக்கப் பட்டது.

இஃது சொற்பொருட் பின்வருநிலை. (௧அ)

எல்லையில் பிறவிநல்கு மிருவினை யெரிசேர் வித்தி, னெல்லையினகலுமேன்ற வுடற்பழ வினைக ளூட்டுந், தொல்லையின் வருதல்போலத் தோன் றிரு வினையதுண்டே, லல்லொளி புரையுஞானத் தழலுற வழிந்துபோமே.

(இ—ள்.) அறியாமை காரணமாக உடம்பெடுத்தது வினைப்பயனை அநுபவித்துத் தீர்த்தற்பொருட்டாகவன்றே அங்ஙனமாக அவ்வினைப்பயனுள்ளளவும் உடம்பு உள்ள தாகவே அநுபவமாவதன்றி உள்ளதாகியும் இல்லாததா மெனல்லைக்குமாறெங்ஙனமெனின் புண்ணியபாவங்களென் றிருதிறப்பட்ட மூவகை வினைகளுள் அளவிடற்கரிய பிறவி களையளிப்பதாகிய ஸஞ்சிதமானது பூதாக்கினியால் வறுக் கப்பட்ட விதையோடொப்ப ஞானசிரியரது சக்ஷுதீக்ஷை யைப் பெற்ற பக்குவான்மாக்கள் ஸ்வதந்திரமின்மையை ஸ்வாநுபவமாகக் காணுங் காட்சியாகிய ஞானக்கினியால் உடனே வலியழிந் தொழியும். அவ்வாறொழிதற்கு முன் னர்த்தாய் அவ்வான்மாக்கள் அநுபவித்துத் தொலைக்கும் படியாக நியதிசெய்தான பிராரப்தமானது அதன்பொருட் டெடுத்துக்கொண்ட உடம்புவாயிலாகவந்து தாக்குவதாயி னும் அருளோடத்துவிதமாகி நிற்கும் அம்முக்தான்மாக் கட்கு அவை யனுபவமாகா: தொன்றுதொட்டுப் பயின்று வந்த வாஸனைபற்றி ஒருகால்அநுபவமாகப்பிராரப்தவினை யும் அது வாயிலாக ஆகாமியவினையும் தோன்றுமேல்அவற் றிற்கேதுவாகிய அறியாமையானது காரிருட்குக் கதிரொளி போலும் அவரதுள்ளத்தே ஸ்வாநுபவமாகவிளங்குகின்ற ஞானக்கினியால் தவிக்கப்பட்டொழிய, காரணங் கெடக் காரியங் கெடுமென்னு முறைமைபற்றி அவ்வினைகளும் ஒழி யும். அவ்வாறு மூவகைவினைகளும் ஒழிவதனால் அவ் வினைப்பயன்களோடு முயங்கும்படி மயங்கச் செய்யும் மாயையும் வலியழிந்தொழியும். ஆகலான் அம்மாயையின்

காரியமாகிய உடம்பு உள்ளதாகியும் இல்லாததாமெனல் ஒக்குமென்பதாம்.

அவ்வாறுமூவகைவினைகளும் ஒழிவதனாலென்பதூஉந்தல் குறிப்பெச்சம்.

ஒல்லையின் அகற்றற்கேது வருவிக்கப்பட்டது. தோன்றிருவினையதுண்டேல் என்றமையான் ஆகாமியம் உளதாதல் ஒருதலை அன்றென்பதாயிற்று. ஆகவே அவ்வினையை அவினாபாவமா யுடன்கொண்டுவருவதாகிய பிராரப்தவினை அனுபவமாதலும் ஒருதலை அன்றென்பது தானே போதரும். இருவினை தோன்றற்கேதுவாகிய விருப்பு வெறுப்புக்களை இருவினை என்றார்.

அல்லென்புழி குவ்வுருபு விகாரத்தாற் றொக்கது. அல்லொளிபுரையுமென்னும்உவமைக்கேற்ப அறியாமையானது ஞானப்பிரகாசத்தானழியுமென்னாது ஞானத்தழலுற வழிந்துபோமென்றதென்னையோவெனின் ஞாயிற்றின்கிரணத்தால் உலர்த்தப்பட்ட சருகேயாயினும் அக்கிரணம் காந்தக்கல்வாயிலாக அக்கினியாகியே அச்சருகைத் தகிப்பித்தலையொப்பத் திருவருளால் வலியழிக்கப்பட்ட அறியாமையேயாயினும் அவ்வருள் ஸ்வானுபூதிமான்களது சிந்தனைவாயிலாக விளங்கித் தோன்றியே அவ்வறியாமையை அழிக்குமாகலின்.

திருவருள் சிந்தனை வாயிலாக விளங்கித் தோன்றுதலாவது—தோன்றா தொழிந்த பிரபஞ்சோபாதியும் அதனானாகும் விருப்பு வெறுப்புக்களும் மெலிந்தாயினும் மீட்டுத் தோற்றுகைக்குக் காரணம் அறியாமையே யாமெனக் கண்டகற்றுமாறு சிறப்பு வகையான் விளங்கித்தோன்றுதல்.

வாஞ்சிதஒழிவைப் பொதுவதிகாரத்து 'அகலாமுனமருவுமிருபயனு மொருகாலத் தருந்த' என்றது பக்குவிகள் நிஷ்காமியச் சரியை கிரியா யோகங்களைச் செய்தலின்மேல் வைத்துப் பொதுவகையானும், ஈண்டு 'எல்லையில் பிறவி

நல்கு மிருவினை பெரிசேர்வித்தி னெல்லையினகனும்' என்றது தீவிரதரபக்குவிகள் ஞானாசிரியரது சக்ஷுதீக்ஷையைப் பெற்ற மாத்திரையானே தனது ஸ்வதந்திரமின்மையை ஸ்வானுபவமாகக் காணுங் காட்சியின்மேல் வைத்துச் சிறப்புவகையானும் அருளிச்செய்ததா மென்க.

இவ்விருசெய்யுட்களும் முக்தித்திரையிற் பாசநிகழ்ச்சியி னியல்பை யுணர்த்தியவாறு. (நடகூ)

---

இனிப் புனிதநாமத் தியல்பினை
அருளிச்செய்கின்றார்.

பந்தமா னவையறுத்துப் பவுதிக முழனுமெல்லைச், சந்தியா தொழியாநிங்குத் தன்மைபோல் வினையுஞ்சாரு, மந்தமா திகளிலாத வஞ்செழுத் தருளினலே, வந்தவா றுரைசெய்வாரை வாதியா பேதியாவே.

(இ—ள்.) உடம்புஉள்ளதாகியும் இல்லாததாமெனல் ஸதா நிஷ்டர்க்கே யன்றி முக்தான்மாக்களெவர்க்கும் ஒக்குமோ வெனின் முக்தான்மாக்களில் அரசாட்சி முதலிய வியவகாரங்களையுடையார்க்கு அவ்வியவகார முள்ளளவும் பெருங்காயம் வைத்தெடுக்கப்பட்ட செப்பின்கட் கந்தத்தைப்போலப் பிராரப்தபோகமும் அதுபற்றி ஆகாமிய வினையும் மெல்லியவாஸனா ரூபமாய்த் தோன்றுவனவாம். ஆயினும் அவ்வாஸனாக்ஷயத்தின்பொருட்டு ஸ்ரீபஞ்சாக்ஷர வர்க்கத்துள் ஐந்தெழுத்தும் ஓரெழுத்தா யமைந்த மனுவை அருளிறை யடிகளாற் பெறப்பட்டவாறே அனுஷ்டிப்போரைப்பிராரப்தபோகம் உபாதிப்படுத்தவும் ஆகாமியம் ஜீவாகாரமாகச் செய்யவு மாட்டா ஆகலான் அவர்க்கும் உடம்புஉள்ளதாகியும் இல்லாததேயா மென்பதாம்.

ஆகலான் அவர்க்கும்உடம்புஉள்ளதாகியும் இல்லாததேயாமென்பது குறிப்பெச்சம்.

பந்தமானவை—பஞ்சபாசங்கள். பௌதிகம் செய்யுளை ப்பற்றிப் பவுதிக மெனத்திரிந்தது. பவுதிகம்—பூதகாரியமென்னும் பொருட்டாய் ஸ்தூல உடம்பினை யுணர்த்திற்று.

பவுதிக முழுதுமெனவே பெத்த திசையிற்போல உலக விவகாரங்களில் ஸங்கற்பித்துச் செல்லாது பாலரைப் போலப் பயிலுவனென்பதூஉம், உழனு மெல்லைச் சந்தியா தொழியாதிங்குத் தன்மைபோல் வினையுஞ் சாருமெனவே அப்பயிற்சிபற்றிக் கரணேந்திரியங்கள் வாஸனாரூபமாய்ச் சலிக்கு மென்பதூஉமாயிற்று.

சந்தியா தொழியாமைக்கு வினைமுதல் அவாய் நிலையாற் பெற்றும். வினையென்றது ஏற்புழிக்கோடலான் ஆகாமியத்தின்மேற்று. அவ்வும்மை இறந்தது தழீஇயது. ஏகாக்ஷரமென்பார் அந்தமாதிகளிலாத வஞ்செழுத் தென்றார். அருளினாலே—அருளிறையடிகளாலே. வந்தவாறு—வாதித்தல் பேதித்தல்களின் வலிமை எளிமைகளை நோக்கி அதற்குரிய பரிஹாரமா யனுஷ்டிக்கும் வண்ணம் உபதேசித்த நெறி. இவ்வேகாக்ஷரத்தை அர்த்த ரூபமாயாதல் தியான ரூபமாயாதல் அனுஷ்டித்தலே யன்றி மத்திமையால் அனுஷ்டிப்போரையுந் தழுவற் பொருட்டு உரைசெய்வாரை என்றார்.

பிராரப்தபோகம் உபாதிப்படுத்தலாவது, விரும்பியவற்றைப்பெறுதல் வெறுத்தவற்றைஒழிதல் கைம்மாறளித்தல் என்னும் இவை ஸங்கற்பித்தவாறே ஸித்திக்கு மளவும் உள்ளம்பதைத்தலாகிய ஆகாமியத்தை அளித்தல்.

அவ்வாகாமியம் ஜீவாகாரமாகச் செய்தலாவது, ஸங்கற்பித்தவாறே ஸித்தியாகும்படி சிவாகார நிலையிற் பிறழ்தலையும் அறியாவண்ண முயல்வித்தல்.

இவை அணுகாவென்பார் வாதியா பேதியாவென்றார்.

இவ்வனுபூதியுடையாரை விஞ்ஞானகலரெனச் சிவாகமங்களும், பிரம வித்துக்களென உபநிஷத்துக்களும் இயம்புவ. (௬௰)

**திருவெழுத் தைந்திலான்மா திரோதமா சருள் சிவஞ்சூழ், தாநடு நின்றதொன்றாந் தன்மையுந் தொன்மையாகி, வருமத மிகுதியாலே வாசியி லாசையின்றிக், கருவழிச் சுழலுமாறுங் காதலார்க் கோதலாமே.**

(இ—ள்.) முக்தான்மாக்களே வாஸனாக்ஷயத்தின்பொருட்டு ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை அனுஷ்டிக்க வேண்டுமென வரின் முக்தியின் பொருட்டு முயல்வோராகிய ஸாதகர் பிரபஞ்ச வாஸனையின் நடிப்பாற் றடைப்படாது ஸாதித்துப்பெறுமாறு அனுஷ்டிக்கவேண்டுவ தொருதலையன்றோ ஆகலான் அவர் அனுஷ்டித்தற்குரிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தினியல்பை அருளிச்செய்ய வேண்டுமெனின் ஸாதகர் ஸ்ரீபஞ்சாக்ஷர வர்க்கத்துள் அருளாக்ஷர பதியக்ஷரங்கள் ஓர் பக்கத்தும் திரோபாவாக்ஷர மலாக்ஷரங்கள் மற்றோர் பக்கத்தும் சூழும்படி ஆன்மாக்ஷரம் நடுவே நிற்பதாகிய மனுவை குருபதேசமாகப்பெற் றனுஷ்டிக்கின் ஸாதக நெறியிற் றடையறச் செல்லுதன்மாத்திரையே யன்றி அச்செலவினுற்றிருவருளோ டத்துவிதமாகிநின்று சிவானுபவத்தையும் பெறுவர். அத்தகைய மனுவை தொன்று தொட்டுவரும் ஆணவ திரோதங்களின் வியாபகத்துட்பட்டமையால் வீட்டின்பத்தை விழையாது பிறப்பிறப்பிற் சுழற்றுவதாகிய விஷயவின்பத்தையே விழைதலுறுவார்க்கு விளம்பலாகா தென்பதாம்.

ஒன்றாந்தன்மை—திருவருளோடத்துவிதமாகுநிலை. அத்துவிதமாகநிற்பார்க்குச் சித்திக்கும்பயன் சிவானுபவமென்பது மேலே பெறப்பட்டமையின் ஈண்டும் விரித்திலர். ஒன்றாந்தன்மையுமென்னும் உம்மை—ஸாதக நெறியிற் றடை

யறச் செல்லுதன் மாத்திரையேயன்றி யென இறந்தது தழீஇயிற்று. வருமென்றது ஒன்றுந் தன்மையு மென்றத னேடுஞ்சென்றியையும். சுழலும்—சுழலச்செய்யும். மாறுங் காதலார்—வீட்டு நெறியோடு முரணுவதாகிய விஷயக்காத லார். ஓதலாமே யென்றது "ஆருரானை மறக்கலுமாமே" என்றருளினாற்போல எதிர்மறைப் பொருள் பயத்தலு டைத்து. (சக)

ஆசறு திரோதமேவா தகலுமா சிவமுன்னாக
வோசைகொளதனினம்மே லொழித்தருளோங்கு
வாசியையருளுமாயா மற்றது பற்றுவுற்றங் [மீள
கீசனி லேகமாகு மிதுதிரு வெழுத்தினீடே.

(இ—ள்.) அத்தகைய ஸ்ரீ பஞ்சாக்ஷரவனுஷ்டானத்தாற் பெற்ற சிவானுபவத்தினின்றும் பகிர்முகப்பட்டுழிஅவ்வனு பவத்தைப்பிரபஞ்சவாஸனையாற்றடைப்படாதுவாதித்து அனுபூதியாகப் பெறும்பொருட்டு அனுஷ்டித்தற்குரிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தி னியல்பாவதியாதெனின் மேற்கூறிய வாறே பதியக்ஷரத்தை முன்னாகக்கொண் டனுஷ்டிக்கப் படும் அம்மனுவில் ஆன்மாக்ஷரத்தின் பின்னாக நின்ற திரோபாவாக்ஷர மலாக்ஷரங்களைநீக்கிஆண்டும் அருளக்ஷர பதியக்ஷரங்களையே நிறுவி ஞானாசிரியர் உபதேசித்தருளு வர். நித்தியமாகிய அம்மனுவைக் கடைப்பிடியாக் கொண் டனுஷ்டிக்கிற் பகிர்முகத்தும் பிரபஞ்சவாஸனை பற்றறக் கழியும்; கழியவே அவர் அருட்பூரணத்தான் வியாபிக் கப்பட்டு அதனே டத்துவிதமாகி நின்று அப்பூரணத் தின் வேறுக்காண வொண்ணு த சிவபூரணத்தொடும்அனன் னியமாந் தன்மைப் பெருவாழ்வை ஸ்வானுபூதியாகப் பெற்றுய்வர். ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தினது ஆற்றல் இத்தன் மைத்தென்றறிக வென்பதாம்.

பகிர்முகத்தும் பிரபஞ்சவாஸனை பற்றறக் கழியுமென் பது குறிப்பெச்சம்.

நம் ஒழித்து மீள மேல் வாசியையருளும் மாயா மற்றது பற்றுவுற்று அருளோங்கும் அங்கு ஈசனிலேகமாகும் திருவெழுத்தினீடு இதுவெனக்கொண்டு கூட்டுக.

ஆசுறு திரோதமேவாதகனுமா சிவமுன்னுக வோசை கொளதனின் என்ற தனுவாதம். குற்ற மெனப்படும் ஆசு—ஆகுபெயரான் மலமெனவும், உறுதிரோதம்—அம் மலத்தைச் செலுத்துமாறு அதனை நிலக்களமாக்கொண்ட திரோதமெனவும் பொருடரும். அகனுமா—அகனுமாறு. அகனுதல்—ஏற்புழிக்கோடலான்வியாபகத்தினீங்கி வியாப்பியமாதன் மேற்று.

ஈருடம்பிற்கோ ருயிராயது செய்யுணடைபற்றி. மீள வென்றது ஈண்டுப் பதிலாதன்மேற்று.

மேல்வாசி—ஆணவ திரோதங்களைப்போல மறையாது உண்மையை விளக்கு மேம்பாடுடைய வாசி. அஃது அனுக்கிரஹகாலத்தும் நிலைபெறுவதாகலின் மாயா மற்றதென விசேஷித்தார்.

அருளுதற்கும், அது பற்றுவுற்றங்கீசனிலேக மாதற்கும் வினைமுதல்கள் ஏற்குமாறு வருவிக்கப்பட்டன. அங்கு—அருட்பூரண நிலைக்கண்ணே. ஏகமாதல்—அனன்னியமாந் தன்மைப் பெருவாழ்வு பெறுதல். ஈடு—ஆற்றல். (சஉ)

இனி அணைந்தோர் தன்மையை

அருளிச் செய்கின்றார்.

தீங்குறு மாயைசேரா வகைவினை திரிவிதத்தா,
னீங்கிட நீங்காமூல நிறையிரு ளிரியநேயத்,
தோங்குணர் வகத்தடங்கியுளத்துளின் பொடுங்க
நேரே, தூங்குவர் தாங்கியேகத் தொன்மையிற்
றுகளிலோரே.

(இ—ள்.) முத்தான்மாக்களில் ஸ்ரீபஞ்சாக்ஷர வனுஷ்டானத்தாற் பாசவாஸனை நீங்கித் திருவடி பெற்றோர் மாத்தன்

மையராய் விளங்குவ ரென்னின் பிறவிப் பிணியிற் சுழலும் படி பிரபஞ்சத்தின் மயங்கச் செய்யும் அசுத்தமாயை யானததணுகாவாறு ஸஞ்சித முதலிய மூவகை வினைக ளும் தீக்ஷாஸம்ஸ்கார முதலிய மூவிதங்களாற் கெட் டொழிதலானும் அம்மாயா மல கன்மமலங்கட்குக் கார ணமாயுள்ள ஆணவமலமானது வாய்மை ஞானத்தான் வலி யழிந்தொழிதலானும் பெத்தமுத்தி யிரண்டினுந் தமக்குத் திருவருளாற் கிடைத்த வுபகாரத்தை அயராமையானுகிய அன்பினால் அவ்வருட் பூரணத்தோடத்துவிதமா யடங்கப் பெற்றுப் பண்டைப்பரிசாகிய வரம்பிலின்பத்தின் மூழ்கி ஸதா நிஷ்டராயினருட் பாச வாஸனை முற்றினு நீங் கப் பெற்றோர் புளியம்பழமுந் தோடும்போலத் திருமேனி தாங்கினவராய் வரம்பி லின்பகதினின்றுந் தன்னுலாதல் பிறராலாதல் மீளாத சிவானுபூதிச் செல்வராய் வாழ்வ ரென்பதாம்.

நிறையிருளிரிய நேயத்தோங்கு ஏகவுணர்வகத் தடங்கி உளத்தில் தொன்மையி னின்பொடுங்க துகளிலோர்தாங்கி நேரே தூங்குவரெனக் கொண்டு கூட்டுக.

தீங்குறு மாயைசேரா வகைவினை திரிவிதத்தா னீங்கிட நீங்காமூல நிறையிருளிரியவென்றது அனுவாதம். மலகன் மங்களோடு விரவிநின்று மயக்கிப் பிறவிப் பிணியை விளைக் கும் அசுத்தமாயை யென்பார் தீங்குறுமாயை யெனவும், அம்மலகன்மங்கள் தாக்காவாறொழியவே மயக்குதற்குவழி யின்றென்பார் சேராவெனவும் செப்பினர். திரிவிதத்தானீங் கல் மேலே விளக்கினமையாற் காண்க.

கலையாதிமண்ணாந்தமாயுள்ளகருவிகள்கூடிய வழிக்கரந்து வியாபரித்தலும் நீங்கிய வழி நிறைந்து வியாபரித்தலுமாய் ஆன்மாக்களை விட்டொழியாமையானும் ஏனைய மலங்கட் கெல்லாங் காரணமாகலானும் பதிபசுபாசபேதங்களைச்சற் றுங் காணவொட்டாது ஆன்மாக்களது ஞானக்கண்ணைக்

காசமாய் மூடலானும் நீங்காமூல நிறையிருளென்றார். அத்தன்மையதாயினும் முக்தித்திசையிற்கதிரவன்முன்காரிருள் போலச் சிவப்பிரகாசத்தின்முன் வலியழிந்து சற்றுந் தோன்றாதடங்கிக்கிடத்தலான் இரியவென்றார்.

ஒன்றாயேகவுணர்வு—ஸர்வவியாபகமாகியஅருட்பூரணம். வரம்பிலின்பமாயினும் அஃது ஸ்வாநுபவமாதற்கு இடம் உள்ளமாகலான் உளத்திலின் பொடுங்கவென்றார். குற்றமென்னும்பொருட்டாயதுகள்—பாசவாஸனை. தாங்குதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. தடையின்றி நித்திரை செய்தலென்னும் பொருட்டாய நேரே தூங்குதல்—தன்னுலாதல் பிறராலாதல்பிரபஞ்சத்தைக்கண்டு நிலையிற் பிறழாத ஸதாநிஷ்டராகி உட்புறம்பென்னும் வேற்றுமையற நின்மலதுரியாதீதாவஸ்தையிற் சிவாநுபூதிச்செல்வராய் வாழ்தல்.

ஜாக்கிராவஸ்தையை யொத்த சொப்பனாவஸ்தையை நீங்கியவழிப் பெறப்படும் சுழுத்தி முதலிய அவஸ்தைகளில் அறியாமையே யன்றி விஷயங்கள் ஒன்றும் அநுபவமாகாமையை யொப்ப நிஷ்டையில் உண்மையறிவே யன்றி விஷயங்கள் ஒன்றும் அநுபவமாகாமையின் நிஷ்டைக்குத் தூங்குதல் ஆகுபெயராயிற்று. ஈண்டுச் சுழுத்தியினும் விஷயந்தோன்றாததாய் உவமித்ததை உற்றுணர்வார்க்கேயன்றிப் பைசந்தியுந் தோன்றாத பொதுவியல்பின் மேற்றாக் கொள்க.

இவர்க்கு மாயேய மலம் சுத்தமாயா காரியமாகியபடியே பிராரப்த காலவரை யறையளவுந் தெக்த படம்போனிற்றலானும் திரோதைமலம் அந்நிலையிற் பிரபஞ்சத்தைச் சற்றுந் தோன்றாவாறு மறைத்து அநுகூலமாய் நிற்றலானும் மும்மல மாத்திரைக்கே ஒழிபு கூறப்பட்டன.

ஞானத்தின்ஞானமாகிய இவ்வநுபூதியுடையாரை அநுஸதாசிவரெனச் சிவாகமங்களும் பிரமவரிஷ்டரென உபநிஷத்துக்களு நவில்வ. (௬௩)

குறிப்பிடங் காலந்திக்கா சனங்கொள்கை குலங் குணஞ்சீர், சிறப்புறு விரதஞ்சீலந் தபஞ்செபந் தியானமெல்லா, மறுத்தற வொழிதல் செய்தன் மருவிடா மன்னுஞ்செய்தி, யுறக்குறு பவர்போல் வாய்மை யொழிந்தவை யொழிந்துபோமே.

(இ—ள்.) ஸதா நிஷ்டராயினருட் பாசவாஸனை முற்றிலுநீங்கப் பெறுதோர் எத்தன்மையராய் விளங்குவரென்னிற் பாசவாஸனை தேய்ந்து தேய்ந்தொழிய ஆன்மாசுத்தமாகித் திருவடியைப் பிரியாது வாழும் வண்ணம் ஆன்மஞானமானது சென்று சென்று கூடும்படி ஸதா நிஷ்டையிற் பயில்வோர்க்கு உண்மையாகிய சிவபோகம் ஒழிந்தொழிந்தவை யனைத்தும் அதிநித்திரையுடையாரது கைப்பொருள்போலநழுவிப்போம் அதனால்அவர் ஸதாநிஷ்டையினின்றுந் தாமாகவே வெளிப்படாதோராய்ப் பிறரான் வெளிப்பட்டுழியும் பிறரது இச்சையே காரணமாகச் சிலவற்றைச்செய்வரென்பதேயன்றிக் குலாசாரமுதலியவற்றை முற்றிலுங் கடப்பாடாகப்புரிதலாதல் வேண்டாவெனச்சங்கற்பித் தொழிதலாதல் செய்யாரென்பதாம்.

வாய்மை யொழிந்தவை உறக்குறுபவர் போலொழிந்துபோம் குலங் கொள்கை குணஞ் சீலஞ் சிறப்புறு விரதஞ் சீர் செபந் தியானந் தபங் குறிப்பிடங் காலந்திக்காசனம் மன்னுஞ் செய்தியெல்லாம் அறமறுத்தொழிதல் செய்தன் மருவிடாவெனக் கொண்டு கூட்டுக.

உறக்கமென்பது உறக்கெனமரீஇயிற்று: உறக்குறுபவர் கைப்பொருள்போலென விரித்துரைக்க. சொப்பனத்தைக் கடந்த பெத்தரும் ஸுஷுப்தியின்றேனென்கின்றமையால் அவர் மாட்டும் உண்மையாவது ஜாதியினாற் பிறிதன்றாகலின் உறக்குறுபவர்போலென உவமித்தார்.

குலம் அந்தணர்முதலிய வருக்கங்கள். கொள்கை—சைவமுதலிய ஸமயங்கள். குணம்—குலாசாரஸமயாசா

ரங்கள்பற்றி யுண்டாம் விருப்பு வெறுப்பு உதாஸீனங்கள். சீலம். அவற்றிற்கனுகூலமாய்நிகழும் உள்ளொழுக்கமாகிய அன்பு பொறுமை அடக்கம் இரக்கமுதலியன. சிறப்புறு விரதம்—புறவொழுக்கமாகிய ஐம்பொறியடக்கல் கொல்லாமைமுதலியன. சீர்—இவ்விரத சீலங்களால் விரும்பப்படும் விபூதி ருத்திராக்ஷம் காஷாயம் தண்டு கமண்டலம் வியாக்கிராஜனமுதலிய ஸாதனங்கள். செபம்—இவ்வொழுக்க நெறிநின்று அநுஷ்டிக்கப்படுஞ் சரியை. தியானம்—கிரியா யோகங்கள். தபம்—ஞானயோகம். குறிப்பிடம்—இச் சரியையாதிகளை யனுஷ்டித்தற்குரியபுண்ணியஸ்தலங்கள். காலம்—அனுஷ்டானத்திற்கு விதிக்கப்பட்டவமையங்கள். திக்கு—அவ்வுழி நோக்கங் கொள்ளவேண்டுந் திசைகள். ஆசனம்—பத்மம் வீரம் கோமுக முதலியன. மன்னுஞ் செய்தியெல்லாம்—பொருந்துகின்ற இவையனைத்தும்.

சரியைகிரியைகளுட்டலைமைகணோக்கிச் செபந்தியானமென வெடுத்துக்கொண்டாராயினும் இனம்பற்றி அவ்வவற்றின் ஏனையவுங்கொள்ளப்படுவன.

அறவென்றது முற்றிலுமென்னும் பொருட்டு. அது செய்தலென்பதனோடுஞ் சென்றியையும்.

ஒழிதற்கேது மறுப்பெனவே செய்தற்கேது விருப்பென்பது பெற்றும்.

மறுத்தற வொழிதல் செய்தன்மருவிடாவென்றமையால் அதற்குரியவாய் நிற்குங் கிஞ்சித்வாஸனையுடையராகிய வினைமுதல் அவாய்நிலையாற் பெற்றும். (சச)

அகம்புற மென்றிரண்டா லர்ச்சனை புரியுமிந்தச், சகந்தனி லிரண்டுமின்றித் தமோமயமாகி யெல்லா, நிகழ்ந்திடமகிழ்ந்துவாழு நீர்மையார் போலஞானந், திகழ்ந்தகம் புறமெனுத செம்மையார் நன்மையோரே.

(இ—ள்.) ஸதா நிஷ்டையினின்றுந் தாமாக வன்றிப் பிறராலுயினும் வெளிப்படின் அவர் விதி விலக்குக்களை யனுஷ்டிக்கவேண்டுங் கடப்பாடுடையராகாரோ வெனின் போகமோக்ஷங்களில் இச்சித்தவற்றைப் பெறுமாறு எவ்வுலகத்தோருமெய்தி அந்தர்யாக பகிர்யாகமென்னும் இருவகையால் இறைவனை வழிபடுஞ் சிறப்பியல்பினையுடைய இப்பூவுலகத்தின்கண்ணே அறியாமையே வடிவாகி அவ்விருவகை வழிபாட்டிலொன்றேனும் இயற்றுமை மாத்திரையேயன்றி விதிவிலக்குக்களை நினையாது பாவகன்மங்களையுஞ் செய்து கொண்டு அதனுல் நரகவேதனை வருமென்னும் அச்சமுமற்று அறவுஞ்சிறிய நிமிஷானந்தம் பற்றிக் களிப்பொடு வாழுங் கொடியோரை யொப்பத் தோன்றுமாறுநடக்கினும் விதிவிலக்குக்களை யனுஸரித்துச்செய்யும் அவ்விருவகைவழிபாட்டின்பயனுய் ஸதோதயமாக விளங்குகின்ற ஞானத்தால் உட்புறம்பென்பதற யாண்டும் ஒருபெற்றித்தாகிய வரம்பிலின்பத்தினையன்றி மற்றென்றினுந் தோயாத வாழ்க்கையுடையராகலின் அவர்விதிவிலக்குகளை அனுஷ்டியாவிடினும் அனுஷ்டித்தவரேயாவரென்பதாம்.

தமோமயமாகி யிரண்டுமின்றி எனவும் நன்மையோர் செம்மையாரே எனவுமாறுக.

தமோமய மாதல்—அறியாமையே வடிவா யிருத்தல். எல்லா நிகழ்ந்திடல்—விலக்கப்பட்டவற்றையும்அனுஷ்டித்தல். நீர்மையார்போலத் தோன்றுமாறு நடக்கினுமென விரித்துரைக்க. ஏற்புழிக்கோடலான் நன்மை என்றது வரம்பிலின்பத்தையும், செம்மை என்றது நல்லொழுக்க முடைமையையும் உணர்த்தி நின்றன.

இவ்விரு செய்யுட்களானும் இயம்பப்பட்ட ஞானத்தின் யோகமாகிய இவ்வனுபூதியுடையாரை அஷ்டவித்தியேசுவரரெனச் சிவாகமங்களும் பிரமவரியரென உபநிஷத்துக்களு நவில்வ. (௫௫)

அண்டமே விடவனைத்து மனைத்தையு மண்ட மேவிக், கொண்டல்போ லெவையுஞானங் குறை விலா நிறைதலாலே, கண்டதோர் பொருளையந் தக் கருத்தினுற் காணிற்றனே, யண்டநா யகனூர் மேனி யானதே லையமின்றே.

மண்முதல் கரணமெல்லா மறுவசத் தாக்கிஞா னக், கண்ணினி லூன்றியந்தக் கருத்தினுலெவை யுநோக்கி, யெண்ணியஞ் செழுத்துமாறி யிறை நிறை யுணர்ந்துபோற்றல், புண்ணியன் றனக்கு ஞான பூசையாய்ப் புகலுமன்றே.

(இ—ள்.) உற்றநோய் முதலிய வுபாதிகளை யொழித்தற் பொருட்டு உணவாதிகளைக்குறித்து லைதா நிஷ்டையினின் றும் தாமாக வெளிப்படுவோர் உண்பதன்முன் மலர்பறித் திட் டுண்ணவேண்டாவோவெனின் அவர் வெளிப்பட்டுழி உண்ணுதற்கு முன்னும் பின்னும் உண்ணும்போதும் யாண் டும் ஸ்வயம்புவாகிய விசுவலிங்கத்தில் ஞானபூஜை புரி வோரேயாவர் யாங்ஙனமெனின் பூதாகாசமானது தன்னுல் வியாபிக்கப்பட்ட ஏனையநான்கு பூதங்கண்மாட்டுந் தான் வியாப்பியமுமாகி ஒவ்வொன்றினும் உள்ளும்புறம்பும்பூரண மாக நிறைந்திருந்தும் தானேன்றது அவ்வப்பூதவடிவே யாய்த்தோன்றிநிற்றலையொப்பச் சிதாகாசமானது தன்னுல் வியாபிக்கப்பட்ட அப்பூதாகாசமும் உளப்பட உலகுயிர னைத்தின்கண்ணும் தான் வியாப்பியமுமாகி ஒவ்வொன்றி னும் உள்ளும் புறம்பும் பூரணமாக நிறைந்திருந்தும் தான் றேன்றது உலகுயிர்வடிவேயாய்த் தோன்றி நிற்றலான் அவற்றுள் வாலனைபற்றிச்சுட்டவரும் ஒவ்வொரு பொரு ளையும் சிதாகாசத்தின் வடிவாகவே காண்பராகலான் அக் காட்சி சிதாகாசத்தை வடிவாகவுடைய சிவபெருமானுக்கு உலகுயிரனைத்தும் இயல்பாகவே திருமேனியாதலை இனிது விளக்கும். திருமேனியாகுமேல்பிருதுவிமுதலியதத்துவங்க

ளனைத்தையும் தன் கிழ்வியாப்பியமாகச் செய்து அவ்வு ழித்தாரகமாகப்பெறும் திருவருளோடத்துவிதமாகி நின்று தன்பணியாவையும் அவ்வருட்பணியாக்கண்டு அக்காட்சி யால் இருதலைமாணிக்கமெனப்பெயரிய ஸ்ரீபஞ்சாக்ஷர நிலையின்வைத்துத் தன்னிடத்தும் ஏனைய உலகுயிரனைத்தி னிடத்தும் அவ்வருட்பூரணத்தாற் பூரணமாக நிறைந்திரு க்கும் இறைவனது தன்மையை யுணர்ந்து அவ்வுணர்ச்சி யிற் பிறழாது நிற்பராகலான் அந்நிலைசுத்தசிவனுகிய இறை வற்குப் பிரீதியாகிய ஞானபூஜையாமெனச் சிவாகமங்கள் செப்புமென்பதாம்.

ஆனது ஐயமின்றேலெனவும் அஞ்செழுத்துமாறி எண் ணியெனவும் இயையும்.

காண்பராகலானென்பது காணிலெனவும் போற்றுவராக லானென்பது போற்றலெனவும் தேற்றத்தின்கண்ணதாய்த் திரிந்துவந்தன.

அண்டமென்பவற்றுள் முந்தியது பூதாகாசத்தின்மே லும் இறுதியது உலகுயிரனைத்தின்மேலும் நின்றன. பிரு துவி முதலியவற்றுற் பாணிக்கப்படுவனபோலாது இயல் பாகவே அமைந்ததென்பார் தானே அண்டம் நாயகனூர் மேனியானதென்றார். ஐயமின்றேலென்றது யுக்தியாற்பெரு ட்டியவாறு.

அண்டம் நாயகனூர் மேனியாக்காண்டல் ஏகனுகி நிற்ற லும், ஞானக்கண்ணினிலூன்றி அந்தக்கருத்திறைலைவையு நோக்கல் இறைபணி நிற்றலுமாயவாறுணர்க.

நாயகனூரென்புழிநான்காவதுதொக்கிநின்றது. மறுவசத் தாக்கலென்றது—பின் பக்கத்துச்சேர்த்தலென்னும் பொ ருட்டாய்த் தன்கிழ் வியாப்பியமாகச் செய்தலையும், போற் றல்—பேணிக்கொள்ளுதலென்னும் பொருட்டாய் நிலையிற் பிறழாமையையும் உணர்த்தும். புண்ணியன்—சுத்தசிவன். புகறற்கு வினைமுதல் அவாய் நிலையாற் பெற்றும்.

ஸ்தூலப்பிரபஞ்ச ரூபமாய்க் காரியப்படுகின்ற பஞ்ச பூதங்களுள் ஆகாசமானது வாயுமுதலிய நான்கு பூதங்களுந் தன்மாட்டுத் தங்கற் கிடங்கொடுத்தலான் அவற்றை வியாபித்தும் அப்பூதங்கண்மாட்டு மற்றப் பொருட்கள் நுழைதற் கிடங்கொடுத்தலான் அவற்றுள் வியாப்பியமாகியும் நிற்பதாகும்.

ஆன்மாக்கண்மாட்டு அறியாமை மாறி மாறி வருதலான் அவ்வறியாமையை யகற்றி அறிவை விளக்கி நிற்பதற்கோர் இயற்கையறிவு இன்றியமையாச் சிறப்பிற்றாய் வேண்டப் படுமென்பது விவேகிகளெவர்க்கும் உடன்பாடாகலானும், அத்தகையஇயற்கையறிவு திருவருளேயின்றிப் பிறிதின்மையானும், திருவருளால்விளக்கப்பட்ட ஆன்மவறிவில்அனைத்துங்காட்சிப்படுதலானும், விளக்கப்படாவழி ஒன்றேனுங் காட்சிப்படாமையானும், சராசரங்க ளனைத்துந் தன்கீழ் வியாப்பியமாம்படி திருவருள் வியாபகமாக நிற்பதென்பதூஉம்; அவ்வாறு திருவருளான் வியாபிக்கப்பட்டு விளங்கும் ஆன்மவறிவு உடலுக்குள்ளீடாய் நிற்பினும் அவ்வறிவுக்குள்ளீடாய்த் திருவருணின்று இயக்கிய வழியன்றி ஆன்மவறிவும் அவ்வறிவால் உடலும்இயங்காமையாற் சராசரங்களனைத்தினுள்ளுந் திருவருள் வியாப்பியமாக நிற்பதென்பதூஉம், இனிது விளங்கக்கிடத்தலின்வைத்து சராசரங்களது உள்ளும்புறம்பும் திருவருள் பூரணமாய் நிறைந்திருத்தல் காண்க.

ஸ்பரிச வறிவு மாத்திரையே யுடைய தருக்கண் முதலியவை நீரருந்தல் தழைதல் பூத்தல் காயத்தல் வளைதன் முதலியனவுடைமையின் அத்துணைக்கும் இயங்கற்றன்மையுடையனவா மென்றறிக.

சராசர வடிவாகிய அண்டத்தின்வைத்து ஸலக்ஷண மாக முன்னிலைப்படக் காண்டலால் நாயகனு ரெனவும் பிருதுவிமுதலிய தத்துவவடிவாகிய பிண்டத்தின்வைத்து விலக்ஷணமாகத் தன்மையிற்காண்டலாற் புண்ணியனென்னவும் திருப்பெயர் நிறீஇயினர்.

இது காண்டலளவைக் கெய்தாத அப்பூஜையைக் கருத லளவையானும் உரையளவையானுங் காட்டியவாறு.

இவ்விரு செய்யுட்களானும் இயம்பப்பட்ட ஞானத்திற் கிரியையாகிய இவ்வநுபூதி யுடையாரை ஸப்தகோடி மஹாமந்திரருண் முன்னையராகிய ஸதாநிஷ்டரெனச்சிவா கமங்களும் பிரமவரருண் முன்னையரெனஉபநிஷத்துக்களு நவில்வ. (௪௬—௪௭)

**தொண்டர்க ளிடத்தும்வானோர் தொழுந்திரு மேனிதானு, மண்டருங் கண்டிலாத வண்ணலே யெனவணங்கி, வெண்டர ளங்கள்சிந்த விழி மொழி குழறிமெய்யே, கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தினோரே.**

(இ—ள்.) ஸதாநிஷ்டராயினோர் அவ்வாறு அகத்துவழி படுவோரேயன்றிப் புறத்துவழிபடுவோரல்லர் போலுமெ னின் அவர் பூரணஞானப்பாற் கடலிற் பொங்கியெழுந்து நிறைந்து பொழிந்த வரம்பிலின்பாமிர்தத்தை ஆரவருந்தி அகமகிழ்வோராகலான் ஸதாநிஷ்டையினின்றும் வெளிட் பட்டுழி அப்பேறு பெறுவித்ததாகிய செய்நன்றியை மற வாமையானே அப்பேற்றிற் பிறழ்விக்கும்பிரபஞ்சவாஸனை பின்றொடராமைப்பொருட்டோ கள்ளத்தலைவர் துயர்கரு தித் தங்கருணைவெள்ளத்தலைதன் மிகுதலினாலோ புறத் தும் வழிபடுவோரேயாவர். வழிபடுமாறு—அடியார்களதுள் ளந்தோறும் அனவரதமுஞ் சிறப்புவகையானும் எழுந்த ருளியிருந்து அருந்தல் பொருந்தலாதிய வழிபாடுகள் கொண்டருளுவதும் சிவனுய்யக்கொள்கின்றவாறு புவனி யிற் போய்ப் பிறவாமை இன்னும் போக்குகின்றோம் அவமேயிந்தப்பூமியென்று திருமாலாமவன் விருப்பெய்தி யும் அலரவன் ஆசைப்பட்டும் நோக்கி வந்துவந்துதொழு துய்யும்வண்ணம் வீற்றிருந்தருளும் ஸதா சிவாதிய திரு மேனிகளும் அகம்பாவத்தொடுதேடிய அரியும் அயனுங்

காணுதரற்ற அன்புடையவடியார்க் கெளிவந்தருளும் ஆண்டவனேயெனக் கண்டு அத்திருவடிகளில் அடியற்றமரம் போலவீழ்ந்து பணிந்து பணிந்தெழுந்து சிரமேற்கொண்ட அஞ்சலிஹஸ்தராகி அன்பின் பெருக்கே கண்கள்வழியாக ஆனந்தபாஷ்பமாப்பொழியத் துதிக்கத்தொடங்கவே குறும்பாட்டும் புன்னகையுங் குழறிவரப் பரவசத்தராய் ஸ்வாநுபூதியின் மூழ்கிமூழ்கி வாழ்தலேயாமென்பதாம்.

ஞானக்கட லமுதருந்திஞேரென்பது எழுவாய்; அக மகிழ்வோராகலான் என விரித்துரைக்க.

நேரே தூங்குவோர் மன்னுஞ்செய்தியெல்லா மறுத்தற வொழிதல் செய்தன்மருவிடாதோர் இறைநிறை யுணர்ந்து போற்றுவோர் ஆகிய மேனின்ற மூவரையுந் தழுவற்பொருட்டுத் தொண்டர்கள் வேடமுமென்னுமலும், ஞானிகள் வழிபடுதலைக்கண்டு நற்கதி யடையவிரும்பி வழிபடத் தொடங்கும்ஸாதகராய் இந்நூற்பொருள்கேட்கு மாணுக்கர்க்கு வானோர்தொழுந் திருமேனிகள் சிவஸ்வரூபமாய் நிர்விகாரமா யிருப்பனபோலாது தொண்டர்களது திருமேனிகள் நரஸ்வரூபமாய் விகாரமுடையனவாய்க் காட்சிப்படுதலின் வைத்து ஆசங்கைநிகழாமைப் பொருட்டுத் தொண்டர்களுமென்னுமலும், அத்தொண்டர்கள்எங்கெழிலென் ஞாயிறெமக்கென்று குறைவின்றி இறுமாந்திருக்குமாறு அவரதுள்ளத்தே அண்டருங் கண்டிலாத வண்ணல் சிறப்புவகையான் அனவரதமும் வீற்றிருந்தருளலை அனுமானத்தாற்கண்டு வணங்கி அன்புபெருகுதற் குபாயமாகத் தொண்டர்க ளிடத்துமெனவும்; படம்பித்திகை முதலிய வற்றின் விளங்கும் ஓவிய முதலிய திருமேனிகளையுந் தழுவற்பொருட்டு ஆலயந்தானுமென்னுது திருமேனி தானுமெனவும் செப்பி யருளினர்.

சிவாகமானுபூதிரஸமாய், "பேதையொருபாற்திருமேனி யொன்றல்லன்" என்றருளியவாற்ருல் தொண்டர்க ளிடத்

தும் என்றவாறே திருமேனிகள் தானுமெனப் பன்மை பெற்றும்.

திருமாலும் அலரவனும் புவனியிற் பிறத்தலை இச்சிக்கும்படி அலர்ந்த மெய்க் கருணையோடும் திருப்பெருந்துறையிற் குருந்த நீழலிலெழுந்தருளி யிருந்து வாதவூரடிகளை ஆண்டருளினமைக்குக் காரணம் மதுராபுரேசரைவழிபட்டு வந்தமையேயாகலின் திருமேனிதானும் அண்டருங் கண்டிடாத வண்ணலேயென வணங்கி யென்றருளினர்.।

தரளம் ஆகு பெயர்.

மெய்யே கண்டிருப்ப ரென்றது கண்டுகொண்டிருப்ப ரென்றமையால் அது ஒவ்வொரு தொண்டரையும் ஒவ்வொரு திருமேனியையும் காணுந்தோறுங் காணுந்தோறுங் அவ்வாறே வழிபட்டு ஸ்வானுபூதியின் மூழ்கி மூழ்கி வாழா நிற்பரெனப் பொருடரும்.

ஞானக்கூத்தன் ஒரு மூர்த்திகொடுகுறுகி மலமறுப்போனாகலால் தொண்டர்களை வழிபடுவ ரென்றதிற் குருவை வழிபடுதலும் அடங்கியவா காண்க.

பெத்தான்மாக்கள் தமக்கின்பம் விளைப்பார்போலக் காட்டி விஷயபோகங்களையூட்டிப் பிறப்பிறப்புக்களை மூட்டித் தமக்குத் தாமே துன்பம் விளைத்தலினும் மிக்க வஞ்சமின்மையாற் கள்ளத்தலைவரெனப்படுவராயினும் நமது குலதெய்வமாகிய ஆளுடையபிள்ளையார் ஆளுடையஅரசெழுந்தருளக்கேட்டு முகமலர்ந் தெதிர் சென்று வணங்கி மண்டிய வார்வம் பெருக மதுரமொழி யருள்செய்து அழைத்துவந்தளவளாவி அகமகிழ்ந்திருத்தலையும் ஆலயங்கடோறுஞ்சென்று சென்று அடிபணிந்து அன்பு மிக்கூர்வதையுங்கண்டுங் கேட்டும் அவரது திருவடிகட்கு ஆராத காதலுடையராய் பிள்ளையாரது அருமைத் திருமணம் ஸேவிக்க வந்தோ ரனைவரும் பிள்ளையாராகிய குருவை வழிபட்டு ஆணவ மலமும் அருளொளியாகிய லிங்கத்தை வழிபட்டுக்

கன்ம மலமும் திருமணத்துக்குழீஇய அடியார்களாகிய ஜங்கமத்தை வழிபட்டு மாயா மலமும் நீங்க ஆக்கையும் சேஷியாவாறு அருளொளியோ டத்துவிதமாகிமுக்தி பெற்றமையாற் குருலிங்க ஜங்கம வழிபாடேமுக்தியைப் பயத்தற்கு முக்கிய ஸாதனமெனத்துணியப்படுதலானும் அவ்வழிபாட்டைமுக்திபெற்றோரும் மேற்கூறியவாறே அனுஷ்டித்தலானும் முக்தியை விரும்புவோராகிய அனைவரும் கடப்பாடாக் கொண்டனுஷ்டிக்க வேண்டுத லொருதலையா மென்பது இயம்பாமலே இனிது விளங்கும்.

ஞானத்திற் சரியையாகிய இவ்வனுபூதி யுடையாரை ஸப்தகோடி மஹாமந்திரருட் பின்னையராகிய ஆசாரியரெனச் சிவாகமங்களும் பிரமவரருட் பின்னையரென உபநிஷத்துக்களும் நவில்வ. (சஅ)

பெத்தமுக்தித் தொகை;

**நிலவுல காயதாதி நிகழ்சிவாத் துவிதாந்தத்துக், குலவின ரளவளாவாக் கொள்கைய தாகி வேதத், தலைதரு பொருளாயின்பாய்த் தாவில்சற் காரியத்தாய், மலைவறு முணர்வாற்பெத்த முத்தி கண் மதித்தாமன்றே.**

(இ—ள்.) பரலோகானுபவங்களும் உளவாமென்னும் ஊகமின்றிய பறவை மிருக முதலியவற்றைப்போல இகலோகானுபவமாத்திரைக்கே நிகழும் ஊகம்பற்றிப் பஞ்சேந்திரியங்களாற்கண்டதே காட்சி உண்டதே உறுதியெனக் கொண்டு மகளிர் கூட்டுறவையே முக்தியெனக்கூறும் உலகாயதமுதல் இருவரு முயங்கியொன்று யுறுபய னுவப்புமின்றாய் நிற்குமிது சிவகதியெனக்கூறும் சிவாத்துவிதமீறாகிய வாதங்களை அவ்வவற்றோடியையுடைத்தாகிய ஊகங்களாற் றுபிக்கத் தக்கவாற்ற லுடையோராய் விளங்குவோரும் அனுபவித்தறியாதசைவஸித்தாந்தமாகி வேதங்களது உற்பத்தி ஸ்திதி லயங்கட்கிடமாகவிளங்கும் ஸ்ரீஸமஷ்டி

பஞ்சாக்ஷர வனுஷ்டானத்தாற்பெறப்படும் பூரணவறிவாய் வரம்பிலின்பமாய் ஸத்தினது அழியாத காரியமாகிய பக்குவான்மாக்கட்கு ஸ்வானுபவமாவதாயுள்ள பெத்தமுக்திகளதிலக்கணங்களை எமது ஸ்வானுபூதியி லெழுந்த அறிவானிச்சயித்து இந்நூலின்கண்ணே யமைத்தேமென்பதாம்.

நிலநிகழ் உலகாயதாதி சிவாத்துவிதாந்தத்து எனவும் பெத்தமுத்திகண் மலைவறு முணர்வான் மதித்தாமெனவும் கொண்டு கூட்டுக.

இவற்றுள் நிலநிகழ் உலகாயதாதி சிவாத்துவிதாந்தத்துக்குலவின ரளவளாவாமை பெத்தலக்ஷணமும் மற்றவை முக்திலக்ஷணமுமாகப் பகுத்துக் கொள்க.

நூன்முகத்துப் பொதுவுண்மை யெனக் கருதி யுரைப்பனென்ற வாசிரியர் அவ்விரண்டானும் உணர்த்தப்படும் பெத்தமுக்திகளதியல்பு இவையென ஸாதகரதறிவிற் பசுமரத்தாணிபோற் பதிந்து கிடக்கும்படி ஈண்டுத் தொகுத்துக் கூறியவாறு.

கருத்திலுறை திருவருளுங் கலந்துரைப்பனென நூன்முகத்தும் அறைகுவனருளினாலே யென நடுவணும் நவின்ற தன்மேலும் மலைவறுமுணர்வாற் பெத்தமுக்திகண்மதித்தாமெனக்கூறி முடித்தது மாணாக்கர் நூற்பொருளைக்கடைப்பிடித் தொழுகுமாறு.

சத்து ஆறும்வேற்றுமைத்தொகை. சத்தென்றது அழியாததென்னும் பொருட்டாகலானும் காரணமாத்திரையேயன்றி அதிற்றோன்றி நின்றொடுங்குவதாகிய காரியமும் ஸத்தேயாமென்பது சைவஸித்தாந்தமாகலானுங்கெடாததென்னும் பொருட்டாயதாவில் என்றது ஸத்தின் காரியத்திற்கே அடையாகும்.

அந்தக்கரண வியாபாரமாகிய விவேகத்தாற் கூடஸ்த பிரமவைக்கியமாவதே முக்தியென ஸாதனமும் பேறும்

பெறுவானுமின்றிப் பிதற்றுவார் மயக்கத்தை ஒழிப்பாராய் வேதத்தலைதரு பொருளாயின்பாய்த் தாவில் சற்காரியத்தா யெனவும் வரையறுத்தோதினர்.

ஆன்மாக்கள்

தாவில்ஸத் காரியமாமாறு.

அஞ்ஞதியமலஞகிய இறைவனே உலகனைச் சத்திநி பாத ராக்கவேண்டுங் கடப்பாடாகியநீதியினற் பொதுவகையாக வேதமெனவும் சத்திநிபாதராயினரை முத்தராக்கவேண் டுங் கடப்பாடாகிய நீதியினற் சிறப்புவகையாகச் சிவாகம மெனவும்அருளிச்செய்தமையானும்,ஆசிரியர்நூன்முகத்து உடலுயிர்கண்ணருக்கன் அறிவொளிபோற் பிறிவருமத்து விதமாகுஞ் சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ்சைவ சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்கலுற்றுமென வெடுத்து ஈண்டு வேதத்தலைதரு பொருளா யின்பாய்த் தாவில் சற்காரியத்தாயென முடித்தருளினமையானும், வேதாந்த வாக்கியங்கட்கு வியாக்கியாதாக்கள் கொண்ட கருத்து வேறுபாடுபெற்றிவந்த வாதமே மாயாவாதமாவதன்றி வேதா ந்தவாக்கியங்கள் மாயாவாதமாவ தன்மையானும், பத்தாந் திருமுறையி னருளிச்செய் திருக்கின்றவாறே வேதாந்த சிவாகமாந்தங்க ளிரண்டன் கருத்தும் ஒன்றேயாய் ஸத் காரிய வாதத்தையே ஸ்தாபிக்குமென்பதாயிற்று.

ஸத்காரிய வாதமாவ தியாதெனின் நித்தியமாகிய கார ணத்தினின்றும் நித்தியமாகியகாரியம் தோன்றிநின்று வியா பரித்து அக்காரணத்தினே ஒடுங்கி நித்தியமா யிருத்தலை நிகழ்த்துவதாகும். காரியமும் நித்தியமென்பது தாவில் சற்காரியத்தாயென் றருளினமையாற் காண்க.

ஆகவே ஸத்காரிய முறைமை பதி பசு பாசமென்னும் திரிபதார்த்தங்கட்கும் உண்மையாகும். அவற்றுட்பதியின் காரியமாவது லய சிவாதிய நவவடிவங்களாம். பாசத்தின் காரியமாவது ஆணவாதிய மலங்களினதாய்ப் பெத்தத்தில்

தோன்றி நின்று வியாபரித்து முக்தியில் தத்தங் காரணங் களினொடுங்கிக் கிடக்கும் அவ்வவற்றின் சக்திகளாம்.

ஆணவமலம் தங்கால வெல்லைகளின் மீளுமெண்ணரிய சத்தியதாதலின்வைத்து ஆணவ முள்ளவன்றே உள்ளன வாய் அதனோடொற்றித்து நிற்பனவாகிய ஏனைய மலங்கட் கும் அவ்வவற்றிற்குரிய சக்திகள் காரியரூபமா யுளவாகு மென்பதற் கையமின்றே.

இனிப் பசுவின்காரியமாவ தியாதெனின் பசுவென்பது பாசத்தாற் பந்திக்கப்பட்டதென்னும் பொருட்டாகலின் பந்திக்கப்பட்டு நிற்கும் பொருளின் காரியமாய் மற்றோர் பொருள் தோன்றி நின்று வியாபரித்து மீளக்காரணத்தி னொடுங்கிய வழியும் அஃது முக்தியெனப் படாவாதலான் பசுவென்பதும் பதியினது காரியமாய்த்தோன்றி நின்று வியாபரித்து மீளப் பதியி னொடுங்குமென்பதே துணிபு.

அதுபற்றியன்றே பதியையும் பசுவையும் வேதாந்தத் துள் விம்பப் பிரதிவிம்பங்களாகவும் சிவாகமாந்தத்துள் விம்பப் பிரதிவிம்பங்கட்குரிய லக்ஷணங்க ளனைத்தொடுங் கூடியதாகவும் விளம்புவதென்க.

விம்பப் பிரதிவிம்பங்களாகு முறைமையாவது—சுத்த சிவத்தினது பஞ்சகிருத்தியார்த்த விளக்கமாகிய அகண்ட பரிபூரண ஸச்சிதானந்த சிவ ஸன்னிதானத்தில் அபி முகப்பட்ட பாசமாகிய லீலைக்கண்ணுடியிற் றோன்றிய பிரதி விம்பத்தினது ஸத்தம்சம் ஜீவான்மாவும் சித்தம்சம் ஜீவான்மஜ்ஞானமும் ஆனந்தாம்சம் ஜீவான்மஜ்ஞானனந் தமுமாம்.

அவ்வாறு தோன்றும் அளவிறந்த பிரதி விம்பங்களையே அளவிறந்த ஜீவகோடிக ளென்பது. அவற்றுள் அசரவுயிர் களில் ஸத்தம்சமும் சர வுயிர்களுட் பெத்தான்மாக் களிடத்து அதனோடு சித்தம்சமும் முத்தான்மாக்களிட த்து அவற்றோடு ஆனந்தாம்சமும் விளங்குவனவாம். அது

பற்றித் தாரதம்மியப்படக் காண்டலின் வைத்து ஐயுறற்க. ஈண்டு ஆனந்தாம்சமென்றது முத்தான்மாக்கள் பகிர்முகப் பட்டுநீ நிகழும்வாஸனானந்தத்தின் மேற்றேயன்றிப் பெத்தான்மாக்களிடத்துத் தோன்றும் விஷயானந்தங்கண்மேற்றன்று.

ஆன்மாக்கள் ஸச்சிதானந்தப் பிரதி விம்பங்களாய்த் தோன்றுவவென்பதற்கு சிவாகமங்களின் ஞானபாதப் பொருளேயன்றி அப்பொருளுக் கறிகுறியாகவும் அப்பொருளை யடைதற்குரிய பிரதமோபாயமாகவும் அருளிச் செய்யப்பட்ட கிரியாபாதத்து ஆலயங்களில் மூலஸ்தானத்தின்முன்பாகவும் பள்ளியறையிற்பின்பாகவும் நிலைக்கண்ணாடியை அமைக்கும்படியும் தீபாராதனையின் அந்தத்தில் விபூதியின் பின்னர்த் தாய்த் தர்ப்பணத்தைத் தரிசிப்பிக்க வேண்டுமெனவும் நியதி செய்திருக்கின்றவாறே அநுஷ்டித்து வருதலும், சிவபெருமானுக் கபிமுகப்பட்ட கண்ணாடியி னின்றும் ஆலாலஸுந்தரச் செல்வரும் அக்கண்ணாடி உமாதேவியார்க் கபிமுகப்பட்டுழிக் கமலினியார் அநிந்திதையா ரென்னும் செல்விகளும் உமாதேவியாரது திருச் சிலம்பி னின்றும் உதிர்ந்து தேவியார்க் கபிமுகப் பட்ட நவமணிகளில் நவசக்திகளும் அச்சக்திகளது திருமேனிகளிற் றோன்றிச் சிவபெருமானுக் கபிமுகப்பட்ட வியர்வைகளில் லக்ஷ வீரரும் பிரதி விம்பங்களாக அவதரித்தனரெனச் சாற்றும் சைவபுராணேதி ஹாஸங்களும், "நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை குரம்பை யுட் புகப்பெய்து" என்பதுமுதலியவாயருளிச் செய்திருக்கின்ற திருவாசகமும், "தொண்டனேனினையுமாநினையே" "விரும்புமா விரும்பே" "தொடருமா தொடரே" "நுகருமா நுகரே" என்றருளிய திருவிசைப்பாக்களும், திருவருளைக் கான் மூகையொழிதலாக "சந்ததமு நீக்கமின்றி யாடி நிழலைசைப்பான்போற் புவனமாக்கி யசைத்த தருளுமாணையும்" எனத்துதித்த ஆன்றோர் வாக்கியமுமேசான்று.

புவன மென்றது ஆன்மாக்கட்கு ஆகுபெயர்.

அதுவேயு மன்றித் தந்தையாற் றோன்றினானுக்கே மைந்தனென்னும் பெயர் உண்மையாதல்பற்றி ஆன்மா ஸச்சிதானந்தப் பொருளினது காரியமாய்த் தோன்றிய தென்பதுணருமாறு "மன்னவன்றன் மகன்" எனவும், அக்காரியம் பாசமாகிய வேடக்கண்ணுடையினிடமாக வியக்தமாகி அவ்வுண்மையை யுணராது நிற்குமென்ப துணருமாறு "வேடரிடத்தே தங்கி வளர்ந்தவனையறியாது மயங்கிநிற்ப" எனவும், சரியை கிரியா யோகங்களாற் கிஞ்சித் பாச விலக்ஷணப்படுத்தி அதன்பின் அபிமான புத்திரனைக்கொள்வதுபோலாது அனாதியே ஔரஸ புத்திரனென்னும் உண்மையை உணர்த்தி அதன்பின் பாசத்திற்குமுற்றிலும் விலக்ஷணப்படுத்தித் தன்னொடுகூட்டி வாழ்விப்ப னென்ப துணருமாறு "பின்னவனு மென்மகனீ யென்றவரிற் பிரித்துப் பெருமையொடுந் தானாக்கிப் பேணும்" என மேலதனை வலியுறுத்தியும் உவமையின் வைத்தும், அக்கண்ணுடையினின்று மீட்டுப் பண்டைப் பரிசே தன்னோடத்துவிதமாக்கொண்டு வியாப்பியமாக வாழ்வித்தருளுவனென்ப துணருமாறு "தொல்லுயிரை மன்னுமருட் குருவாகி வந்தவரினீக்கிமல மகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்" என உவமேயமாகவும் விரித்தருளியதுமுதலிய பதங்களமைந்த வழிநூல் எட்டாஞ்சூத்திரச் செய்யுளும் பிரதிவிம்ப வாதத்தைத் தெருட்டுவதாகும்.

அவாந்தரமாய் வாழ்தலென்னும் பொருட்டாய தங்கி என்றது ஆன்மா அநாதியே பாசத்தினமிழ்ப்புண்டு கிடக்குமென்பதை உபசாரமெனக் காட்டும்.

பிரதி விம்பமானது விம்பம் உள்ளவன்றே உள்ளதாய் உள்ளளவும் உள்ளதாய் நிகழ்வதாகலின் தோன்றுமென்பது பற்றி ஆன்மா அநாதி நித்தியமென்பதற் கிழுக்கின்று.

அத்துவித மென்னுஞ் சொற்குப்பொருள் இரண்டற நிற்பதென்பதாகலின் வெவ்வேறா யிருக்கும் பொருட்கள் வியாபக வியாப்பியமாய வழியும் அத்துவிதமாவ தன்மையால் இரண்டா யிருந்தும் இரண்டல்லாததாகிய விம்பப்பிரதி விம்பங்களா யிருப்பவெனக் கோடலே பதியும் பசுவும் யாண்டும் அத்துவித மென்பதற்கியைவதாகும்.

சூத்திரத்தையும் பாஷ்யத்தையும் போன்ற வேத சிவாகமங்களில் வேதாந்தத்துட்கூறிய பிரதி விம்பவாதத்தைப் பிரதிமையின் மேலேற்றி மயங்காமைப் பொருட்டு அதனை யித்தன்மைத்தெனத் தெளிவிக்க வேண்டியதத்தினையே கடப்பாடாகலின் சிவாகமாந்தத்தும் ஆன்மாவை ஸச்சிதானந்தப் பிரதி விம்பமெனக் கூறியதுகூறாஅய் அதற்குரிய லக்ஷணங்களால் லீலைக்கண்ணாடியிற்றோன்றிய பிரதிவிம்பமாகத் தெருட்டியருளினன் சிவபெருமானென்பர் சிவானுபூதிச் செல்வர்.

விம்பமுங் கண்ணாடியும் சந்தித்த வழியன்றிப் பிரதிவிம்பந் தோன்றாமையின்வைத்துப் பிரதிவிம்பங்களாகிய ஆன்மாக்கள் விம்பமாகிய ஸச்சிதானந்தப் பொருளினிடத்தே அடங்கிக் கிடப்ப வெனவும் பிரதிவிம்ப ஸாதனமாகிய பாசத்தி னிடத்தே அடங்கிக் கிடப்ப வெனவும் இருவகையாக ஆன்றோர் அறைகுவராயினும் பிரதி விம்ப ஸாதனமாய்நின்ற கண்ணாடிகளை நீக்குந்தோறும் விம்பத்திற் கபிமுகப்பட்ட மற்றக்கண்ணாடிகளிற்பிரதிவிம்பந்தோன்றுகையானும் அபிமுகப்படாத எந்தக்கண்ணாடிகளினும்பிரதிவிம்பந் தோன்றாமையானும் பிரதிவிம்பங்களாகிய ஆன்மாக்கள் ஸச்சிதானந்தப் பொருளினிடத்துத் தோன்றிநின்றொடுங்கி நித்தியமாயிருப்ப வென்பதே சாலும். ஏனையதுபசாரமேயாம்.

உடலுயிர் கண்ணருக்கன் அறிவொளி என்பவற்றுள் ஒன்றுதல் தம்முட் காரண காரியப் பொருட்டாகாமையானும், கனவு முதலிய அவஸ்தா பேதங்கள் காச நோய் முதலிய ஏதுக்கள் கவலை முதலிய காரணங்கள் இவை பற்றி ஒவ்வொருகாற் பிரிந்து கூடுந் தன்மையினையுடையவாகலானும், அவ்வுவமைகள் உபகரித்தலும் பெறுதலும் மாத்திரைக்கே யன்றி அவை யாண்டும் நிகழ்தற்கிடனின்மேற் செல்லாவாகலிற் பிறிவரு மத்துவிதமாகுஞ் சிறப்பினதாயென ஸத்காரிய நிலையை வேறெடுத்தோதினர்.

எவ்வாறு நோக்கினும் திருவிசைப் பாக்களின் அருளிச்செய்தபடி உபகாரமும் பேறும் யாண்டும் நிகழ்தற் கிடனாகுந்தன்மை விம்பப்பிரதிவிம்பங்கட்கே உண்மையாமென்க. அவ்வாறுதல், அத்தன்மையை பிறிவரும், அத்துவிதம், சிறப்பு, ஆகும் என்பவற்றுள் ஒவ்வொரு பதத்தினும் தனித்தனி உய்த்துணர்தலானும் இனிது விளங்கும்.

இப்பிரதிவிம்பவாதம் ஏகான்மவாத மாகாதோவெனின் ஸூரியனையின்றிக் கிரணமும், கிரணத்தையின்றிக் கானலும், கானலையின்றி நீர்த்தோற்றமும், நீர்த்தோற்றத்தை

யின்றி, அதனை நீரெனக்காணு மயக்கமும், மயக்கத்தை யின்றி அந்நீரைப் பருகி விடாய் தீர்ப்பேமென வெண்ணும் அறியாமையும், அவ்வறியாமையையின்றி அந்நீரைப்பருகச் சேறலும் இன்மையை யொப்பச் சிவபெருமானை யின்றிச் சிற்சக்தியும், சிற்சக்தியையின்றிமாயையும், மாயையையின்றி மாயேயமும், மாயேயத்தையின்றித் திரோதமும், திரோதத்தையின்றி ஆணவமும், ஆணவத்தையின்றிக்கன்மமும் இன்மையாற் பாசம்வேறன்று. விம்பத்தையின்றிப் பிரதி விம்பமின்மையால் ஆன்மாக்களும் வேறன்று. இம்முறைமையின் வைத்துப் பிரமப் பொருளொன்றேயன்றி வேறு பொருளில்லையென வேதாந்தம் விளம்புவதற்கு "ஒன்று நீ யல்லையன்றி யொன்றில்லை" யென்றருளியதே பொருளாகக்கருத வறியாது அதனைப் பொற்பணி யுவமையின் வைத்துப் புகறலே ஏகான்ம வாதமாகும் அவ்வாறன்றிப் பிரதி விம்ப வாதம் ஏகான்ம வாதமா வதன்று. ஸத்காரியவாதமேயாம்.

பாசப் பகுதிகளை மாயை முதற் கன்ம மீறாக அடைவுபடக் கொள்வது அவை வியக்தமாகு முறைமையின் வைத்தென்க.

ஸங்கற்ப நிராஹரணத்தில் மாயா வாதியை நோக்கி "தற்பணநிழற்கட் குற்றிபாய்ந்தற்றால் நற்கணிற்றுயர நணுகாத் தகைத்தெனின் நின்மொழிவிரோதமுங் காட்சிவிரோதத் தன்மையுமுறுமவை தவறில வாகா" வென மறுத்தது பிரதிவிம்பத்தை ஜீவனெனக் கொள்ளாது பிரமமே எனவும் உபாதி தனுகரணாதிகட்கே யன்றிப் பிரதி விம்பத்திற் கில்லை யெனவும் பிதற்றி யதனையேயாம். பிரதிவிம்ப வாதத்தை யன்று.

பிரதி விம்பமாய்த்தோன்றிய ஆன்மாக்கள் தண்டுலத்தையும் ஆன்மஜ்ஞானம் அதனது வெண்மையையும் கன்மம் முளையையும் மாயை தவிட்டையும் ஆணவம் உமியையும் ஒப்ப அநாதியாகவே உள்ளனவாயினும் தோன்றி நின்று வியாபரித்து இறுதியாயொடுங்கும்வழி தவிடுமிகளையொழி

ந்ததனாற் பைங்கூழாந்தன்மையையொழிந்த முளையொடும் விளங்குந் தண்டுலத்தைப்போல ஆணவமாயைகளிற் றீர்ந்ததனாற் பயன்படாத கன்மத்தொடும் விளங்குவவாகலின் அவ்வான்மாக்கள் மீட்டும் பிறவாது வாழ்வனவாம்.

அரிதாளின் மூலத்துள் தண்டுலங்கள் முளைதவிடுமி யொடுகூடிய நெற்களாய்ச்சூக்குமரூபமா யாண்டும் எண்ணிறந்தனவா யடங்கிக் கிடந்து குளிர்புனல்கூடிய வழி மேன்மேலும் பைங்கூழ்வாயிலாகக் கதிர்களாத் தோற்று வதையொப்பப் பாசத்தினுள் ஆன்மாக்கள் ஆணவமாயை கன்மங்களொடு கூடிய பசுக்களாய்ச் சூக்குமரூபமா யாண்டும் எண்ணிறந்தனவா யடங்கிக் கிடந்து ஸச்சிதானந்தப் பொருளினது ஸங்கற்பங்கூடிய வழி மேன்மேலு நால்வகைக் கருக்கள் வாயிலாக எழுவகைத் தோற்றத்துச் சிறப்பு வகையான் எண்பத்து நான்குலக்ஷ யோனி பேதங்களாகவும் பொதுவகையான் எண்ணிறந்த யோனிபேதங்களாகவுந் தோற்றுவனவாகலின் ஒடுங்குங்கால்தண்டுலத்தை யொத்தல் பற்றி ஐந்தொழிலறுதிப் படுவதன்று.

ஒப்பும் உயர்வுமில்லாத ஸச்சிதானந்தப் பொருள் ஆன்மாக்களை யாட்கொண் டருளுவதாகிய திருவிளையாட்டினதியல்பினைத் தெரித்தற்பொருட்டு எடுத்துக் காட்டுவனவாய உவமைகளுள் ஒன்றேயினும் முற்றுவமையாகா வெனினும் ஆன்றோர தாசாரம்பற்றி உசிதோசிதமா யெடுத்துக் காட்டும் உவமைகட்கு உவமேயமாக்கொள்ளப்படும் இலக்கணங்க ளனைத்தும் ஸச்சிதானந்தப் பொருட்கண்ணே யுள்ளனவாம். ஆதலே ஸ்வானுபவத்தாற் காணும்வண்ண முயற்சித்தலே கடப்பாடாம். என்பதற்கு "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமுமாதிமாண்புங் கேட்பான்புகி லளவில்லை கிளக்கவேண்டா கோட்பாலனவும் வினையுங் குறுகாமை யெந்தைதாட்பால்வணங்கித் தலைநின்றிவைகேட்க தக்கார்" எனவும், "ஏதுக்களாலு மெடுத்த மொழியாலு மிக்குச் சோதிக்கவேண்டா சுடர்விட்டுள னெங்கள்சோதி மாதுக்க

நீங்கலுறுவீர் மனம்பற்றி வாழ்மின் சாதுக்கண் மிக்கீர் இறையே வந்து சார்மின்களே" எனவும், அருளிய திருப்பாசுரங்களே சான்று.

இப்பதின்மூன்று செய்யுட்களும் தீவிரதரர் முதலிய நால்வகைப் பக்குவிகட்கும் பொதுவி லுணர்த்தியவாறு. ()

அநுமதி.

**திருவருள் கொடுத்துமற்றிச் சிவப்பிர காசநன் னூல், விரிவது தெளியுமாற்றால் விளம்பிய வேது நோக்கிப், பெருகிய வுவமைநான்கின் பெற்றியி னிறுவிப்பின்முன், றருமலை வொழியக்கொள் வோன் றன்மையிற் சாற்றலாமே.**

(இ—ள்.) ஞானசிரியரது திருவடியைச் சரணாகவடைந்து அவரது வாக்கியங்களை உண்மையாகக் கொண்டொழுகும் பக்குவ முடையோனுக்குத் தீக்ஷையாற் சிவானுபவத்தை ஸ்வானுபவமாகப் பெறுவித்து அதினின்றும் பகிர்முகப்பட்டுழி வாஸனைபற்றி முன்னொடுபின் முரணாகப் பிரபஞ்சந் தோன்றுதலின் வைத்துண்டா மயக்க நீங்கும் பொருட்டு அதனியல்பை ஏதுக்களானே மாயாகாரிய மத்தனையேயாமெனக் கண்டு கழித்தும் திருவந்தாந்தங்களின் வைத்து நித்தியமாகிய வரம்பிலின்பத்தைப் பயக்குந் திருவருளே டொவ்வாதென நிச்சயித்தும் ஸ்வானுபவம் ஸ்வானுபூதி யாகும்வண்ணம் இந்நூற் பொருளை விளக்கலாகு மென்பதாம்.

கொள்வோன் றன்மையிற் றிருவருள் கொடுத்து முன் பின் மலைவுதரு விரிவது ஒழிய விளம்பிய வேதுநோக்கிப் பெருகிய வுவமை நான்கின் பெற்றியினிறுவி தெளியுமாற்றால் மற்றிச் சிவப்பிரகாச நன்னூல் சாற்றலாமே எனக் கொண்டு கூட்டுக. கழித்து என்பது சொல்லெச்சம்.

கொள்வோனென்பது நான்காம் வேற்றுமைத் தொகை. கொள்ளுதற்குச் செயப்படு பொருள் வருவிக்கப்பட்டது. தன்மையிற் றிருவருள் கொடுத்தல்—சிவானுபவத்தை ஸ்வானுபவமாகப் பெறுவித்தல். முன்பின் மலைவுதருதல்-சிவானுபவத்தால் உன்முகத்துத் தோன்றுதொழிந்த பிரபஞ்சம் பகிர்முகப்பட்டுழித் தோன்றுதலான் அத்தோற்றம் ஒழியத் தக்கதோ வன்றோ வென மயங்குதல்.

விரிவு, பஞ்சம் என்பன ஒருபொருட் கிளவி. பஞ்சம் என்பது பிரவென்னும் உபஸர்க்கத்தால் உலகத்தை யுணர்த்தும்.

விளம்பிய வேதுவென்றது—அளவை நூலிற் கூறிய இயல்பு, காரியம், அனுபலப்தி, யென்னு மூன்றன் மேற்று. உவமை நான்காவன—வினை, பயன், மெய், உரு, என்பனவாம். அவை பெருகுதல்—போகமோக்ஷ ஸாதனங்களை விளக்கும்பொருட்டு எடுத்துக் கூறுங்காற் பற்பலவாக விரிதல். பெற்றி—உவமேயம். கழித்தும்நிறுவியுமென உம்மைகள் வருவித்துரைக்க. தெளியுமாறு—ஸ்வானுபூதியாகும் வண்ணம். மற்று—அசை. நன்னூல்—நித்தியானந்தமாகிய நன்மையைப் பெறுதற்கு ஸாதனமாகச் சமைந்த நூல். நூற்பொருளை யென விரித்துரைக்க.

அளவை நூலிற்கூறிய ஏதுக்களை நோக்கிக் கழிக்குமாறு—ஏது மூன்றனுள் இயல்பேதுபற்றி மாவென்னுஞ் சொற்குப் பொருள் மரமென வறிதல்போலப் பிரபஞ்சமென்னுஞ் சொற்குப் பொருள் மாயையெனவும், காரியவேதுபற்றிப் புகையால் அனல் உண்டென வறிதல்போலப் பிரபஞ்சம் நானாவித விசித்திரங்களாய்த் தோற்றுதலான் அவ்வாறு தோற்றுவித்தற்கோர் மாயை யுண்டெனவும், அனுபலப்தியேதுபற்றிச் சீதமின்மையாற் பனியின்மையை யறிதல்போலப் பிரபஞ்சோபாதி உன்முகத்துத் தோன்றாமையாற் சிவானுபவத்தில் மாயையின் றொழிலில்லையெனவும், கண்டு கழித்தலாம்.

உவமை நான்கின் பெற்றியி னிறாவுமாறு—உவமை நான்கினுள் வினையுவமைபற்றிப் புலிபோலப் பாய்ந்தா னென்பதை யொப்ப உண்டி மருந்து உறைவிட முதலியவாய்த் தோன்றிப் பசிபியாதி சீதவாதோஷ்ண முதலியவுபாதிகளை ஒழித்தலானும், பயனுவமைபற்றித் தருப்போலுங் கையென்பதை யொப்ப விரும்பியவெல்லாம் பயத்தலானும், மெய்யுவமைபற்றிப் பொன்போலும் ஆவாரம் பூ வென்பதையொப்ப அறிவுருவமாய்விளங்குதலானும், உருவுவமைபற்றிக் கார்போலுங் குழலென்பதை யொப்ப எண்ணிறந்த விசித்திரமாகிய சராசரங்களாய் நிறைந்த எழிலுடைத்தாகலானும் பிரபஞ்சத்தை உவர்த்தொழிக்க வேண்டுவதில்லையெனின் முதல்வனதாணையாளுகும் காலநியதிகளின்படியேயன்றிப்பிரபஞ்சம் உபகாரப்படாமையானும், ஒன்றாநினைக்கின் அதுவொழிந்திட்டொன்றுதல் அன்றி அதுவேவந்தெய்தினும் நிலையா தொழிதலென்னும் இவையும் உண்மையாகலானும், ஐயம் திரிபு அறியாமைகளும் நிகழ்தலானும், எழிலுடைத்தாயவாறே யன்றிப் பரிணமித் தழிதலானும். நிவிர்த்தியால் நித்தியமாகிய வரம்பிலின்பத்தைப் பயக்குந் திருவருளோ டொவ்வாமையின் உவர்த்தொழியவேண்டுவதேயென நிச்சயித்தலாம்.

இச்செய்யுள் நூலாசிரியர் தமது மாணாக்கராகிய ஆசிரியன் மார்க்கு அனுமதி கொடுத்தருளு முகத்தாற் பக்குவிகளதியல்பும் அவர்க் கனுக்கிரஹிக்கு முறைமையும் பொதுவகையா னுணர்த்தியவாறு. (௱)

உண்மை முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் — ௱க.

---

சிவப்பிரகாசம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# செய்யுண் முதற்குறிப்பகராதி.

# சோதன பத்திரம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 14 | 20 | உடைமைப்பற்றி | உடைமைபற்றி |
| | 23 | வாஸனைப்பற்றி | வாஸனைபற்றி |
| 15 | 15 | அறிவையையும் | அறிவையும் |
| 36 | 22 | ஆன்மக்களையே | ஆன்மாக்களையே |
| 41 | 1 | நூலின்யாப்பும்முதலிய பொருளும் | நூல் கேட்டற் குரிமை யுடைமை |
| | 29 | அதனை | அவற்றை |
| 44 | 6 | ஒலதோதபமாக | ஒலதோதயமாக |
| 45 | 25 | அடிகளாளறி | அடிகளானறி |
| 46 | 21 | சிவபோதம் | சிவஞானபோதம் |
| 55 | 21 | மாத்திரையயானே | மாத்திரையானே |
| 89 | 10 | விபாபித்து | வியாபித்து |
| 97 | 4 | வீடடைந்தார்க்குத்திரு மேனி | வீடடைந்தார்க்குப் பிராரப்தந் தீர்ந்த வழி திருமேனி |
| 104 | 4 | நெறிமயன் | நெறியென் |
| 109 | 31 | வைகரியுனுதானன் | வைகரியினுதானன் |
| 118 | 23 | வாக்குதம்பிக்குமாறு | வாக்குத்தம்பிக்குமாறு |
| 132 | 27 | அனுவிக்குமாறு | அனுபவிக்குமாறு |
| 138 | 21 | சேடத்திற்கிகைய | சேடத்திற்கியைய |
| 139 | 28 | எனபெயர் | எனப்பெயர் |
| 140 | 14 | பிரித்துகூட்டி | பிரித்துக்கூட்டி |
| 149 | 24 | பாஹிப | பாஹிய |
| 153 | 28 | வேதனைப்பற்றி | வேதனைபற்றி |
| 162 | 1 | சிவப்பிரகாசப்பொது | சிவப்பிரகாசவுண்மை |
| 194 | 9 | மன்னவன்வன்றன் | மன்னவன்றன் |
| 198 | 10 | திருலருட்கு | திருவருட்கு |
| 200 | 16 | உவமேய்த்து | உவமேயத்து |
| 202 | 22 | தொக்கின்றன | தொக்கிநின்றன |
| 217 | 27 | மொழிபக்கேட்டு | மொழியக்கேட்டு |
| 229 | 3 | நடைப்பற்றி | நடைபற்றி |
| | 30 | வாதியாபெதியா | வாதியாபேதியா |
| 232 | 11 | வியாப்பிபமாதன் | வியாப்பியமாதன் |
| 245 | 30 | விவேஹத்தால் | விவேகத்தால் |

னேயென்றும்." எ - து. கண்டுகொள்க. இனி யசத்தைச் சிவனுக் கறியவேண்டுவதில்லையென்று அவனைமறுத்ததற்கு. பி - ம். "தனக்கெனிலஃது மிசைப்பதொன்றன்றே - தன் போலவிருந் தலைவருமிலரான் - மின்போனிலையவேண்ட லும்பழுதே." எ- து. கண்டுகொள்க. இனியசத்தாகிய பிரபஞ்சத்தை யிந்திரியங்களறியுமென்று மூன்றுவதுசங்கிராந்தவாதிசொன்னதற்கு. பி-ம். "பூட்டைப் - பலவகையுறுப்பு மிலகியதொழில்போ-லைம்பொறிபுலன்களின்புறமன்றே." எ - து. கண்டுகொள்க. அப்படி யிந்திரியங்களாற் பிரபஞ்சத்தையறியப்படாதென்று அவனைமறுத்ததற்கு.பி-ம். "புலனைம்பொறியினிலவிடுமென்றனை - யஞ்சுமொருகாற்றுஞ் சாதறிதற்- கழிவென்று." எ - ம். "இதுவேயல்லது கதுமெனவிருசெவி - யிருகூற்றொருசாற்றெரியாத்தன்மைவந் - தெய்துமனுதி மெய்யுயிர்ச்செயலுந்- தனக்கிலதொருவர்க்கெனத்தெளிகிலையே." எ- ம். கண்டுகொள்க. இனியசத்தாகிய பிரபஞ்சத்தை யான்மாவு மிந்திரியங்களுங்கூடி யறியுமென்று நாலாவது சிவசமவாதிசொன்னதற்கு. பி - ம். "பாசமைம்புலன்றேசுறவுணர்த்தப் - பசுத்தனிஞானம் புசித்திடுமன்றே." எ-து. கண்டுசொள்க. அப்படியவையிரண்டுங்கூடினு மசத்தாகியபிரபஞ்சத்தை யறியமட்டாதென் றவனைமறுத்ததற்கு. பி-ம், "அங்கியமறியா மன்னுயிர்பொறிபுலன்-ருனேவறியா." எ - து. கண்டுகொள்க. இனியசத்தாகிய பிரபஞ்சத்தை யருளுமான்மாவுங்கூடி யறியுமென்று ஐந்தாவது ஈஸ்வரவைக்கியவாதி சொன்னதற்கு. பி - ம். "உலகத்-தாயவனுயிர்க்கு மாயையினருளா - னிருவினைத்தொகையினுருவினைத்தருமாற் - கருமுகிலடராவிரிதருகதிர்போன் - றறிவாமுயிரிற் பிறியாதேயும்." எ - து. கண்டுகொள்க. அப்படி யருளு மான்மாவுங் கூடினவவதரந்தானே முத்தியா

மென்றவனை மறுத்ததற்கு. பி - ம். "அறிவிற்கறிவு செறிய வேண்டின்றே - யுண்மையிலிருமையு மொளியேயெனிலொரு - தன்மையாகமுன் சாற்றினரிலரோ". எ - து. கண்டு கொள்க. இனி யசத்தாகிய பிரபஞ்சத்தை யருளு மிந்திரியங்களுங்கூடி யறியுமென்று ஆறுவது சைவர் சொன்னதற்கு. பி - ம் "அண்ணல் - கலைமுதலாக நிலவியகருவியை - விளக்கெனவுதவுந் துளக்கறப்பொருந்தி." எ - து. கண்டு கொள்க. அப்படியல்ல இந்திரியங்க ளான்மாவோடிசம்பந்தமொழியச் சிவஞானசம்பந்தமில்லையென்று அவனைமறுத்ததற்கு. பி - ம். "மலமிருணிலையொளி - தானமர்விளக்கிற்றகுமிருட்கலாதிக - ளீனமிலிவனிடத் தெவ்வாறிசைந்தன." எ - து. கண்டுகொள்க.

இதனாற்சொல்லியது அசத்தாகிய பிரபஞ்சத்தை யுயிரறியுமென்ற ஈஸ்வரவவிகாரவாதியையுஞ் சிவமறியுமென்ற பரிணாமவாதியையு மிந்திரியங்க ளறியுமென்ற சங்கிராந்தவாதியையு மான்மாவுமிந்திரியங்களுங்கூடி யறியுமென்ற சிவசமவாதியையு மான்மாவுமருளுங்கூடி யறியுமென்ற ஈஸ்வரவைக்கியவாதியையு மருளுமிந்திரியங்களுங்கூடி யறியுமென்ற சைவனையு மறுத்தமுறைமையை யறிவித்தது.(௬)

இங்ஙனம் பிரபஞ்சகாரியப்பட்டுநிற்கிற வான்மாவை முற்கூறியவிருத்தங்களில் அறிவென்ற சமயிகளையுமறுத்தீர் அறிவல்லவென்ற சமயிகளையு மறுத்தீர் பின்னையிதனையேதென்று சொல்லப்படும் சத்தாகிய வறிவனென்று சொல்லப்படுமோ அசத்தாகிய வறியாதவனென்று சொல்லப்படுமோவென்று வினவின மாணவகனை நோக்கி யருளிச்செய்வா னெடுத்துக்கொண்டருளியது.

௧௭

சத்திதுவென்றசத்துத் தானறியாதசத்தைச்
சத்தறிந்தகலவேண்டா வசத்திதுசத்திதென்றோர்
சத்திருளொளியலாக்கண் டன்மையதாமசத்தைச்
சத்துடனின்றுநீக்குந் தன்மையாற்சதசத்தாமே. (எ)

சத்தசத்தறியா தம்மிலவ்விரண்டையு
முய்த்தறிவதுசத சத்தென்றுணாத்தது.

வி - ம். சத்திதுவென் றசத்துத்தானறியாது. எ-து. சத்தாகியசிவத்தை யிதுசிவமென்று அசத்தாகிய பாசங்க ளறிபமாட்டாது,—அசத்தைச்சத்தறிந்தகலவேண்டா. எ-து. அசத்தாகியபாசங்கள் சிவத்தைப்பொருந்தாதபடியாலே ய வையிற்றைச்சத்தாகியசிவம் இதுபொல்லாதென்றறிந்து நீ ங்கவேண்டுவதில்லை. ஆகையால்,— அசத்திதுசத்திதென்றோ ர்சத்து. எ - து. அசத்தாகிய பாசத்தோடுகூடினபொழுது அந்தப்பாசந்தானாய்நின்றறிந்துஞ் சத்தாகியசிவத்தோடுங்கூ டினபொழுது அந்தச்சிவந்தானாய்நின்றறிந்தும் இங்ஙனமி வையிரண்டோடுங்கூடி யறிந்துவருகிறவான்மாவு மறியுஞ் சத்தாம். அதெள்போலவென்னில்,— இருளொளியலாக் கண்டன்மையதாம். எ - து. இருளோடுங்கூடி யந்தவிரு ள்தானாய்நின்று விழித்தும் ஒளியோடுங்கூடி யந்தவொளி தானாய்நின்றுவிழித்து நின்றகண் ணவ்விருளுமொளியுமல்லாதுநின்ற தன்மைபோல வான்மாவு மந்தச்சத்து மிந்த வசத்துமன்றித் தனித்தொருமுதலாய்நிற்குமானு லிந்தவா ன்மாவைச் சத்தென்றுசொல்லலாமோ வசத்தென்று சொ ல்லலாமோ வென்னில்,— அசத்தைச் சத்துடனின்றுநீக்கு ந்தன்மையாற் சதசத்தாமே. எ - து. முன்புகூடிநின்ற பா சங்களைச் சிவத்தோடுங்கூடிநின்று நீக்குமுறைமையாலே

யான்மாவுக்குச் சதசத்தனென்கிறதே யியல்பாம். எ - று. என்னவே அறிவித்தாலறிவனென்பதுகருத்து.

ற - ம். சத்தாகிய சிவத்தை யசத்தாகியபாச மறியாதென்ற தெங்ஙனேயென்னில் உடலுமுயிருங் கூடியிருந்து ஜீவிக்கச்செய்தேயு முயிரையுடலறியா திருந்தாற்போல வெனுவறிக.அசத்தாகிய பாசத்தைச் சத்தாகிய சிவனறிந் தகல வேண்டாவென்றது இந்திரஜாலங் காட்டுமவனை யது பிரமிப்பிக்கமாட்டாதாற்போலப் பாசங்கள் ஜடமானபடியாலே சிவனை மறைக்கமாட்டாதாகையா லவனுக்கிதையறிந் தகல வேண்டாவென்றதெனவறிக. ஆன்மாவை யிருளுமொளியு மல்லாத கண்ணின்றன்மைபோலவென்றது தானாகவறிகிற வனுமல்ல அறிவித்தா லறியாமலிருக்கிறவனுமல்ல வென்றதெனவறிக. சதசத்தென்றது சிவனறிவித்தா லான்மாவறிவனென்றதெனவறிக. இதற்கு. பி - ம். சித்தியாரில் "அறிந்திடு மான்மாவொன்றை யொன்றினாலறிதலானு, மறிந்தவைமறத்தலானு மறிவிக்கவறிதலானு, மறிந்திடுந்தன்னையுந்தா னறியாமையானுந்தானே, யறிந்திடுமறிவனன்று மறிவிக்கவறிவனன்றே." எ - து. கண்டுகொள்க.

இதனாற் சொல்லியது ஆன்மா வறியும்பகுதிக்குரியவனோ வறியாப்பகுதிக் குரியவனோவென்று வினவின மாணக்கனை நோக்கி இவன்றானாகவறிகிறவனுமல்ல சிவனறிவிக்க வறியாமலிருக்கிறவனுமல்ல வொளியோடுகூடிக்கண்டகண் போல வருளோடுங்கூடி யறியுமென்னு முறைமையை யறிவித்தது. (எ)

அப்படியான்மா விருளுமொளியுமல்லாத கண்ணினது தன்மைபோலே யிருக்குமென்ற திருஷ்டாந்தத்தினால் விளக்குக்காட்டக் கண்கண்டதுகொண்டே சிவனறிவுகொடுத்

